# வேர்கள்

கிருஷ்ணமணி



**ஹை பவர் ஸர்ஃப் சலவை:**
**ஒப்பற்ற வெள்ளைவெளேர் சலவை-**
**அது வெட்டவெளிச்சம்.**

தூசி, அழுக்கு, எதனையும் சுவடு
தெரியாமல் அகற்றிவெளுக்கும் அதிக
டிட்டர்ஜென்ட் சக்தி—அதுதான்
ஹை பவர் ஸர்ஃப். படு அழுக்கான
துணிகளுக்கும் பளிச்சிடும்
வெண்மை. கேட்பானேன்,
வேறெந்த சலவைப்
பவுடரையும் விட
ஸர்ஃப் உபயோகிக்கும்
தாய்மார்களே அதிகம்:






**வேறெந்த சலவைப் பவுடரையும் விட ஸர்ஃப் உபயோகிக்கும் தாய்மார்களே அதிகம்.**

இந்துஸ்தான் லிவரின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-SU-225-1710 TM

பார்த்தீங்களா...
வெண்மை பளிச்சிடச்
செய்வதில் இணையற்றது ரானிபால்®



துவைத்த துணிகளை அலசுவதற்குமுன் வாளியிலுள்ள தண்ணீரில் சிறிது
ரானிபால் சேர்த்துவிடுங்கள். பிறகு பாருங்கள்...சலவையின்
வெண்மை—ரானிபால் தரும் வெண்மை பளிச்சிடுவதை! வெண்மையான துணிகள்
எதுவாயிருப்பினும்—பருத்தி, செயற்கை இழை அல்லது கலப்பு இழை.
எதுவாகிலும்—ரானிபால் பளிச்சிட செய்கின்றது!

**தவறாமல் ரானிபால் உபயோகியுங்கள்...வெண்மையைக்
காணுங்கள், காட்டுங்கள்!**







பருத்தித் துணிகளுக்கு
ரானிபால்®
செயற்கை இழை மற்றும்
கலப்பு இழைத் துணிகளுக்கு
ரானிபால்®-எஸ்

Shilpi SG-2A/76 Tam

# லெட்டர் பாக்ஸ்

கவர் ஸ்டோரி படித்தேன். முதலையைப் பற்றி இதுவரை அறிந்திராத பல விவரங்களைத் தெரிந்துகொள்ள முடிந்தது. எனினும், ''இவ்வளவு அபாயகரமான ஒரு பிராணியைப் பாதுகாக்க எதற்காக இவ்வளவு சிரமப்பட வேண்டும்?'' என்ற கேள்விக்குக் கட்டுரையில் விடை இல்லையே?

நெல்லிக்குப்பம். எஸ். பி. பக்கிரி.

'விடியும்வரை காத்திரு' விமரிசனம் அருமை. பாக்யராஜிடம் உள்ள உண்மையான திறமைகளை அழகாகக் குறிப்பிட்டுப் பாராட்டி, அதே நேரம் அவரிடம் உள்ள குரல் அமைப்பு, நட்சத்திரத் தேர்வு, உச்சரிப்பு ஆகிய சிறு குறைகளைத் தெளிவாக வாழைப் பழத்தில் ஊசி ஏற்றுவது போலத் திறமையாகச் சொல்லியிருக்கும் உங்களுக்கு ஒரு சபாஷ்!

மதுரை-1. இரா. சேகரன்.

இதுகாறும் வெளிவந்த இலக்கியத் தொடர் சென்ற வாரத்தோடு முடிவடைந்தது என்பதை அறிந்ததும் மிக மிக வருத்தமே. ஒரு சொல்லை எடுத்து அதற்குப் பல பொருள் கூறி இலக்கியத் தேன் வடித்தார் தலைமை நீதிபதியவர்கள். இப்பகுதி இல்லாமல் இனி வெளிவரும் விகடன், நிலவில்லா வானம்; நீறில்லா நெற்றி. கண்களில் 'நீர்' கோக்கிறது. இது 'முதலைக் கண்ணீர்' அல்ல!

ஒண்டிப்புதூர். சிந்தாமணி ஹக்கீம்.

இலக்கியத் தொடர் வரிசையில் இது வரை தலைமை நீதிபதி இஸ்மாயீல் எழுதி வந்ததைத் தவறாமல் படித்தேன். மிகவும் அபாரம்! அந்த நடையின் சொகுசு ஒருவித லாகிரியை உண்டாக்கியது. படிக்கப் படிக்க அதன் ஓட்டமே தெவிட்டாத ஓர் இன்பத்தைத் தந்தது.

பெருந்துறை. ராசன்கலாமணி

பாலிடார் இசைத்தட்டு நிறுவனம் இதுவரை தமிழில் இசைத்தட்டுகளை வெளியிட்டதில்லை என்ற செய்தி தவறு. அன்புச் சகோதரர்கள், ஆயிரத்தில் ஒருத்தி, மதுரகீதம், தூரத்து இடி முழக்கம், கோடீஸ்வரன் மகள் திரைப் படங்களின் இசைத்தட்டுகளை வெளியிட்டுள்ளது.

பெங்களூர்-5. அ. குமார.

'சீதைக்கு மட்டும்தானா?' கதை, இன்றைய ராமன்களுக்குச் சரியான பாடம். கடைசியில், மனைவி பேசும் வசனம்... கதையில் வரும் கணவனைப் போன்றவர்களைக் குத்திக் கிழித்தெறியும் குத்தீட்டிகள், கூர்வேல்கள்!

பெருங்களத்தூர். எல். ரவிசங்கர்.

பதவிப் பைத்தியம் பிடித்துக் கண்மூடித்தனமாக அரசியல் நடத்திக் கொண்டிருக்கும் மூத்த தலைவர்களுக்கு, தங்களுடைய 'போதும் கட்சிகள்!' தலையங்கம் நல்ல சாட்டையடி. இது போன்ற துணிச்சலான அறிவுரைகள் இன்றைய அவலமான அரசியலுக்கு அவசியம் தேவை.

மூலனூர். சண்முகம்.

* * *

எஸ். பட்டம்மா



அண்மைக் காலத்தில் பல்லாயிரக்கணக்கான வாசகர்களின் நெஞ்சங்களைத் தொட்டு நெகிழ வைத்த பெருமை 'ஜானகி மாமி கோவிலுக்குப் போக மாட்டாள்' சிறுகதைக்கே உரியதாகும். அந்தக் கதையை எழுதிய திருமதி எஸ். பட்டம்மாவின் புகைப் படத்தை இங்கே வெளியிடுவதில் பெருமகிழ்ச்சியடைகிறோம்.

# மணியான நாவலாசிரியர்!

மூன்று தலைமுறையாக வழக்கறிஞர்களாக விளங்கிவரும் குடும்பத்தில், 'வழிதவறி' அரசுப் பணியில் ஈடுபட்டு இலக்கியப் பாதையில் நடைபோடும் கிருஷ்ணமணியின் முழுப் பெயர் மணி சாஸ்திரி. சென்னை முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப் பள்ளியில் படிக்கும்போதே கட்டுரைப் போட்டி, நடிப்புப் போட்டி ஆகியவற்றுக்காக ஆறு ஆண்டுகள் தொடர்ச்சியாகப் பரிசுகள் வாங்கியிருக்கிறார். பள்ளிப் படிப்பின்போதே செம்பருத்தி, பாரிஜாதம் ஆகிய மலர்களைக் குருதட்சிணையாகச் செலுத்தி, ஸ்ரீவத்ஸ சோமதேவ சர்மாவிடம் இவர் கற்றுக் கொண்டது: சம்ஸ்கிருதம்.

எழுத்துப் பணியைவிட இவரது மனத்தைக் கவர்ந்தது நாடகத் துறையே. பண்டைக் காலத்து கிரேக்க நாடகங்களில் துவங்கி, தற்காலத் தமிழ் நாடகம் வரை துருவி ஆராய்ந்து மொத்தம் 42 கட்டுரைகளை 'தாமரை'யில் இவர் எழுதியிருப்பதைப் பெரும் சாதனை என்றே கொள்ளலாம். 1962-ல் 'சமர்ப்பணம்' என்ற தலைப்பில் முதல் மேடை நாடகம். இரண்டாண்டுகளுக்குப் பிறகு சொந்தமாக ஒரு நாடகக் குழு துவங்கி, பல நாடகங்களை வெற்றிகரமாக மேடையேற்றினார்.



கிருஷ்ணமணி

காலஞ்சென்ற எழுத்தாளர் கு. அழகிரிசாமி இவரை எஸ். வி. சகஸ்ரநாமத்துக்கு அறிமுகம் செய்து வைத்ததைத் தொடர்ந்து சேவா ஸ்டேஜுக்காக 'சத்திய தரிசனம்' நாடகத்தை எழுதிக் கொடுத்தார். ''ஜே. பி. பிரீஸ்ட்லியின் நாடகமொன்றைத் தழுவியே அதை எழுதினேன். ஆனால் அந்த உண்மையை ஒவ்வொரு முறை நாடகம் துவங்குவதற்கு முன்பாக அறிவிக்கவும் செய்தேன்....'' என்று கூறும் இவர், சிறுகதை எழுதத் துவங்கியது 1967-ல்தான். முதல் கதையே நட்சத்திரக் கதையாக 'தினமணி கதி'ரில் வெளிவந்தது.

முதல் சிறுகதையைப் போலவே, 'பாரிஜாதங்கள் மலர்கின்றன' என்ற முதல் நாவலும் 'அமுதசுரபி' பத்திரிகை நடத்திய டி.வி.எஸ். நினைவு நாவல் போட்டியில் இவருக்கு முதல் பரிசைப் பெற்றுத் தந்தது.

'வேர்கள்' பிறந்த கதை என்ன?

இவருடைய அலுவலகத்தில் பணிபுரிந்து வந்த ஓர் ஊழியரை மேல் பதவியிலிருந்து கீழ் பதவிக்குத் தள்ளி விட்டார்கள். அவர் கிருஷ்ணமணியிடம் வந்து, ''நீங்கள் இரண்டு மாதம் லீவு போட்டால் நான் அந்த மேல் பதவியிலேயே தொடர்ந்து இருக்கமுடியும்'' என்று கேட்டுக்கொண்டார். நண்பருக்கு உதவி செய்வதற்காக லீவ் போட்டவர், அந்த இரண்டு மாத காலத்திற்குள் 'வேர்கள்' நாவலை எழுதி முடித்தார்! இரண்டு முறை கிட்டத்தட்ட அறுபது பக்கங்களுக்கு எழுதி, திருப்தியடையாமல் கிழித்துப் போட்டுவிட்டு, மூன்றாவது தடவையாக எழுதியதையே போட்டிக்கு அனுப்பி வைத்தார்.

'ஓர் ஆண்டுக்கு ஒரு நாவல்' என்று கணக்கு வைத்துக்கொண்டு எழுதும் கிருஷ்ணமணி, தற்சமயம் திருமணத்தின் புனிதத்தை விளக்கும் நாவல் ஒன்றை எழுதிக் கொண்டிருக்கிறாராம்.

ரூ.20,000 பரிசு பெற்ற சமூக நாவல்




# வேர்கள்

## கிருஷ்ணமணி

## 1

ஜன்னல் ஓரமாக உட்கார்ந்து கொண்டு அவன் வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். தை மாதத்துக் காலையின் சில்லென்ற காற்று உடம்பில் ஒரு புத்துணர்ச்சியை யூட்டுவதாய் இருந்தது. மாடியிலிருந்து கீழே பார்த்தவனுக்கு அந்தக் கிராமத்தின் மேற்குப் பகுதி முழுமையுமே நன்கு தெரிந்தது.

கீழே ஆளோடியில் வீட்டு வேலையாள் முனுசாமி நின்று கொண்டிருந்தான். அப்பா அவனிடம் ஏதோ சொல்லிக் கொண்டிருப்பது கேட்டது. அநேகமாக அறுவடையைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருப்பார் என்று நினைத்தான். அலார கடிகாரம் மணி எட்டு என்பதைக் காட்டியது. தான் அவ்வளவு நேரம் தூங்கியிருக்கிறோம் என்ற எண்ணம் தோன்றியது. மிகவும் சோம்பலாய் இருந்தது. இரவு வெகு நேரம்வரை கண் விழித்துப் படித்ததன் விளைவாக உடலெங்கும் ஓர் அசதி இருப்பது போன்று உணர்ந்தான். மரக் கட்டிலின் மீதிருந்த படுக்கையைச் சுற்றி வைத்தான். அம்மா

தன்னை எழுப்பாமல் இருந்ததன் காரணம் புரியவில்லை. ஒருவேளை அவள் மாடியேறி வரச் சிரமப்பட வேண்டுமென்று வராமலேயே இருந்திருக்கலாம்; அல்லது வந்து எழுப்பியும், தான் அயர்ந்து தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்துப் பேசாமல் போயிருக்கலாம். எதுவானால் என்ன?

மேஜையின் மீது முந்தின இரவு படித்த புத்தகங்களும், எடுத்த குறிப்புகளும் அப்படியே கிடந்தன. ஆயிற்று, இன்னமும் ஒரு மாத காலம்தான். தேர்வு முடிந்துவிடும். அதன் பிறகு முடிவுகள் வெளியாகும்வரை வெறுமனே இருக்க வேண்டியதுதான். இந்தக் கிராமத்தில் பொழுது போவதென்பது சற்றுச் சிரமமான காரியம்தான். பட்டணத்திற்குச் சென்று தங்கி படித்துவிட்டு வந்ததன் விளைவாக, தான் தன் பிறந்த மண்ணுக்கே அந்நியப்பட்டுப் போய்விட்டது போல் தோன்றியது.

அவன் மெல்லக் கீழிறங்கிக் கொல்லைப்புறம் போனான். முனுசாமி அங்கு புதியதாக வாங்கப்பட்டிருந்த பூரணிக் காளையைத் தொழுவத்திலிருந்து அவிழ்த்துக் கொண்டிருந்தான்.

அந்தக் காளையின்முகம், கண்கள்—இவை அசப்பில் மானைப் போன்று இருந்தன. மேடான நெற்றியின் இரு பக்கங்களிலும் புறப்பட்டு, பின்னேக்கி வளைந்திருந்த கொம்புகளின் நுனியில் பித்தளைக் கொப்பு போட்டிருந்தது. கழுத்தில் கட்டப்பட்டிருந்த சலங்கை மணி, அந்தக் காளை தலையை ஆட்டியபோது இனிமையாக ஒலித்தது.

முனுசாமி இவனைப் பார்த்துச் சிரித்தான். காவியேறிய பற்களில் இரண்டைக் காணேம். அவனுக்கு வயது ஐம்பதைத் தாண்டி விட்டது என்று சொல்வார்கள். சிரித்தபோது கண்களின் ஓரத்தில் காக்கையின் பாதம் போன்று கோடுகள் விழத் தொடங்கிவிட்டன என்பது தெரிந்தது. ஆனால், கேசம் இன்னமும் நரைக்கவில்லை. உடலில் தளர்ச்சி தெரியவில்லை.

இவன் பல் தேய்த்துக் கொண்டிருந்தான். முனுசாமிதான் முதலில் பேசினான்:

''சீனிவாசய்யரு வீடு வரைக்கும் போயிட்டு வரணும்னு சொன்னுங்க.



தம்பிக்கு டவுனிலே ஏதானும் வேலை இருக்குதுங்களா?''

'இல்லை'யென்று இவன் தலையாட்டினன். கூடவே மனத்தில் அப்பா எதற்காக சீனிவாசய்யர் வீட்டிற்குப் போகப் போகிருர் என்று கேட்கத் தோன்றியது. முனுசாமிக்குத் தெரியாத விஷயம் கிடையாது. அப்பாவின் அந்தரங்கக் காரியதரிசி அவன்தான். முப்பத்தைந்து வருடப் பழக்கம். பதினைந்து வயதுச் சிறுவனாக இந்த வீட்டுக்கு வேலைக்குச் சேர்ந்தவன் முனுசாமி. தன் கேள்வியை மனத்திலேயே அடக்கிக் கொண்டான்.

முகம் கழுவிக் கொண்டு உள்ளே போனபோது அம்மா இவனுக்காக காபியை ஆற்றிக் கொண்டிருந்தாள்.

''அம்பி வந்துட்டான் மரகதம்!..'' —பாட்டி குரல் கொடுத்தாள். பாட்டி குளித்து விபூதி அணிந்திருந்தாள். வயது எழுபத்தெட்டாகிறது. நல்ல நிறம். கழுத்தில் ஒரு ருத்திராட்ச மாலை தொங்கிக் கொண்டிருந்தது. மழிக்கப்பட்ட தலையில் வெள்ளையாய்க் கேசங்கள் கோரைப் புற்களைப் போன்று ஓரங்குல உயரத்திற்கு வளர்ந்திருந்தன. சற்றுப் பாரியான சரீரம். இளம் வயதில் பாட்டி மிக அழகாக இருப்பாளாம். சுந்தரிப் பாட்டியின் அழகில் மயங்கித்தான் தாத்தா அவளைக் கல்யாணம் செய்து கொண்டாராம். அப்பாவுக்குப் பாட்டியிடத்தில் மிகுந்த மரியாதை. கிராமத்தில் யார் வீட்டில் எது நடந்தாலும், பாட்டியைக் கலந்து ஆலோசிக்காமல் செய்யமாட்டார்கள். பத்து வயதில் திருமணமாகி இந்தக் கிராமத்துக்கு வந்தவள் பாட்டி. அநேகமாக ஊரில் இருந்த எல்லாக் குடும்பங்களின் நல்லது கெட்டதும் பாட்டிக்குத் தெரியும். அந்தக் காலத்து மனுஷியாக இருந்த போதிலும், இந்தக் காலத்தின் நடப்பு உலகத்தின் மாறுதல்களைப் புரிந்துகொண்டு, காலத்திற்கேற்றுப்போன்று அனுசரித்துப் போக வேண்டிய பிரத்யட்ச அணுகுமுறைகளைப் பாட்டி சொல்லுவாள். படிக்காமலேயே மனித இயல்புகளை, மனித மன உணர்வுகளை, அதன் பேதங்களைப் பற்றித் துல்லியமாகப் பாட்டி விளக்குவாள். தாத்தா வெங்கடேசன் வக்கீலாக இருந்தவர். உலக நடப்புக்களைப் பாட்டிக்குச் சொல்லிக் கொடுத்தவர். இயற்கையாகவே தனக்கு அமைந்துவிட்ட நுண்ணறிவின் திறனல் பாட்டி அந்தச் சமுதாயத்தில் மதிப்புடன் விளங்கினள்.





''நானும் அப்போ பிடிச்சு பார்த்துகிட்டுதான் இருக்கேன்... நம்ம டி. வி-யிலே ரெண்டு கப் தெரியுதே...என்ன விஷயம்?''

''ஐயோ!.... ஸாரிங்க.... ஆன் டெனவிலே என் 'ப்ரா'வைக் காயப் போட்டேன்...எ டு க்க மறந்தே போயிட்டேன்!...''



''அம்பி! அப்பா டவுனுக்குப் போரு. உனக்கு ஏதானும் ஜோலியிருந்தா நீயும் புறப்படேன்!''— அம்மா சொன்னள்.

இவன் தலையை இல்லையென்ற பாவனை யில் அசைத்தான்.

பாட்டி உட்கார்ந்திருந்த ஊஞ்சல் கிறீச்சிட்டது.

இவன் பெயரும் வெங்கடேசன்தான். பாட்டனரின் பெயரை யாரும் சொல்லி இவனைக் கூப்பிடுவதில்லை. இவனுடைய தமக்கை ஈஸ்வரி மைசூரில் இருந்தாள். இளையவன் என்றதால் தம்பி என்பது அம்பியாக மருவி அதுவே நிலைத்து விட்டது.

''நேத்து ராத்திரி ஆள் வந்திட்டுப் போனனும். சீனிவாசய்யர் சொல்லி யனுப்பியிருந்தார். வெயிலுக்கு முன்னடி போயிட்டு வந்திடறேன்னு சொன்னன் உங்கப்பா. என்ன அவசரமோ தெரி யல்லே. சீனுவும் இவனும் ஒண்ணப் படிச்சவா. இன்னிக்கு அவன் நிறைய சம்பாதிச்சு சொத்து சேர்த்து வச்சிருக் கான். கொஞ்சம் தடலடிப் பேர்வழி. ஆன பழைய மனுஷாளை மறக்கல்லே. நான் வை கு ண் ட ஏகாதசிக்குப் பெருமாள் கோயிலுக்குப் போனப்பகூட என்னைப் பார்த்திட்டு அவா வீட்டுக்கு அழைச்சிண்டு போனன். கப்பலாட்டமா வீடு. ஒவ்வொரு ரூமுக்கும் ஒவ்வொரு நிறத்திலே— அது என்னமோ சொல் ருளே, சலவைக்கல் மாதிரி — ஆங்.. மொஸைக் போட்டிருக்கான். ரெண்டு லட்சம் செலவழிச்சுக் கட்டினனும். கெட்டிக்காரன். பிழைக்க வழி தெரிஞ்ச வன். என்ன சமாசாரமோ தெரி யல்லே..''

வெங்கடேசன் வியந்தான்.

இத்தனை வயதிலும் பாட்டிக்கு ஊர் விவகாரம் வேண்டியிருக்கிறது.

வாசலில் பூரணிக்காளையின் சலங்கை மணியோசை கேட்கிறது. ரேழியில் அப்பா செருப்புப் போட்டுக் கொள்ளும் ஒலியும் உடன் வருகிறது.

''அம்மா, நான் வரேன்!''—அவர் புறப்பட்டு விட்டார் போலிருக்கிறது.

வெங்கடேசன் கூடத்திலிருந்த சாய்வு நாற்காலியில் அமர்ந்தான். அன்றைய தினசரி கண்ணில் பட்டது. அவனுக்கு அதில் நாட்டம் செல்லவில்லை. தானும் அப்பாவுடன் டவுனுக்குப் போயிருக்க லாமோ என்று தோன்றியது. இப்படித் தன்னுள் எப்பொழுதும் இரண்டுவித எண்ணங்கள் தோன்றுவதேன் என்றும் நினைத்துக் கொண்டான்.

இந்தக் குணம் தன் தந்தையிடமிருந்து தனக்கும் வந்து விட்டது என்றே நினைத்தான்., தாத்தா வக்கீல் உத்தியோ கத்தில் சம்பாதித்து வைத்ததைக் கொஞ்சங் கொஞ்சமாக அப்பா செலவு செய்து விட்டார். வியாபாரம் செய் கிறேன் என்று பல முயற்சிகள் செய்தார். ஆனல் வியாபாரம் செய்வதற்கு வேண்டிய சாதுரியம், கடின உழைப்பு, சுறுசுறுப்பு, கவனம் இவை போது மான அளவில் செலுத்தப்படவில்லை யென்று பலரும் சொல்லிக் கொண்டார் கள். கடைசி கடைசியாக ஆறு ஏக்கர் நன்செய்யும் இரண்டு ஏக்கர் தென்னந் தோப்பும் இந்த வீடும்தான் மிஞ்சி நிற்பது. விளைச்சல் சரியில்லாத ஆண்டு களில் செலவுக்கே சற்றுச் சிரமமான நிலைமைதான்.

தான் ஏன் இப்பொழுது திடீரென்று தன் தகப்பனர் சுந்தரேசனைப் பற்றி நினைத்து, அவரது வாழ்க்கை முறைப் பண்புகளை அலசிப் பார்க்கிறோம் என்று கூடத் தோன்றியது. சட்டம் படிக்கும் தான், தன் பாட்டனரைப் போன்று வழக்கறிஞனக வரவேண்டும்; எப்படி யும், குடும்பத்தின் பொருளாதார நிலையைச் சரிசெய்து, தன் மற்

# கண்ணிமைக்கும் நேரத்திற்குள் மனமகிழ அளிக்கவல்ல பானம்

கவலை
இல்லை,
தொல்லை
இல்லை!

ஒரு ஜக் தண்ணிரில
டிரிங்கா
பாக்கெட்டையும்
சர்க்கரையும
சேர்த்திடுங்கள்.
5 கிளாஸ் டிரிங்கா—
கண்ணிமைப்
பதற்குள்.
ருசிமிக்கது,
நவீனமானது,
சௌகரியமான
விலையிலே!

ஆபீஸிலிருந்து
களைச்சிப்போய்
வர்ரப்ப...
இது என்ன
ஆனந்தமாயிருக்கு!

## ட்ரிங்கா

ஆரஞ்சு,
லெமன்,
பைனப்பிள்
மூனு ருசியுமே
எனக்கு ரொம்ப
புடிக்குது!










விரும்பிடுதே நாகரீக உலகம்—
தந்திடுதே ருசியான இன்பம்!



ரெக்ஸ் தயாரிப்பாளர்களிடமிருந்து.



ரெக்ஸ் தயாரிப்பாளர்களிடமிருந்து.

CASCP-6-182-Tm




''இந்த சின்னக் கப்பல் எங்க ஹான்டிகிராப்ட்ஸ் கிளாஸ்லே ஜூனியர் பாய்ஸ் செஞ்சது சார்.. அது சீனியர் பாய்ஸ் செஞ்சது!''

* * *

உறவினர்களின் நன்மதிப்பைப் பெற வேண்டும் என்று எண்ணினான். பெருங் காயம் வைத்த பாண்டமாகத் தங்களுடைய குடும்பத்தின் பெருமை ஆகி விட்டது. இன்றைய நாட்களில் பணத்திற்குத்தான் மதிப்பு.

இதே வீட்டில் தங்கி, இலவசமாக உணவும், உடையும் பெற்று, படிப்புக்கான உதவியும் பெற்று, கல்வி கற்று வாழ்க்கையில் ஒரு நல்ல நிலையில் இன்று இருப்பவர்களைப் பற்றிச் சுந்தரிப் பாட்டி சொல்லுவாள். அதெல்லாம் பழங்கதை. அவர்களிடம் சென்று அப்பா உதவி கேட்க முடியுமா? மேலும் செலவு செய்து பழக்கப்பட்டுவிட்ட அவரால் சிக்கனத்தைக் கடைப்பிடிக்க முடியவில்லை. இப்பொழுது டவுனுக்கு அவர் ஏன் போயிருக்கிறாரென்று அவனால் யூகிக்க முடிந்தது.

சீனிவாசய்யர் பணக்காரரானதே ஒரு சுவாரஸ்யமான விஷயம். லேவாதேவிக்காரர் ஒருவரிடம் கணக்கராக வேலை பார்த்து வந்த அவர், தன் முதலாளியின் திடீர் மரணத்திற்குப் பின்னர், தானே தனியாக அதே தொழிலைச் செய்ய ஆரம்பித்து விட்டார். முதலில் ஊரார் பலவிதமாகப் பேசிக் கொண்டார்கள். ஆனால் நாளாவட்டத்தில் வட்டி சீனு என்ற பெயரும், சில ஆண்டுகளில் 'பேங்கர் சீனிவாசய்யர்' என்ற அந்தஸ்தும் அவருக்கு வந்துவிட்டது. பணம் எப்படி வந்தது என்று பெரும்பான்மையோர் கவலைப்படுவதில்லை. எவ்வளவு பணத்திற்கு ஒருவன் உடையவனாக இருக்கிறான் என்றே நிதானித்து, மதிப்பளிக்கிறார்கள். முதலாளியின் பங்கில் வசூலித்த தொகையில் ஒரு கணிசமான அளவை சீனு ஸ்வீகரித்துக் கொண்டு விட்டதாகப் பரவலாகப் பேச்சு அடிபட்டது என்னவோ உண்மை.

சீனிவாசன் இன்று டவுனில் மதிப்புக்குரிய ஒரு புள்ளி. வீடும், வயலும், காரும், போனும், பெயரும் பெற்று விளங்குபவர். கோவில் தர்மகர்த்தா. எந்தப் பொதுக் காரியமானாலும் அதற்காக அச்சிடப்பெறும் அறிவிப்புத் தாள்களில் அவர் பெயர் இருக்கும். வீட்டின் முன்புற ஹாலில் எப்பொழுதும் பத்துப் பேர் அவருக்காகக் காத்திருப்பார்கள். தாலூகா கச்சேரியில், கலெக்டர் ஆபீஸில், ஜில்லா கோர்ட்டில் எங்கும் அவருக்குச் செல்வாக்கு இருந்தது. அப்பா ஏன் மீண்டும் மீண்டும் அவரைத் தேடிப் போகவேண்டும்?

''என்னடா அம்பி யோசனை பலமாக இருக்காப்ல இருக்கே?''—பாட்டி அவன் சிந்தனையைக் கலைத்தாள்.

''ஒண்ணுமில்லே பாட்டி..''

''எனக்குத் தெரியும்டா. நீ உங்க தாத்தாவையே கொண்டிருக்கே. அவரும் இப்படித்தான் இருப்பார். மனசில இருக்கிறதை வெளியே சொல்லவே மாட்டார். அழுத்தம்

ஜாஸ்தி. கேட்டா, 'என் கவலை என்னோட இருக்கட்டுமே சுந்தரி'ம்பார். மலையே சரிஞ்சு விழுந்தாலும் நிலைகுலைய மாட்டார். அப்படித்தான் ஒரு சமயம்..''—பாட்டி பழைய நினைவுகளில் சஞ்சரிக்க ஆரம்பித்து விட்டாள். அவளுக்குத் தன்னைக் கொண்டவரைப் பற்றி ஒரு நாளில் ஒரு முறையாவது பேசாமல் இருக்க முடியாது. மனமும், சிந்தனையும் தன் கணவரைப் பற்றியே இந்த வயதிலும் அந்த மூதாட்டியை நினைக்க வைத்தன போலும். அறுபது ஆண்டுக் கால தாம்பத்திய வாழ்க்கையின் பழுப்பேறிப் போன நினைவுச் சுவடிகளைப் புரட்டிப் பார்ப்பதில், அவள் கடந்து போன தன் வாழ்க்கையின் மேடு பள்ளங்களைக் காண முற்படுகிறாள் போலும்.

அவனுக்குப் பாட்டியின் பேச்சைக் கேட்க வேண்டுமென்றுதான் தோன்றியது. ஆனாலும் மனத்தில் இனம் புரியாத ஒரு வேதனை தலைகாட்டியது. காரண காரியம் இல்லாமல் சில சமயங்களில் மனத்தில் சில எண்ணங்கள், சஞ்சலங்கள் ஏற்படுகின்றன. ஏன் அவ்விதம் ஏற்பட வேண்டும்என்று தர்க்கரீதியாகப் பார்க்க முடியவில்லை. நம்முடைய செயல்கள் எல்லாவற்றிற்கும் அடிப்படையாகச் சில காரணங்கள் இருக்கக்கூடும். மனத்தின் எண்ணங்கள் தோன்றவும் அவ்வித



''டாக்டர்! என் அடிவயத்தை வலிக்குது...!''

''எவ்வளவு நாளா...?''

''ஒரு மாசமாவே இந்த வலி இருக்கு...!''

''அப்ப இன்னும் கொஞ்ச நாள்தான் இருந்துட்டுப் போகட்டுமே...!''

சாத்தியக்கூறுகள் இருக்கின்றன. ஆனால் வெளிப்படையாக நமக்கு அது தெரிவதில்லை என்று எண்ணிக் கொண்டான்.

அவன் எழுந்து விட்டான்.

சுந்தரிப் பாட்டி ருத்திராட்ச மணி மாலையொன்றை இடுப்பிலிருந்து எடுத்துக் கொண்டாள். ஊஞ்சலிலிருந்து எழுந்து சென்று கூடத்தின் மேற்குப் புறமிருந்த தூணில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டாள். ராம ஜெபம் செய்ய ஆரம்பித்தாள்.

சில நிமிடங்கள் சென்றிருக்கும். அவள் கையில் இருந்த ருத்திராட்ச மணிமாலை என்ன காரணத்தினாலோ திடீரென்று அறுந்து, அதிலிருந்த மணிகள் சிதறி நாற்புறமும் ஓடின. பாட்டி 'அம்பி!' என்று கூப்பிட்டாள்.

வாயிற்புறம் நின்று கொண்டிருந்த வெங்கடேசன் கூடத்திற்கு விரைந்தான். பாட்டி சத்தமாகக் கூப்பிடவே மாட்டாள். அவள் குரலில் இருந்த பரபரப்பு அவனுக்கு வியப்பையளித்தது.

''என்ன பாட்டி?''

''என்னவோ தெரியல்லேடா அம்பி! மாலை அறுந்து போச்சு. நல்ல செப்புக் கம்பியிலே கோத்த மாலை. ஏதோ விபரீதமா இருக்கே. மணியெல்லாம் சிதறிப் போச்சுடா. எனக்கு மனசை என்னவோ பண்றது. ராம ராம..''—அவள் புலம்பிக் கொண்டிருந்தாள்.

அவனுக்குப் பெரு வியப்பாக இருந்தது. தன் மனத்தில் ஏற்பட்டது போன்று அவளுக்கும் ஏற்பட்டிருக்க வேண்டும். ஏன்? அவன் சிதறிப் போன மணிகளைப் பொறுக்கியெடுத்தான். நூற்றியெட்டு மணிகள் கொண்ட மாலை அது. அதில் ஒன்று மட்டும் அளவில் சற்றுப் பெரியதான செம்பவழம். மணிகளைத் திரட்டியெடுத்துப் பாட்டியிடம் கொடுத்தான்.

''மத்தியானமாத்தான் மரகதத்தைக் கோத்துக் கொடுக்கச் சொல்லணும்''—சொல்லியவாறே மாலையைத் தடவிப் பார்த்தாள். அதில் ஓர் இணைப்பு பிரிந்து உடைந்து போயிருந்தது. ''இதுக்குக் கம்பியும் சேர்த்துக் கோக்கணும்.''

வெங்கடேசன் ஒரு வெற்றுத் தாளையெடுத்தான். பாட்டியின் கையிலிருந்த மணிகளை வாங்கி அதில் போட்டுப் பொட்டணமாக மடித்தான்.

''அந்தப் பெறையிலே வச்சிடு அம்பி!''—சொல்லிவிட்டு மீண்டும் ஊஞ்சல் பலகையின் மீது சென்றமர்ந்தாள்.

# புதிய கோல்கேட் ஃப்ளோரிகார்ட் டூத்பேஸ்ட்

## பல்லுக்கு உறுதி தருவது

NEW Colgate fluoriguard TOOTH PASTE

MFP MFP

**ஃப்ளோரிகார்டில் உள்ள எம்.எஃப்.பி ஃப்ளோரைட் எனாமலுடன் இணைந்து துவாரங்களுக்கும், சிதைவுக்கும் எதிராக உங்கள் பற்களை உறுதிப்படுத்துகிறது.**

தமிழ்நாடு, கேரள மாநிலங்களிலும், கர்நாடகத்தில் குறிப்பிட்ட சில மார்க்கெட்டுகளிலும் இப்போது கிடைக்கும்.



''என்னங்க இது...! ரெண்டு காதும் வெந்து போயிருக்கு...!''

''டெலிபோன் பக்கத்திலே என் சம்சாரம் இஸ்திரி பெட்டியை வெச்சுட்டா... மணி அடிச்சதும் ஞாபக மறதியிலே எடுத்து காதிலே வெச்சிக்கிட்டேன்...!''

''சரி, இன்னொரு காது...?''

''திரும்பவும் டெலிபோன் வந்ததே...!''




பாங்கில் காஷியர் ஒருவர் தனியே அமர்ந்து கணக்குப் போட்டுக் கொண்டிருந்தார்.

அப்போது ஒரு திருடன் கத்தியோடு நுழைந்து, ''ஏய்! மரியாதையா இருக்கிற பணத்தை எடுத்துக் கொடு...!'' என்று மிரட்டினான்.

''தாராளமா தர்றேம்ப்பா.... எனக்கு கணக்கிலே 10 ஆயிர ரூபாய் உதைக்குது... இனி பயமில்லே...!''

* * *

இன்ட்யூஷன், பிரிமானிஷன் என்று ஆங்கிலத்தில் சொல்கிறார்களே, அது போன்று தனக்கும், தன் பாட்டிக்கும் மனத்தில் ஒருவித சஞ்சலம் ஏற்பட்டுப் போனதன் காரணத்தைக் குறித்து அவன் தனக்குள்ளாக எண்ணிக் கொண்டிருந்தபோது சிலர் மிகுந்த பரபரப்புடன் அவனை நோக்கி வந்து கொண்டிருந்ததைப் பார்த்தான்.

என்ன ஏது என்று அவன் கேட்பதற்கு முன்னரே வந்தவர்களில் ஒருவனான தலையாரி கோதண்டம் சொல்ல ஆரம்பித்தான்:

''ஐயா! என்னத்தைச் சொல்வேனுங்க. நம்ம எசமான் போன மாட்டு வண்டிமேல லாரி ஒண்ணு மோதிட்டதுங்க. ஐயாவுக்கும், முனுசாமிக்கும் பலமான காயம். டவுன் ஆசுபத்திரிக்கு எடுத்துப் போயிருக்காங்க. மாட்டுக்குக் கால் ஒடைஞ்சு போயிருச்சி போலிருக்குதுங்க...''

வெங்கடேசன் ஸ்தம்பித்துப் போய் நின்று விட்டான்.

அவனுக்குப் பேச நா எழவில்லை.

வாயிற்புறம் ஆளரவமும், பேச்சுச் சத்தமும் கேட்கவே, மரகதமும் சுந்தரிப் பாட்டியும் விரைந்தனர்.

விஷயம் தெரிந்ததும் பாட்டி ஓவென்று அழ ஆரம்பித்து விட்டாள். மரகதம் திண்ணையின் ஓரமிருந்த தூணைப் பிடித்துக் கொண்டு சிலையாக நின்றாள். அவள் கண்களிலிருந்து பொலபொலவென்று நீர் பெருகிக் கன்னங்களில் வழிந்தது.

''தம்பி, பொறப்படுங்க!'' என்றான் கோதண்டம்.

தன் கால்கள் வலுவிழந்து போனது போலிருந்தது வெங்கடேசனுக்கு. இதற்குள் விஷயமறிந்த பலரும் அவ்வீட்டின் முன் கூடிவிட்டனர்.

பக்கத்து வீட்டு ராமசாமி, வெங்கடேசனைத் தோளைத் தொட்டு உலுப்பினான்: ''வெங்கட்! வா! என் சைக்கிளிலேயே போயிடலாம்!..'' என்றான்.

மறுமொழி பேசாமல் வெங்கடேசன் அவனைப் பின் தொடர்ந்தான். கோதண்டமும், மற்றும் சிலரும் அவர்களைப் பின் தொடர்ந்தனர்.

சுந்தரிப் பாட்டி தெய்வங்களையெல்லாம் கூவி அழைத்துக்கொண்டிருந்தாள். மரகதத்தின் உடம்பு குலுங்கியது. வெங்கடேசனை ஏற்றிக் கொண்டு ராமசாமி வேகமாகப் போய்க் கொண்டிருந்தான்.

(தொடரும்)

"அம்மா!''

இருளில் அவன் குரல் மிதந்து வந்து அவளை எழுப்பியது. உசுப்பி விட்டது போல் எழுந்தவளது விழிகள் அவனிருக்கும் திசையை இருளினூடே துழாவித் தேட முயன்று தோற்றன.

''அம்மா! என்னைப் பாரேன்!''

சட்டென்று அவள் திரும்பினாள். ஒரு விநாடித் திகிலில் இதயத் துடிப்பு நின்று மீண்டும் மிகமிக வேகமாக அடிக்கத் துவங்கியது.

''ஏண்டா, ரவி! தூங்கலியா?''

''இல்லேம்மா! பயமா இருந்தது. விளக்கு திடும்னு அணைஞ்சு போச்சு. நான் உன்கிட்டயே படுத்துக்கறேன் அம்மா! எனக்கு ஒரே பயமா இருக்கு. அப்பா என்கிட்டே வந்து காதிலே பேசறா மாதிரி இருக்கு. அப்பா, சுவாமிகிட்டே போயிட்டார்னு சொன்னியே, எப்படிம்மா அப்பா அங்கேயிருந்து பேசறார்?''

அவள் நெஞ்சில் தீ மூண்டு பொறி பறந்தது. விழிநீர்த் துளிகள் அவன் கழுத்தில் அருவியாய் இறங்கின.

# ஒரு புதிரின் முடிவில்...



அவள் மெதுவாக எழுந்து பூஜை மாடத்துக்குப் பக்கத்தில் துழாவி நெருப்புப் பெட்டியைக் கண்டெடுத்தாள்.

சரக்!

மங்கலான விளக்கொளியில் அவள் நிழல் பூதம் காட்டி அச்சுறுத்தியது.

இந்தச் சிறிய வீட்டின் ஒவ்வோர் அணுவிலும் புலன்களுக்கு எட்டாத ஓர் அமானுஷ்யம் புதைந்து கிடக்கிறது. பகலின் வெளிச்சத்தில் சாதாரணமாகத் தோன்றும் ஒவ்வொரு பகுதியும் இருளின் ஆதிக்கத்தில் உருமாற்றம் கொண்டு, அவளது மனத்தை ஆட்டங் காட்டி அச்சுறுத்துகின்றன.

''அம்மா! என்கிட்ட வந்து படுத்துக்கோயேன்.''

அவனது தலைமுடியை ஆதரவாய் அவள் விரல்கள் கோதின. சட்டென்று அவளருகில் யாரோ படுத்திருப்பது போன்று தோன்றி, தூக்கிவாரிப் போட்டது.

"அந்தக் கண்ணைப் பார்த்தா பயமா இருக்கிறது அப்பா!'' நீண்ட



ரூ. 20,000 பரிசு பெற்ற

சமூக நாவல்

50 பொன் விழா

# வேர்கள்

கிருஷ்ணமணி

## 2

வசந்தம் சிரித்துக் கொண்டிருந்தது.

தோட்டத்தில் செவ்வரளி, பால்ஸம், செம்பருத்தி என விதம்விதமாக இருந்த மலர்ச் செடிகள் பூத்துக் குலுங்கின. காலை நேரத்து இளங்காற்று சுகமாக வீசிச் சென்றது. தவிட்டு நிறக் குருவிகள் ஒன்றையொன்று துரத்திப் பிடித்துப் பறந்து விளையாடிக் கொண்டிருந்தன.

சியாமளி உலவிக் கொண்டிருந்தாள். இளம் வெயிலின் இளஞ்சூடான வெம்மை அந்தப் பின்பனிக் காலத்தின் குளிருக்கு இதமாக இருந்தது. இருபத்திரண்டு வயதில் அப்படியொரு வளர்ச்சி. திகுதிகுவென்ற உடல்வாகு. பருவத்தின் எழில் அவளுடம்பில் பூரணமாகக் குடி கொண்டிருந்தது. அவள் கால்கள்தாம் உலவினவே தவிர. மனம் எதையோ அசைபோட்டுக் கொண்டிருந்தது. நீண்ட முகம். செதுக்கி வைத்த சிற்பம் போன்றிருந்த அந்த முகத்தின் எடுப்புக்கு அவளுடைய மோவாய் ஒரு முக்கிய காரணம். சற்றே சரிந்து நுனியில் ஒரு மாதுளையின் மேற்பகுதி போன்ற தோற்றம், அவள் மிகவும் திடசித்தம் உள்ளவள் என்பதைக் காட்டிற்று.

ஐ.ஏ.எஸ். தேர்வுக்குப் போகிறாள் சியாமளி. கல்லூரியில் படித்த நாட்களில் முதலிடத்தை வேறு எவருக்கும் அவள் விட்டுக்கொடுத்ததே இல்லை. வசதிமிக்க குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் படிப்பில் அவ்வளவு சூட்டிகையாக இருப்பதில்லையென்று சொன்னால் அது அவள் விஷயத்தில் சரியாகாது.

தோட்டக்காரன் மதில் சுவருக்குப் பக்கத்திலிருந்த நீரூற்றுக் குழாயைத் திறந்து, நீண்ட ரப்பர் குழாயை அத்துடன் பிணைத்துச் செடிகளுக்குத் தண்ணீர் ஊற்ற முற்பட்டான்.



''ஆங்! ஐயா சரின்னு சொல்ல ணுமே!''

''எங்கப்பா ஒண்ணும் சொல்ல மாட்டாரு!''

''நான் அவரைச் சொல்லல்லே!''

''பின்னே எந்த ஐயா?''

''நாளைக்கு மாப்பிளையா வரப் போறவரு!''

சியாமளி ஒரு கணம் நின்று விட்டாள். புன்னகைத்தாள்:

''செல்லையா! நான் கல்யாணமே செய்துக்கப் போறதில்லே.''

''அப்பிடியெல்லாம் சொல்லக்கூடா தும்மா. நான் இந்த வீட்டிலே முப்பத் தாறு வருசமா இருக்கேன். ஐயா கல்யா ணம் நடந்த பொறவுதான் எனக்கு நடந் தது. எனக்கும் ரெண்டு மகளுங்க பொறந்து, தங்காம போயிடுச்சுங்க. அவ ளுக்கும் அதுக்குப் பொறவு ஒண்ணுமே பொறக்கல்லே. நீங்க இந்த பங்களாவுக்கு மட்டும் மக இல்லேம்மா. இதுக்குப் பின் னல இருக்கிற அவுட் அவுசு செல்லையா பாக்கியத்தம்மாளுக்கும் மகதான். நீங்க கொளந்தையா இருக்கச் சொல்ல எம்புட்டு தபா என் மீசையைப் பிடிச்சு இளுத்திருப்பீங்க? உங்க பிஞ்சுக் கையால இந்தக் கன்னத்திலே எத்தினி அடி வாங்கி யிருப்பேன்? நான் ரெண்டெழுத்துக்கூட படிக்காத தக்குறிதாம்மா. ஆனா எனக் கும் வாழணும்கிற ஆசை உங்க மொகத் தைப் பாத்துத்தான் இருந்திச்சு. உங்களே வளர்த்த மாதிரி உங்க பிள்ளைங்களேயும் நா வளக்க வேணுமுங்களா தாயே!'' —உணர்ச்சிப்பெருக்கில் அந்த எளியவ னின் இமைக்கோடியில் நீர் பனித்தது.

சியாமளி வியந்து போனாள். தின்ற உப்புக்கு நன்றியும் விசுவாசமும் காட்டக் கூடியவர்களே விரல்விட்டு எண்ணிவிடக் கூடிய இந்த நாட்களிலும், செல்லையா வைப் போன்று பாசமும் பரிவும் கொண் டுள்ள அன்புள்ளங்களும் இருக்கத்தான் செய்கின்றன. அவளுக்கு மேனி சிலிர்த்தது.

அவள் தன் பார்வையை வேறுபுறமாக ஓட்டினாள்.

செல்லையா மதில் சுவர் பக்கமாகச் சென்று மூக்கைச் சிந்தினான்.

''நல்லதுங்க நடக்க வேண்டிய காலத் திலே நடக்கணும். புருசனும் குளந்தை களுமா நீங்க பொலிவோட வாள ணும்மா தாயே! திருவேற்காடு மாரியாத் தாளுக்குப் பொங்கல் வக்கிறேன்னு பாக்கியம் நேர்ந்துகிட்டிருக்கா!''

''எதுக்கு?''

''நீங்க கலேக்கட்ரு பரிச்சை ஜெயிக் கணுமின்னு!''

சியாமளி வாயடைத்துப் போனாள். தன்மீது அந்த வேலைக்காரத் தம்பதிக் கிருந்த அன்பும் கரிசனமும் அவளைப் பிரமிக்க வைத்தன. பங்களாவைப் பார்த்துத் திரும்பினாள்.

தோட்டத்திலிருந்து பார்த்தால் அந்த பங்களா கம்பீரமாகத் தோன்றி யது. சியாமளியின் பாட்டனார் அதை ஆங்கில துரையொருவரிடமிருந்து நாற் பதினாயிரம் ரூபாய்க்கு வாங்கினாராம். ஒண்ணரை ஏக்கர் பரப்புள்ள இடத்தில் மையமாக இருந்தது அது. தற்போதைய அமெரிக்கன் மாடல் அல்ல; ஆங்கில மோஸ்தர் கட்டடம். நல்ல பர்மா தேக்கு மர வேலைப்பாடுகள். ஒவ்வோர் அறை யும் ஒரு ஹால் மாதிரி இருக்கும். கல்யா ணம் நடக்க வேண்டுமென்றால் அதிலேயே நடத்தலாம். பிரதான ஹாலில் சுமார் இருநூறு பேர் அமர்ந்து சாப்பிடலாம். இன்றைய மதிப்புக்குப் பத்து லட்சங் களுக்குமேல் விலை போகும். சுவர்கள் ஒண்ணேகாலடி அளவில் கட்டப் பட்டவை. ஓர் அறையில் பேசுவது மறு அறையில் கேட்காது. சிமெண்ட் தரைதான் என்றாலும், மொஸைக்கின் மழமழப்பு உண்டு. சுவர்களும் மழமழப்பாகத்தானிருந்தன. கோழி முட்டையைத் தேய்த்து அப்படியொரு மழமழப்பு உண்டாக்குவார்களாம். சியாமளியின் தந்தை முத்துசாமி அந்த பங்களாவை நன்கு பராமரித்து வந்தார்.

பின்புறத் தோட்டத்தில் மாமரங் களும், கமுகு, வாழையும் உண்டு. கொய்யா, கொடுக்காப்புளி, நெல்லி, மாதுளை, தென்னை மரங்களும் இருந்தன. அதன் பெயரே 'ஏழாவது சொர்க்கம்' என்ற பொருளில் 'ஸெவன்த் ஹெவன்' என்றுதான் இருந்தது. ஆங்கில துரை கலெக்டராக இருந்தவர். அவர் வைத்த பெயரைச் சியாமளியின் குடும்பத் தினரும் மாற்றவில்லை.

முன்புற ஹாலில் இருந்த டெலிபோன் மணி ஒலித்தது. சற்று நேரத்திற்கெல் லாம் சியாமளியின் அண்ணன் சிவராமன் வராந்தா பக்கம் வந்தான். போர்ட்டி கோவில் கார் நின்று கொண்டிருந்ததால் அவன் வெளியே வரவேண்டியதாயிற்று. கைகளைத் தட்டினான்.

சியாமளி சிந்தனை கலைந்து சத்தம் வந்த திக்கை நோக்கினாள். சிவராமன் அவளுக்கு போன் கால் வந்திருப்பதைச் சமிக்ஞை காட்டினான். காலை நேரத்தில் தனக்கு யார் போன் செய்யக்கூடும் என்று எண்ணியவாறே அவள் விரைந்தாள்.

ரிஸீவரைக் கையிலெடுத்தவளுக்கு மறுபுறம் கேட்ட குரல் வியப்பை




''எதுக்குடா அந்த ஆசாமி டெலிபோன் எக்ஸ்சேஞ்ச் முன்னுலே உண்ணுவிரதம் இருக்கார்?''

''ஐநூத்திநாப்பது ரூபாய்க்கு அவருக்கு டெலிபோன் பில் வந்திருக்காம்....''

''அது அதிகம்னு சொல்றுரா..?''

''இல்லே...! அவர் வீட்டில் டெலிபோனே கிடையாதாம்...!''

— உ. ராஜாஜி

* * *

அளித்தது. ''வித்தியா ஹியர் ஷ்யாம்!''

''ஹலோ!சியாமளிதான் பேசறேன்!''

வித்தியாதரன் எப்பொழுது சென்னைக்கு வந்தான்? அவன் அவளைப் பார்க்க வருகிறுனும். அவளுடன் கல்லூரியில் படித்தவன். கல்லூரி கிரிக்கெட் கிளப்பின் காப்டன். ஆண், பெண் இருபாலரிடமும் பிரசித்தமானவன். உல்லாசப் பேர்வழி. கலகலப்பாகப் பேசுவான். விச்சான உடல்வாகு. இந்தி சினிமா நடிகர் தேவ்ஆனந்தைப் போன்ற கிராப்புத் தலை. அலை பாயும் கண்கள். அவற்றில் குறும்புத்தனமிருக்கும். வித்தியாதரன் ஓரிடத்தில் இருக்கிறுன் என்பதை அங்கே நிலவும் சிரிப்பும் கும்மாளமுமான சூழ்நிலையும் எடுத்துக் காட்டிவிடும்.

''யூ ஆர் மோஸ்ட் வெல்கம். பை... பை...''

அவன் வருவதற்குள் தான் குளித்து விடவேண்டும். ஓயாமல் பேசிக் கொண்டேயிருப்பான். புதிதாக அறிமுகமாகிறவர்களிடம்கூடப் பல காலம் பழகியவனைப் போன்று சகஜமாகப் பேசுவான். எதையுமே எளிதாக எடுத்துக் கொள்ளும் சுபாவம். அவன் தந்தை எண்ணெய் வளமிகுந்த அரபு நாடுகளில் ஒன்றுன அபுதாபியில் இருக்கிறுர். எண்ணெய்க் கிணறுகளை அமைக்கும் தொழில் நிபுணர். நல்ல வருவாய் இருந்தது. பெங்களூரில் மிகவும் வசதியாக அவர்கள் குடும்பம் வசித்து வந்தது. அவனும் அவன் தங்கையும் சென்னையில் படித்து வந்தபோது குடும்பம் இங்குதான் இருந்தது. அது சரி, அவன் ஏன் திடீரென்று சென்னைக்கு வருகிறுன்? சென்னையில் அவனுக்குத் தெரிந்த பல நண்பர்கள் இருக்கும்போது தன் வீட்டில் தங்கியிருக்க அவன் விரும்புவதேன்? அவளுக்குப் புதிராக இருந்தது. அப்பாவோ, அம்மாவோ அவன் வந்து தங்குவதற்கு மறுப்புச் சொல்லமாட்டார்கள். அவனை அவர்கள் ஏற்கெனவே அறிவார்கள். சொல்லப் போனல் அண்ணு சிவராமனுக்குக்கூட வித்தியாதரனை ரொம்பவும் பிடிக்கும்.

அவள் எழுந்திருக்கவும் அவளுடைய தந்தை முத்துசாமி எதிர்ப்பட்டார்.

''அப்பா! வித்தியாதரனை நினைவு இருக்கா?''

சில விநாடி யோசனைக்குப் பிறகு முத்துசாமி கேட்டார்:

''சாயில் எஞ்சினீயர் சபேசனுேட பிள்ளைதானேம்மா?''

''ஆமாம்!''

''என்ன அவனுக்கு? பொழுது போக்கா எம்.ஏ., படிச்சான். அவனேட அப்பா லட்ச லட்சமா சம்பாதிச்சு வச்சிருக்கார். ஒரே பிள்ளை.''—அப்பா வித்தியாதரனின் வாழ்க்கைக் குறிப்பைத் தொட்டுக் காட்டினுர்.

''அவர் இன்னிக்கு இங்கே வரப் போறுராம். இங்கேயே பதினைஞ்சு நாள்

இங்கலாமான்னு கேட்டார்...''—அவள் சற்றுத் தயங்கினுள்.

முத்துசாமி புன்னகைத்தார்: ''தாராளமா தங்கட்டுமேம்மா. இவ்வளவு பெரிய வீட்டிலே சமையக்காரங்க, டிரைவர் எல்லாரையும் சேர்த்துப் பத்துப் பேர்கூட இல்லே. கெஸ்ட் ரூம்லே மாடியிலே வலது பக்கத்து ரூமை அவனுக்குக் கொடுத்திடலாம். உனக்கும் கொஞ்சம் பொழுது போகும்.''

''நான் பரீட்சைக்குப் படிக்கணுமேப்பா!''

''அவனுக்கு இங்கிதம் தெரியாதாம்மா. மேலும், நீ எப்பவுமேவா படிச்சிண்டே இருக்கப் போறே? அவன் என்ன காரியமா வரானும்?''

சில நிமிடங்களில் சிவராமனும், சியாமளியின் தாயார் விசாலமும் சம்பாஷணையில் கலந்து கொண்டனர்.

விசாலம் கேட்டாள்: ''ஆமாம், அவனுக்கு என்ன வேலே?''

''தெரியல்லே!''—சற்றுத் தயங்கினுள் சியாமளி. வித்தியாதரனுக்கு இங்கே நல்ல வரவேற்பு உண்டு என்பது மட்டும் புரிந்துவிட்டது. ஆனல் அவளுக்கு மட்டும் மனத்தை என்னவோ செய்தது. அவன் தன்னிடம் மிகப் பரிச்சயத்துடன் நடந்து கொள்வான். ஒருவேளே தனக்கு இப்பொழுது தேவைப்படும் தனிமை கிடைக்காமல் போய்விடக்கூடும். இனி ஒன்றும் செய்வதற்கில்லே.

அவள் குளிப்பதற்காக உள்ளே போனுள்.

முத்துசாமி சொன்னுர்: ''சபேசன் நிறைய சம்பாதிச்சிருக்கார். அரபு நாடுகளில் எஞ்சினீயர்களுக்கு அமோகமான சம்பளம், போனஸ்கூட உண்டு. மாசம் இருபதினுயிரம் வீட்டுக்கே அனுப்ப முடியும். அவருக்கு ஆறுயிரம் டாலர் சம்பளம். துணிஞ்சு பத்து வருஷத்துக்கு முன்னுடி போனுர். இன்னிக்குக் கொழிக்கிருர்!''

''போறும்! கட்டினவளேயும் குழந்தைகளேயும் விட்டுட்டு விதேசியா போய்ச் சம்பாதிச்சு என்ன புண்ணியம்?''—விசாலம் அலுத்துக் கொண்டாள்.

'''திரை கடலோடியும் திரவியம் தேடு'ன்னு ஔவையே சொல்லியிருக்காளே விசாலம். சம்பாதிக்கிற வயசில சம்பாதிக்காம, பெண்டாட்டி பின்னுடியே சுத்திண்டிருந்தா போறுமா?''

''எதுக்குன்னு சம்பாதிக்கிறது? இளம் வயசில கட்டினவளேத் தனியா விட்டுட்டு, பணம் ஒண்ணே குறின்னு போறதிலே என்ன பிரயோஜனம்? வெங்காயத்தைத் தோலுரிச்சுப் பார்த்தால் கடைசிலே ஒண்ணும் இருக்காதும்பா. அது போல, பாலியத்திலே கொண்டவளோடவும், குழந்தைகளோடவும் சேர்ந்து கஞ்சியோ கூழோ குடிச்சிண்டிருந்தாக்கூட அதுதான் மேன்மையானது. நமக்கு அவர் சம்பாதிச்சிருக்கிறதுதான் தெரியறது. பொம்மனுட்டி, அந்த மாமி பாவம்! எத்தனே ஆசைகளேயும், எதிர்பார்ப்புகளேயும் மனசில போட்டு மூடி வச்சிண்டிருந்தாளோ? இப்போ நாட்டுப்பெண்ணும், மாப்பிள்ளேயும் வர்ற வயசாயிடுத்து. இனிமே எந்த சுகத்தை அனுபவிக்க முடியும்? பாலியம்கிறது ஒரு தடவை வந்திட்டுப் போயிடறதுதானே? கனு கண்டாப்பல சரேல்னு போயிடறது. அதுக்கப்புறம் தான் இருக்கவே இருக்கு, ஏகாதசி, கிருத்திகை, ரிஷிபஞ்சமின்னு. பொம்மனுட்டிகளோட மன உணர்ச்சிகளேப் புருஷா என்னிக்குத்தான் புரிஞ்சிப்பேளோ?'' — விசாலம் பொரிந்து தள்ளினுள்.

முத்துசாமி வாயடைத்துப் போனுர். எந்த வாதத்திற்கும் இரண்டு பக்கங்கள் உண்டு என்பதைப் புரிந்து கொண்டவர் போல் மௌனமானுர். இந்த விசாலம் நறுக்குத் தெறித்தாற்போல் பிரத்தியட்ச உண்மைகளே எவ்வளவு லகுவாகச் சொல்லிவிட்டாள்! பணம் என்பது வாழ்க்கையைச் செம்மையாக வாழ்வதற்குரிய ஒரு சாதனம்தானே யொழிய அதுவே வாழ்க்கையாகி விடாது. வாழ்க்கை என்பது வாழ்ந்து இருக்க வேண்டிய ஒன்று. அதனதன் காலப் பிரிவில் நியதியாக அனுபவிக்கப்பட வேண்டியது.

அவர் புன்னகைத்தார்.

**வா**சலில் டாக்ஸி வந்து நின்றது.

சிவராமன் வராந்தா பக்கமாக வந்து பார்த்தான்.

வித்தியாதரன் சூட்கேஸ் ஒன்றுடன் இறங்கினுன்.

''ஹலோ சிவ்ராம்!'' பெயர்களே அவன் என்றும் மறப்பதில்லே.

கட்டணத்தைக் கொடுத்துவிட்டு

உள்ளே நுழைந்தான்.

''வரணும்!''—முத்துசாமி இன்முகத்துடன் வரவேற்ருர்.

தோளில் மாட்டியிருந்த பையைக் கீழே வைத்தான். சூட்கேஸை டீபாயொன்றின் மீது வைத்தான். ''எல்லாரும் சௌக்கியமா?''

''ம்...நீ போன் பண்ணினதா சியாமளி சொன்னு!''

''ஆமாம். சென்ட்ரல் ஸ்டேஷன்லேருந்து பண்ணினேன். டாக்ஸி டிரைவர் கிட்டே சேத்துப்பட்டு போன்னு சொன்னேன். அவன் மெடிகல் காலேஜ் பக்கமா போயி, ஐலண்ட் கிரவுண்டுக்கா வண்டியைத் திருப்பினுன். எங்கேன்னு கேட்டா, சேத்துப்பட்டுங்கிருன். ஏம்பா! டாக்ஸியிலே தமிழகமெங்கும்னு போட்டிருக்கியே அதனுல பூந்தமல்லி ரோடுக்கு இப்படிப் போறியான்னு கேட்டேன்!''

அங்கே சிரிப்புக் கிளம்பியது.

''சில டிரைவர்கள் ஊருக்குப் புதிய வங்க வந்தால் அப்படித்தான் ஏமாத்துருங்க!'' என்ருன் சிவராமன்.

பையைத் திறந்தான். ஆப்பிள், ஆரஞ்சு என்று எடுத்து வைத்தான்.

''என்னப்பா இதெல்லாம்?''

''அம்மா கொடுத்து அனுப்பிச்சா.''

''உங்கப்பா சௌக்கியமா இருக்காரா?''

''ம்...இப்போ அவர் ஒரு அமெரிக்க எஞ்சினீயரோட சேர்ந்து கன்ஸல்டிங் கம்பெனி ஆரம்பிச்சிருக்காராம். போன மாசம் பெங்களூர் வந்திட்டுப் போனுர். அம்மா கூட வருவேன்னு அடம் பிடிச்சுப் பார்த்தா. ஒண்ணும் முடியல்லே. 'அங்கே வெயில் அதிகம். உன்னுல தாங்க முடியாது'ன்னுட்டார்.''

''எப்போ இந்தியாவுக்கு வரப் போருராம்?''

''தெரியல்லே! என்னையும் அபுதாபிக்குக் கூப்பிட்டார். அம்மாவுக்குத் துளிக்கூடச் சம்மதமில்லே. நான் போகல்லே. நிறைய சம்பாதிச்சாச்சு. அவருக்குத் திருப்தியாகல்லே!'' — அவன் சற்றே நிறுத்தினுன்.

மேலும் தொடர்ந்தான்: ''நான் ஐ. ஏ. எஸ். எழுதப் போறேன். சியாமளி எங்கே காணும்?''

முத்துசாமி சிரித்துவிட்டுச் சொன்ஞர்: ''பருத்தி புடவையா காய்ச்சுதும்பா. அதுபோல நீ சரியான சமயத்துக்குத்தான் வந்திருக்கே. அவளும் அதே பரீட்சை எழுதப்போரு வித்தியாதரா!''

''மை குட்னெஸ்! நிச்சயமா இந்தத் தடவை முதல் ரேங்க் சியாமாவுக்குத் தான்!''

''என்ன அப்படிச் சொல்றே?''

''சாமானியப்பட்டவ இல்லே சார் அவ! ஷீ இஸ் எ ஹ்யூமன் கம்ப்யூட்டர் ப்ளஸ் என்ஸைக்ளோபீடியா!'' என்ருன்.

சிவராமன் பலமாகச் சிரித்தான்.

முன்புற ஹாலில் சிரிப்புச் சத்தம் கேட்கவும், சியாமளி அவசர அவசரமாக, ஷாம்பு போட்டுக் குளித்த தலையைக் கோதி ஆற்றியவாறே வந்தாள்.

''ஹை சியாம்!''

''ஹலோ வித்தியா!''

வித்தியாதரன் அவளையேபார்த்தான். அவளிடத்தில் கடந்த ஏழெட்டு மாதங்களில் மாறுதல் ஏற்பட்டிருப்பதுபோன்று தோன்றியது. அவளும் அவனைப் பார்த்தாள். சென்னையில் இருந்ததைவிட இப்பொழுது அவன் சற்றுச் சதை போட்டு நிறம் கூடியிருப்பதைப் போன்று உணர்ந்தாள்.

''வித்தியாதரனுக்குக் காபி கொண்டு வந்து கொடு!'' என்ருர் முத்துசாமி. விசாலம் உள்ளே போனுள்.

''நான் புறப்படறேன் வித்தியா. இது உங்க வீடு மாதிரிதான். எந்தவிதத் தயக்கமும் வேணும். ப்ளீஸ் பீ அட் ஈஸ்!..''—முத்துசாமி புறப்பட்டார்.

''அப்பா! டிரைவர் எழும்பூர் போனவன் இன்னும் வரல்லே!''

''சரி! நீயே காரை எடுத்திண்டு வாயேன்!''

சிவராமன் தந்தையுடன் புறப்பட்டான்.

தனிமையில் விடப்பட்ட நண்பர்கள் இருவரும் ஒன்றுமே பேசவில்லை. அவளை விழிகளால் விழுங்கி விடுபவனைப் போல் வித்தியாதரன் பார்த்துக் கொண்டேயிருந்தான். தன்னையுமறியாமல் சியாமளி சற்றே நாணத்துடன் பார்வையைத் திருப்பிக் கொண்டாள்.

(தொடரும்)

# ஒவ்வொரு முறையும் நீங்கள் உங்கள் ஸுமீத்தை உபயோகிக்கும்போது சிறிது தவறுதலாகவும் பயன் படுத்தக்கூடுமல்லவா?

## ''ஒவ்வொரு வீட்டுத்தலைவியும் தங்களுடைய ஸுமீத் மிக்ஸரை என்றுமே புதியதுபோல் வைத்துக்கொள்ள 10 சுலபமான குறிப்புகளைத் தருகிறோம்.

எப்போதும் நீங்கள் விரும்பியது ஸுமீத், கடைசியாக இப்போது வாங்கியும் விட்டீர்கள். அது பல வருடங்களுக்கு உங்கள் சமையலறையில் அதிசயமாக இயங்கிவரும் என்று உங்களுக்குத் தெரியும். ஆனால் நினைவிருக்கட்டும், உறுதியான ஸுமீத்தும் தவறாக பயன்படுத்தப்படலாம்.



**1.** ஸ்டெயின்லஸ் ஸ்டீல் ஜாடி சரியாக பொருந்தியுள்ளதா என்று கவனியுங்கள். ஜாடியின் அடிப்பகுதியிலுள்ள பிளாஸ்டிக் பட்டை (லாக்கிங் வெட்ஜ்) அடாப்டரின் உட்புறமுள்ள மூன்று பள்ளங்கள் ஏதேனுமொன்றில் சரியாக பொருந்த வேண்டும்.

**2.** உபயோகிக்கும் முன்னர் ஒவ்வொரு அலகும் (பிளேட்) செய்யும் வேலையைத் தெரிந்து கொள்ளுங்கள். உதாரணமாக உலர்ந்த பொருளை அரைக்கும் அலகு, ஈரப் பொருள்களையும் மிகத் திறமையாக அரைக்கும். ஆனால் ஜாடியின் பாதிவரைதான் பொருளை நிரப்ப வேண்டும்.



**3.** ஒவ்வொரு பொருளையும் குறிப்பிட்டுள்ள அளவுக்குத் தான் மிக்ஸரில் நிரப்ப வேண்டும். அதிகமாக அல்லது குறைவாக நிரப்புவது திறமையை பாதிக்கலாம். சில பொருட்கள் அரைக்க ஆரம்பித்தவுடன் அளவில் குறையும் (கொத்துமல்லி இலைகள் போன்றவை) எனவே தேவையான அளவு வரும்படி நிரப்பவும். மேலும் ஈரப்பொருளகளை அரைக்கும்போது ஆரம்பத்தில் பொருள் புரளுவதற்கு வேண்டிய அளவுக்கு மாத்திரம் சிறிதளவு நீரை விடவும். பிறகு தேவைக்கேற்றபடி அரைக்க நீரை சிறிது சிறிதாக சேர்த்துக் கொண்டேயிருக்கவும்.

**4.** மிக்ஸர் இயங்கிக்கொண்டிருக்கையில் ஜாடியின் மேல் மூடியைத் திறக்கவோ, ஜாடியைத் தூக்கவோ கூடாது.



**5.** மிக்ஸர் இயங்கிக்கொண்டிருக்கும்போது, அதில் ஒரு ஸ்பூனையோ, வேறு ஏதாவது கருவியையோ புகுத்தக் கூடாது. அப்படிச் செய்தால் அலகுகள் சேதமாகிவிடும்.

**6.** உங்கள் ஸுமீத்தை அடுப்புக்கு அருகில் அல்லது நேரடியாக வெயிலில் வைக்காதீர்கள். ஏனெனில், அது இயங்கும்போது மோட்டாரில் அதிக சூடு ஏறிவிடும்.

**7.** உபயோகித்த பின், ஒவ்வொரு முறையும் ஸுமீத்தை நன்கு சுத்தம் செய்ய வேண்டும்.



அது எளிது, ஜாடியில் அரை கோப்பை நீர்விட்டு, அதில் சிறிது மிருதுவான சலவைத் தூள போட்டு, சில விநாடிகள் வரை இயக்கவும். ஒவ்வொரு பாகத்தையும் நீரில் களைந்து எடுத்து, துடைத்து, தனியாக வைக்கவும்.

**8.** மற்ற மிக்ஸரின் உதிரி பாகங்களையோ, மாற்று உறுப்புகளையோ உபயோகிக்காதீர்கள். ஏனெனில், அவை ஸுமீத்துக்குப் பொருந்தும்படி செய்யப்பட்டவை அல்ல. ஆகையால் அவை மோட்டாரையும் கப்ளிங்குகளையும் (இணைப்புகளையும்) சேதமாக்கக் கூடும்.

**9.** மின்சார வோல்டேஜில் ஏற்றத் தாழ்வுகள் இருக்கையில் மிக்ஸரை கடினமான அரைவைக்காகப் பயன்படுத்தக் கூடாது. வோல்டேஜின் தீவிர ஏற்றத்தாழ்வுகளை சமாளிக்கும் வகையில் ஸுமீத் தயாரிக்கப்பட்டிருந்தாலும், மிக்ஸருக்குத் தேவையற்ற அழுத்தத்தைத் தவிர்க்கவும்.

**10.** இயந்திர பாகங்களை முறைகேடாக பழுது பார்ப்பதையோ அல்லது அனுபவமில்லாத மெக்கானிக்கைப் பழுதுபார்க்கச் சொல்வதையோ எப்போதும் தவிர்க்கவும். உங்கள் ஸுமீத்தை பழுது பார்க்க அருகிலுள்ள கீழ் கொடுத்துள்ள 11 ஸுமீத் சர்வீஸ் சென்டர்கள் ஏதேனும் ஒன்றிற்கு எடுத்துச் செல்லவும். ஒவ்வொரு சர்வீஸ் சென்டரிலும் எல்லா உபகரணங்களும் பொருத்தப்பட்டு திறமைசாலிகளால் நிர்வகிக்கப்பட்டு வருகிறது. அவர்கள் உங்கள் ஸுமீத்தின் குறிப்பிட்ட பிரச்னையை சரி செய்வதுடன், அதை உபரியான செலவு ஏதுமின்றி முழுவதுமாக சீர்படுத்துவார்கள். தவிர, வாங்கி இரண்டு ஆண்டுகள் வரை ஸுமீத்துக்கு இலவச சர்வீஸ் பெற உங்களுக்கு உரிமை உண்டு. அந்த உரிமையை பயன்படுத்திக் கொள்ளுங்கள்.



50

பொன் விழா

ரூ. 20,000
பரிசு பெற்ற
சமூக நாவல்

3

# வேர்கள்

வெங்கடேசன் தன் அடுத்த வீட்டுக்காரன் ராமசாமியுடன் டவுனில் இருக்கும் சர்க்கார் ஆஸ்பத்திரிக்குப் போனபோது, டவுன் போலீஸ் ஸ்டேஷன் சப்-இன்ஸ்பெக்டர், கான்ஸ்டபிள், பேங்கர் சீனு இன்னும் சிலரும் அங்கே இருந்ததைப் பார்த்தான்.

பேங்கர் சீனு வெங்கடேசனைப் பார்த்ததும் அவனருகில் வந்து அவனுடைய தோள்களில் தம் வலது கையைப் போட்டு அணைத்தவாறு மெல்ல ஒரு பக்கமாக அழைத்துச் சென்றார். தொண்டையைச் செருமிக் கொண்டு, கீழ்ப் பார்வையாக ஒரு முறை தன்னைச் சுற்றி நோட்டம் விட்டுவிட்டு மெல்லிய குரலில் சொன்னார்:

''ஐ'ம் வெரி ஸாரி வெங்கடேசன். இந்த மாதிரி நடக்கும்னு யார் எதிர்பார்த்தா? சுந்தரேசன் என்னோட படிச்சவன். ம்... அவனுக்கு ஆயுசு இவ்வளவுதான்!''

''ஸார்!.... வந்து அப்பா....'' —வெங்கடேசனின் நா குழறியது.

'ஆமாம்' என்பது போல் அவர் தலையசைத்தார்.

வெங்கடேசனுக்குத் தள்ளாடியது. மேலே எதுவும் பேச முடியாமல் அவனுடைய நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக் கொண்டுவிட்டது. அவன் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது.

''மனசைத் திடப்படுத்திக்கோ. என்ன பண்றது? எல்லாம் ஈசுவர சித்தம். பாடியை போஸ்ட்மார்ட்டம் பண்ணும தரச் சொல்லி ஏற்பாடு பண்ணியிருக்கேன். டாக்டர்கள் மூணு பேரும் எனக்கு ரொம்ப வேண்டியவா. சப்-இன்ஸ்பெக்டர், கான்ஸ்டபிள் வகையறாவிலே இருநூறு ரூவா கொடுத்திருக்கேன். அவங்களும் ரிப்போர்ட் தரணுமே. காரியங்கள் முடியணும். உன்னோட ஸிஸ்டர் மைசூர்லேதானே இருக்கா? அவ வந்து பாடியைத் தகனம் பண்றதுன்னா லேட்டாயிடும். விபத்து நடந்து பிராணன் போயிருக்கு. தந்தி கொடுத்துடலாம். மேற்கொண்டு ஆகவேண்டிய காரியங்களைப் பார்க்கணுமே!''—மிக அமைதியாக, சலனமேதுமின்றி ஒரு வியாபார விஷயத்தைப் பேசுவது போன்று அவர் பேசினார்.

''உன் ஸிஸ்டர் விலாசம் கொடு. நான் தந்தி கொடுக்க ஏற்பாடு பண்றேன்.''

அவனுக்கு யோசிக்கவே இடமளிக்காமல் அவர் பேசிக் கொண்டிருந்தார்.

அவன் இயந்திர கதியில் விலாசத்தைச் சொன்னான். சீனு யாரையோ கூப்பிட்டுப் பத்து ரூபாயும் கொடுத்து,

கிருஷ்ணமணி

விலாசத்துடன் அனுப்பி வைத்தார்.

சிறிது நேரத்தில் ஆஸ்பத்திரி சேவகனொருவன் அவர்களிடம் வந்து சீனுவிடம் ஏதோ கிசுகிசுத்தான். அவர் வெங்கடேசனின் கைகளைப் பற்றி அழைத்துப் போனார்:

''முனுசாமி தப்பிச்சிட்டான். அவனுக்கு மொகத்திலே பலமான சிராய்ப்பு. தோள்பட்டையிலே நல்ல அடி. உசிருக்கு ஆபத்தில்லே. இதெல்லாத்தையும் பார்த்தா என்ன தோண்றது? நம்ம கையிலே எதுவுமே இல்லேப்பா! ஈசுவர சித்தம் அப்படியிருக்கு!..''

அந்த ஆஸ்பத்திரியில் அறுவை சிகிச்சைக்கென இருந்த அறையில் சுந்தரேசனின் சடலம் கிடத்தப்பட்டிருந்தது. முகம் நசுங்கிப் போய் அடையாளமே தெரியவில்லை. வெங்கடேசனுக்கு வயிற்றில் நெருப்பாய்க் கனன்றது. விழிகளிலிருந்து தாரை தாரையாக நீர் பெருகிற்று. அவனால் வாய்விட்டு அழ முடியவில்லை.

''சுந்தரேசனோட ஒரே பிள்ளை. வெங்கடேசன்னு பேரு. லா காலேஜிலே ஃபைனல் இயர் படிக்கிறான். இவன் கையெழுத்துப் போட்டா போறு





மோன்னே டாக்டர்?'' — சீனு கேட்டுக் கொண்டிருந்தார்.

''ஸாரி மிஸ்டர் வெங்கடேசன்!'' — டாக்டர்களில் ஒருவர் கூறினர்.

சில பாரங்களில் கையெழுத்து வாங்கிக் கொண்டார்கள். ஒரு பாரத்தில் அவனுடைய கண்ணீர் சிந்தி மை அழிந்தும் அழியாமலும் இருந்தது. மீண்டும் ஒரு கையெழுத்துப் போட அவன் முனைந்தபோது,

''இட்ஸ் ஆல்ரைட்'' என்றார் அதே டாக்டர்.

சப்-இன்ஸ்பெக்டர் உள்ளே வந்தார். தன்னுடைய டயரியில் குறிப்பு எழுதிக் கொண்டார். போலீஸ் ரிப்போர்ட்டில் டாக்டரிடம் கையெழுத்துப் பெற்றுக்கொண்டார்.

தயாராக இருந்த குதிரை வண்டியில் சடலத்தை எடுத்துக் கொண்டு போனர்கள்.

கிராமம் முழுமையுமே கூடியிருந்தது.

மயானத்தில் தகனம் முடிய மாலை மணி நான்காகி விட்டது. பேங்கர் சீனு பக்கத்திலேயே இருந்து எல்லாக் காரியங்களுக்கும் உதவியாக இருந்தார்.

பலரும் அந்தக் குடும்பத்துக்கு நேர்ந்துவிட்ட அவலநிலையைக் குறித்துப் பேசினர்கள். மயான பூமி, ஒவ்வொரு மனிதனிடத்திலும் உள்ளுணர்வாக உறைந்து கிடக்கும் வாழ்வைப் பற்றிய ஐயப்பாடுகளையும், அதனுடைய நிலையற்ற ஒரு தன்மையைப் பற்றிய உண்மைகளை உணரவும் செய்து விடுகிறது. ஆசைகளும், பாசங்களும் பொருளற்றவையாகப் போய் விடுகின்றன. சுய நலத்துடன் வாழும் எவனும்கூட ஒரு முறை மயான பூமியில் காலூன்றி நிற்கும் போது, தன் போக்கினை மாற்றியமைத்துக் கொள்ள வேண்டுமென்றுதான் எண்ணுவான். ஆனல், மயான பூமியை விட்டு வெளியே வந்ததும் மீண்டும் அன்றாட வாழ்க்கையின் பிரதிபலிப்புகளும், எதிர்பார்ப்புகளும் அவனைச் சூழ்ந்து கொள்ளும் பொழுது வேதாளம் முருங்கை மரம் ஏறின கதையாக உண்மையான தரிசனம் மறந்து போய்விடுகிறது போலும்!






சீனு சொன்னார்: ''பதிமூன்று நாள் காரியங்களும் முடியட்டும். செலவுக்குப் பணம் வேணும்னு வாங்கிக்கோ. இதிலே உனக்குத் தயக்கம் வேண்டாம். சமயம் போதுன்னு சொன்னு உதவி செய்யாட்டி மனுஷத்தன்மைக்கே அர்த்தம் இல்லாம போயிடும்.''

''சரி ஸார்!''

''ஆமாம், உனக்குப் பரீட்சை எப்போ?''

''இன்னும் ஒரு மாசத்திலே ஆரம்பிச்சிடும். அதுக்குப் படிக்கத்தான் லீவு விட்டிருக்கா...''

''த்சொ.... ம்....மனசைத் திடப் படுத்திக்கோ. பரீட்சை எழுதாமல் இருந்திடாதே. இதெல்லாம்தான் வாழ்க்கையிலே சோதனைகள்னு சொல்றது. மனுஷனு இருக்கப் பட்டவன் இதையெல்லாம் மீறி ஜெயிச்சு வாழணும்.''—அவர் இதை மிகப் பரிவுடன் சொன்னது போல் இருந்தது.

சுந்தரிப் பாட்டியும், மரகதம்மாளும் வீட்டின் ஒரு பக்கத்தில் இருந்தனர். கிராமத்துப் பெண்கள் அவர்களுக்கு ஆறுதல் சொல்லும் வகையாகப் பேசிக் கொண்டிருந்தனர். சிலர் தங்களுடைய குடும்பத்தில் இதே போல நடந்து போன நிகழ்ச்சிகளைக் குறித்து நினைத்துக் கொண்டு புலம்பிக் கொண்டிருந்தனர். பிறப்பும் இறப்பும் மனிதர்களை ஒன்று சேர்த்து விடுகின்றன. இயற்கையின் நியதிகளான இச்சம்பவங்களுக்குத்தான் எவ்வளவு பாதிக்கும் தன்மை உள்ளது!

அவர்கள் வீட்டிற்குச் சாப்பாடு மணியக்காரர் வீட்டிலிருந்து வந்தது. ஆனால் யாரும் சாப்பிடும் நிலையிலில்லை. வெங்கடேசனுக்கு எதிலுமே நாட்டமில்லாமல் இருந்தது. சூனியமான ஓர் எதிர்காலம் தன் முன்னர் விரிந்து கிடப்பதைப் போல் உணர்ந்தான். பாட்டியும், அம்மாவும் அழுத கண்ணீரும் வாடிய முகமுமாக இருந்ததைப் பார்க்க அவனுக்கு மனம் மிகவும் சங்கடப்பட்டது.

சீனு சொன்னது போலப் பரீட்சையை எழுதித்தான் தீரவேண்டும். இருபத்துநான்கு வயதிற்குள் தனக்குக் குடும்பப் பொறுப்பை ஏற்கும் வாய்ப்பு ஏற்பட்டு விட்டது. வாழ்க்கையின் ஓட்டத்தில் எதிர்ப்படும் பிரச்னைகளைச் சமாளித்துத் தீரவேண்டிய சூழ்நிலையும் உருவாகியுள்ளது. குடும்பத்தின்

# சென்னைக்கு வந்த வாணியம்பாடி!

**24-5-81** ஞாயிறன்று தமிழ்ச் செய்திக்கு முன் சென்னை டி. வி-யில் ஒரு 'காணவில்லை' அறிவிப்பு. தொடர்பு கொள்ளவேண்டியவரின் பெயருடன் '...வாணியம்பாடி, சென்னை-28' என்று தமிழிலும் ஆங்கிலத்திலும் முகவரி...

வாணியம்பாடி, சென்னை 28-ல் உள்ளதா...! வியப்பின் உச்சிக்கே போய், மறுநாள் தபால்காரரை அணுகி விசாரித்ததில் அவர் சிரித்து விட்டுச் சொன்னது: ''வாணியம்பாடி இல்லீங்க... மந்தவெளியிலே, ஆர். கே. நகர் பக்கத்திலே இருக்கிற ஒரு பகுதிக்குப் பேரு 'வன்னியம் பதி'ங்க... இதைத்தான் 'வாணியம்பாடி'ன்னு டி. வி-காரங்க காட்டியிருக்காங்க...''

அவரும் அந்த அறிவிப்பைப் பார்த்திருப்பார் போலிருக்கிறது!

ஆங்கிலேயர்கள்தான் தமிழ்ப் பெயர்களை உச்சரிக்க முடியாமல் திண்டாடினார்கள் என்றால் சென்னை டி. வி-காரர்களுமா 'வன்னியம் பதி'யை வாணியம்பாடியாக்கி எல்லோரையும் குழப்ப வேண்டும்...?

—இரா. வே.

  

பொருளாதார நிலைமை பற்றி அப்பா ஜீவியவந்தராக இருந்த வரைக்கும், தனக்கு ஒன்றுமே தெரியாது போய் விட்டது. மாதம் தன் செலவுகளுக்காக நானூறு ரூபாய் மணியார்டர் தவறாமல் வந்துவிடும். தான் ஒன்றைக் கேட்டு அதை இல்லையென்று அவர் சொன்னதே யில்லை. தன்னுடைய எதிர்காலம் வளமானதாக இருக்கவேண்டும் என்று அவர் மனக் கற்பனையில் இருந்திருக்க வேண்டும். ஒருவர் நம்முடன் வாழ்ந்து இருக்கும்போது நமக்கு அவர்களுடைய அருமை பெருமைகள் முழுமையாகப் புரிவதில்லை. இட்டு நிரப்ப முடியாத, ஈடுகட்ட முடியாத இந்தப் பேரிழப்பை தான் தாங்கிக் கொள்ளத்தான் வேண்டும். நினைவுகள், உடலின் அயர்ச்சி இவற்றுடன் அவன் கண்ணயர்ந்தான்.

மறு நாள் சஞ்சயனத்தை முடித்து விட்டு அவன் வீடு திரும்பும்போது மனத்தில் பற்பல எண்ணங்கள் தோன்றி மறைந்தன.

ஒரு சிறு பானைக்குள் சிதையினின்றும் பால் தொட்டுப் பொறுக்கியெடுத்த எலும்புத் துண்டங்களைப் போட்ட பொழுது, அவை நடமாடி, பேசி, வாழ்ந்திருந்த ஒரு மனிதரின் கடைசிச் சின்னங்களாக இருந்தது அவனுக்கு ஒரு புறம் துக்கமாகவும், மறுபுறம் மனத்தில் வாழ்க்கையைப் பற்றின பேருண்மைகளை யோசித்துப் பார்க்க ஒரு வாய்ப்பையும் தந்தன. கடைசியில் எஞ்சி நிற்பது எது?

மனிதனுடைய நல்ல காரியங்களும், சமுதாயக் கூட்டு வாழ்க்கையில் அவனுடைய நடத்தையும், சமுதாய ரீதியாக அவனுடைய நற்பங்கும்தான். மாறாக மனிதன் தேடியலைந்த செல்வம், புகழ், பதவி இவையெல்லாமே அர்த்த மற்றுப் போய்விடுகின்றன போலும்! இருப்பினும் பிறப்புக்கும், இறப்புக்கும் இடைப்பட்ட வாழ்க்கையை வாழ்ந்து தீர வேண்டிய ஒரு கட்டாயம் ஏற்பட்டு விடுகிறது. அதை ஒவ்வொரு தனி மனிதனும் எவ்விதம் வாழ்ந்து காட்டுகிறான் என்பதுதான் கேள்வி.

வீடு திரும்பியவுடன் சீனு சொன்னார்: ''மேற்கொண்டு ஆக வேண்டிய காரியங்களுக்குப் பணம் இருக்கா? கூச்சப் படாமல் சொல்லு வெங்கடேசா. எல்லாத்தையும் கணக்குப் பார்த்துப் பிறகு ஸெட்டில் பண்ணிக்கலாம்.''

வெங்கடேசன் யோசித்தான். அம்மாவைக் கேட்டால் அவளுக்கு ஒன்றும்

தெரியாது. அப்பா லௌகிக விஷயங்களை எவரிடமும் பேசினது கிடையாது.

''ஸார்! கொஞ்சம் இருங்கோ. நிலைமை எப்படியிருக்குன்னு எனக்குத் தெரியாது.''

''அவசரமில்லே. நீ சாயந்திரத்துக்குள்ளே ராமசாமி இருக்கானே அவன் மூலம் தகவல் கொடுத்தனுப்பு. நான் பணம் கொடுத்து அனுப்பறேன்.''— சொல்லிவிட்டு அவர் புறப்பட்டு விட்டார்.

வட்டி வியாபாரி என்று அவரைப் பலரும் தூற்றிப் பேசினாலும், சமயத்திற்கு அவர்தான் கை கொடுக்கிறார் என்று அவன் எண்ணினான். மற்ற வியாபாரங்களைப் போலத்தான் லேவாதேவி என்பதும். ஆனாலும் சமுதாயத்தில் மக்கள் அம்மாதிரிப் பேர்வழிகளை ஏன் இகழ்ச்சியாக, ஒரு வெறுப்புடன் பேசுகிறார்கள் என்று யோசித்தான்.

அன்று மதியம் மூன்று மணிக்கு அவனுடைய தமக்கை ஈஸ்வரி, தன் கணவர், இரண்டு குழந்தைகளுடன் பெட்டி சகிதம் வந்து இறங்கினாள். தாயைக் கண்டதும் அவள் சிறிது நேரம் அழுது புலம்பினாள். ஆனால் அன்று மாலைக்குள் அவளுடைய கணவர், வெங்கடேசனைக் கேட்ட கேள்வி அவனை அதிர்ச்சியடையச் செய்தது.

''வெங்கடேசன்! அப்பா போயிட்டார். மனசுக்கு ரொம்பக் கஷ்டமாத்தான் இருக்கு. எனக்குக்கூட இருபத்தாறு வயசில எங்கப்பா போனப்ப ரொம்பக் கஷ்டமாத்தான் இருந்தது. மனசைத் தேத்திக்கோ. இனிமே குடும்பப் பொறுப்பு உன்னோடது. இதிலே உனக்குக் கஷ்டம்னு சொல்லிக்கும்படியா அவர் வச்சிட்டுப் போகலேன்னு நினைக்கிறேன். வருஷத்துக்குச் சாப்பாட்டுக்கு நெல் கிடைச்சிடும். மேலும் செலவுக்கு மிச்சமிருக்கும் நெல் விக்கிற பணமும், தென்னந்தோப்புலே கிடைக்கிற பணமும் இருக்கு. இந்த நேரத்திலே சொல்லக்கூடாதுதான். இருந்தாலும் சொல்லாம இருக்க முடியல்லே. நாங்களும் எனக்கு வர்ற சம்பளத்திலே ஏதோ காலம் தள்ளிண்டு இருக்கோம். அதனால என்ன வரும்படி வரும்னு உத்தேசமா ஒரு கணக்குப் பார்த்து, அதிலே உங்க அக்காவுக்கும் ஏதாவது கொடுக்கிறதுதான் நியாயம்'' என்றார்.

வெங்கடேசன் மறுமொழி பேசவில்லை. பேசுவது அநாகரிகம் என்று அவனுக்குத் தோன்றியது. 'வீட்டு மாப்பிள்ளை, காரியங்களுக்குச் செலவாகப் போகும் பணத்திற்கு என்ன செய்யப் போகிறாய் என்று வாய் வார்த்தையாகக்கூடக் கேட்கவில்லை. மாறாகத் தன் மனைவியின் பங்குக்குண்டான தொகையைக் கேட்கிறார். சே! என்ன மனிதர்கள்' என்று நினைத்துக் கொண்டான்.

டவுனுக்குப் போய்விட்டு வந்த ராமசாமி ஜாடையாக இவனைக் கூப்பிட்டான். இவன் எழுந்து போகவும் ஈஸ்வரியின் கணவர் நாராயணசாமியும் உடன் சென்றார்.

வெங்கடேசனுக்கு அவர் வந்தது பிடிக்கவில்லை. அவரைப் போகச் சொல்லவும் மனம் தடுமாறியது.

ராமசாமியுடன் பேங்கர் சீனுவின் ஆள் ஒருவன் வந்திருந்தான். அவன் சொன்னான்:

''இப்ப இதிலே இரண்டாயிரம் இருக்குதுங்க. நேத்திக்கும் இன்னைக்கும் ஐநூறு ரூபா செலவழிஞ்சுதாம். மொத்தம் இரண்டாயிரத்தைநூறுன்னு ஐயா சொல்லச் சொன்னாருங்க'' என்றான்.

மாப்பிள்ளை நாராயணசாமி துணுக்குற்றாற்போல் கேட்டார்: ''அம்பி! நீ யார்கிட்டே இப்போ கைமாத்து வாங்கறே?''

''பேங்கர் சீனிவாசன்கிட்டேதான்.''

நாராயணசாமி அவ்விடத்தை விட்டு அகன்று சென்றார்.

''புரோநோட்டு ஏதானும் கொடுத்து அனுப்பிச்சாரா?''— வெங்கடேசன் கேட்டான்.

''இல்லீங்க. காரியங்களெல்லாம் முடிஞ்ச பிறகு உங்ககிட்டே பேசிக்கிறேன்னு சொல்லிட்டாருங்க. ஐயா, நான் வரேனுங்க.''

''காபி குடிச்சுட்டுப் போய்யா!''

''பரவாயில்லீங்க. ஜோலியிருக்குதுங்க, நான் வரேன்.''—அந்த ஆள் புறப்பட்டு விட்டான்.

''ராமசாமி! ரொம்ப தாங்க்ஸ்பா! சமயத்திலே நீங்கள்லாம் செய்யற உதவிக்கு...''

''போறுண்டா வெங்கட்! இதென்ன பெரிய உதவி! உங்கப்பா எத்தனையோ பேருக்கு எவ்வளவோ உதவிகள் செய்திருக்கார். உங்க தாத்தாவைப் பத்தியும், அவரோட பரோபகாரச் சிந்தனை

யைப் பத்தியும் பேசாதவா கிடையாது. உங்க குடும்பத்துக்கு ஒண்ணுன்னு சொன்னு உதவி செய்யக் கடமைப் பட்டவா நிறைய பேர் இருக்கோம். உனக்குத் தெரியுமோ தெரியாதோ, எனக்கு எஸ். எல். சி. பரீட்சைக்குப் பணம் கட்டினதே உங்கப்பாதான். அடுத்தவர்களுக்குத் தெரியாம, தகுதியும்தேவையும் உள்ளவர்களுக்கு நிலைமையைப் புரிஞ்சுண்டு உதவி செய்யற நல்ல குணம் உங்க பரம்பரைக்கே உண்டு. அப்பேர்ப்பட்ட நல்லவருக்கு இப்படியொரு துர்மரணம் ஏற்பட்டதே அதிர்ச்சியாத்தான் இருக்கு...'' என்றுன் ராமசாமி.

வெங்கடேசன் பதிலேதும் பேசவில்லை. பெற்றுக் கொண்ட பணத்தையெடுத்துக் கொண்டு வீட்டினுள் நுழைந்தான். நாராயணசாமியும் ஈஸ்வரியும் தமக்குள் ஏதோ பேசிக் கொண்டிருந்தனர். இவனைப் பார்த்ததும் அவர்கள் பேச்சு நின்று விட்டது.

ஈஸ்வரி கேட்டாள்: ''ஏண்டா அம்பி! நம்மவயல்லே அறுவடை ஆகல்லியோ?''

''இன்னும் இல்லே. பத்துப் பதினேஞ்சு நாளாகும்.''

''என்ன போட்டிருக்கு?''

''மூணு ஏக்கர்லே கிச்சிலிசம்பா. மூணு ஏக்கர் ஐ. ஆர். எட்டு.'' அவனுக்கு அவள் எதற்காக இதெல்லாம் கேட்கிருள் என்றிருந்தது.

பந்தம், பாசம் என்பதெல்லாம்கூடப் பழக்கத்தில் வருபவைதானே? இப்பொழுது ஈஸ்வரியைப் பொறுத்த மட்டில் அவள் குடும்பம், அதன் எதிர்காலம், நலன் இவற்றில்தான் நாட்டம் இருக்கும் போலிருக்கிறது. யாரையும் சொல்லிப் பயன் இல்லை. மனிதர்கள் லௌகீக வாழ்க்கையில் தங்களுடைய சுகசௌக்கியத்துக்கே முக்கியத்துவம் கொடுக்கிருர்கள்.

சுந்தரிப் பாட்டி கூப்பிட்டாள். பணத்தை பீரோவில் வைத்துப் பூட்டி விட்டுப் பாட்டியினருகே சென்றுன். பாட்டியின் கண்கள் உப்பிப் போயிருந்தன. தொண்டை கட்டியிருந்தது. குரல் மிகக் கரகரப்பாக, தீனமாக ஒலித்தது: ''அம்பி! காரியங்களுக்கு ஏற்பாடு பண்ணிட்டியா? வாத்தியார் வேம்பு சாஸ்திரிகள் லிஸ்ட் கொடுத்திருக்கார். வைதிகக் காரியங்களை ஒன்று விடாம பண்ணிடணும். ம்... நான் பழமா இருக்கேன். என்னைக் கூட்டிண்டு போகாம அவனைக் கூட்டிண்டு போயிட்டானே தர்மராஜா. ருத்ராட்சமாலை



''என்னடி இது! அதிசயமா இன்னிக்கு கொண்டை போட்டுக்கிட்டு வந்திருக்கே?''

''என் வீட்டுக்காரரோட சண்டை. அதனலே தலை பின்னிவிடாம ஆபீசுக்குப் போயிட்டார்!''

—எம். பூங்கோதை



அறுந்து போகக்சயே மனசில அச்சான்யமா இருந்தது. புருஷனை இழந்து விதவையா ஆனது போருதுன்னு இப்போ வயத்திலே பிறந்த பிள்ளையைப் பறிகொடுத்துட்டு இருக்கேன். உங்கம்மா ஒண்ணுமே சாப்பிடல்லே. ரெண்டு நாளா பட்டப் பட்டினியா இருக்கா. அவகிட்டே போயி சாப்பிடுன்னு சொல்ல எனக்குத் தைரியமில்லேடா. குங்குமத்தை அழிச்சிட்டுப் பூவைக் கழட்டி எறியறதுங்றதும், அதுக்குப் பிறகு....'' பாட்டி அழ ஆரம்பித்து விட்டாள். ''பாவம்! அவ மனசு நேக்குப் புரியறதுடா. எப்படி அவளைச் சமாதானப்படுத்தறது? நீயானும் போய்ச் சொல்லுடா!'' என்றுள்.

அவன் அம்மாவைத் தேடினுன்.

மரகதம் பின்புற அறையொன்றில் சுவரோரமாகப் படுத்துக் கொண்டிருந்தாள். அம்மாவைப் பார்த்ததும் அவனுக்குப் பேசவே தோன்றவில்லை. அவள் தன் மகனைப் பார்த்ததும் மௌனமாகக் கண்ணீர் வடித்தாள். சில நிமிட நேரங்கள் பக்கத்தில் உட்கார்ந்தான். அங்கே மௌனம் நிலவியது. முப்பது ஆண்டு காலம் எவரோடு இணைந்து ஒன்றி எவரின் சுக துக்கங்களில் பங்கேற்று வாழ்ந்தாளோ அவர் இன்று தன்னந்தனியாகத் தன்னை விட்டுப் போய் விட்டது போன்று உணர்ந்தாள். கொண்ட புருஷனே தெய்வம், உலகம் என்ற பரம்பரைப் பண்பில் ஊறி வளர்ந்த அந்த உள்ளத்திற்கு ஆறுதல் யாரே சொல்ல முடியும்? வெங்கடேசன் மௌனமாக வெளியேறினுன்.

(தொடரும்)

# வேர்கள்

**4**

**வி**த்தியாதரன் தனக்கு அந்த வீட்டில் அளிக்கப்பட்ட வரவேற்பையும், சியாமளியின் தந்தை முத்துசாமியின் கனிவான சொற்களையும் நினைத்துப் பார்த்தான். அவனுக்கென்று ஒதுக்கப்பட்டிருந்த விருந்தினர் அறைகளுள் ஒன்ருன மாடி அறையில் எல்லாவிதமான வசதிகளும் இருந்தன. அறை விசாலமாக இருந்தது. அறையுடன் கூடிய டாய்லெட், ஷவருடன் கூடிய குளியலறை. ஸ்டீல் கட்டில்கள் இரண்டிலும் ஃபோம் ரப்பர் மெத்தை போடப்பட்டிருந்தது. அவனுக்குத் தேவை எதுவாயினும் பணியாட்களைக் கூப்பிட மின் பொத்தான் இருந்தது. அறையின் தெற்குப்புறத்தில் பெரிய ஜன்னல் இருந்தது. அங்கிருந்து பார்த்தால் தோட்டம் தெரிந்தது. ஆழ்ந்து படிக்கவும், எழுதவும் நல்லதொரு சூழ்நிலை இருந்தது.

வாழ்க்கையைப் புரிந்து கொண்டு செம்மையாக அதை நடத்திச் செல்லும் திறன் படைத்த ஒரு தலைவனின் ஒழுங்கான ஒரு வாழ்க்கை முறை அங்கே பிரதிபலித்துக் கொண்டிருந்தது. அவரவர்கள் தத்தம் வேலைகளில் ஈடுபட்டிருந்தனர். காலை டிபன், மதிய உணவு, மாலை தேநீர், இரவு உணவு இவைகூட ஆங்கில முறைப்படி குறித்த நேரத்தில் அனைவரும் ஒன்று சேர்ந்தே உண்ணும்படியான ஒரு முறையை அவர்கள் கடைப்பிடித்தனர்.

சகஜமாகப் பல விஷயங்களை அவர்கள் பேசினர்கள். எந்த விதமான டாம்பீகமோ, போலித்தனமோ இல்லாமல் பரம்பரை பரம்பரையாகக் கல்வி கேள்வியில் தேர்ச்சியுற்றும், வசதியான தொரு நிலைக்குப் பழக்கப்பட்டவர்களாகவும் அவர்கள் இருந்தார்கள்.

வித்தியாதரன் தன் தந்தையை, முத்துசாமியுடன் ஒப்பு நோக்கினன். முத்துசாமி லௌகீக வாழ்க்கையில் தேவையான ஈடுபாடு கொண்டிருந்தது போலவே, குடும்பத்தினருடன் சேர்ந்து இருப்பதிலும், அவர்களுடைய தேவைகளை, மனநிலைகளை, பிரச்னைகளைத் தீர்ப்பதிலும்கூட விசேஷமான அக்கறை எடுத்துக் கொண்டார். அவன் வந்து ஒரு வாரத்திற்குள், தினமும் அவனுடைய படிப்பைப் பற்றி அவர் விசாரிக்கத் தவறவே இல்லை.

பணம் சம்பாதிப்பது மட்டுமே வாழ்க்கையல்ல என்பதை அவர் நன்கு புரிந்து கொண்டார். மனித மன உணர்ச்சிகளுக்கு முக்கியத்துவம் தந்தார். தன் தந்தை, குடும்பத்தின் பொருளாதார நிலைமையை வெகுவாக உயர்த்திய போதிலும், ஒரு குடும்பத் தலைவனுக்குரிய கடமைகள் பலவற்றை

கிருஷ்ணமணி

நிறைவேற்றத் தவறி விட்டதுபோல் அவனுக்குத் தோன்றியது. ஒரு தந்தையின் கண்காணிப்பில் வளர வேண்டிய தான், தன்னுடைய பதினான்காவது வயதிலிருந்து தாயின் பராமரிப்பில் வளர்ந்து விட்டது, தந்தையின் அன்புக்காக, அரவணைக்கும் சொற்களுக்காக, வழி காட்டும் தலைமைக்காக ஏங்கியது அவன் மனத்தில் நிழலாடியது.

முத்துசாமியிடம் அவன் ஒரு தந்தையின் பூரண மான பிம்பத்தைக் காண முடிந்தது. வயது வந்த ஒரு பருவப் பெண் இருக்கும் வீட்டில், வாலிபனான தன்னைத் தங்கியிருக்க அனுமதியளித்திருப்பது மட்டு மின்றி, சியாமளியுடன் சகஜமாகப் பழகவும் அனுமதிக்கும் அவர்களுடைய பெருந்தன்மையான மனத்தை அவன் வியந்தான். சியாமளியின் நடத் தையில் அவர்களுக்கிருந்த நம்பிக்கை, தன் மேல் அவர்கள் வைத்திருந்த நம்பிக்கை இவற்றை நினைத்துப் பார்த்தான். மனிதர்களை, அவர் களுடைய போக்கை நிதானிக்கும் ஆற்றலே வாழ்க்கையின் வெற்றிக்கு அடிப்படை போலும்!

சியாமளிதான் எவ்வளவு அழகாக இருக்கிறாள்! இயற்கையான அவளுடைய அழகு, பூசினாற் போன் றிருந்த உடல்வாகு, அளவான உயரம், பொன்னிற மேனி. அழகிய அகன்ற கண்கள். கூந்தலை அவள் பின்னிக் கொண்டு, இடதுபுறமாக அதை முன் பக்கம் எடுத்து விட்டுக்கொண்டு, தலையைச் சற்றே சாய்த்து, ஒரு குழந்தையைப் போல கள்ளங் கபடமில்லாமல் சிரிக்கும்போது, அந்தப் பார்வை யும் சிரிப்பும் தன் மனத்தைக் கவ்வி இழுப்பதை அவன் உணர்ந்தான். தான் அவளைவிட இரண்டு வயது மூத்தவன். தனக்கு அவள்பால் ஈடுபாடு இருப்பது போல் அவளுக்கும் இருக்குமா? அவளு டைய பழக்கத்தில் இதை நிதானிக்க முடியவில்லை. கல்லூரி நாட்களிலேயே அவள் இப்படித்தான் இருந்தாள்.

அவன் கீழே இறங்கிப் போனான். ஹாலில் அவள் மட்டும் இருந்தாள். இவனைப் பார்த்ததும் புன்னகைத்தாள்.

அவளுடன் பேச வேண்டும் என்று அவனுக்கு மனம் படபடத்தது. வேண்டுமென்றே அவளைச் சீண்டிப் பார்க்க விழைந்தவனாக இருந்தான். வித்தியா தரன் சியாமளியைக் கேட்டான்: ''சியாமளி! உனக்கு இருக்கிற வசதிக்கு நீ ஐ. ஏ. எஸ். பரீட்சை பாஸ் செஞ்சி உத்தியோகம் பார்க்கணும்கிற அவசியம் இல்லையே! நல்ல வசதியான புருஷனா உனக்கு அமைஞ்சிட்டா வீட்டுத் தலைவியா இருந்துகிட்டு வாழ முடியாதா?''—இதை ஆங்கி லத்தில் கேட்டான்.

சியாமளி தன் பின்னலை எடுத்து முன்புறமாக விட்டுக் கொண்டாள். மிக இயல்பாகப் புன்னகைத்து விட்டுச் சொன்னாள்: ''வித்யா! உங்களோட கருத்தை நான் ஏத்துக்க முடியாது. என்னுடைய படிப்பும் அறிவும் வீணாகப் போறதைச் சரின்னு சொல்ல முடியுமா? மேலும், என்னுடைய எதிர் காலம் முழுமையும் நான், எனக்குத் துணைவராக



வரப் போறவர் எவ்வளவுதான் வசதியுடையவராக இருந்தாலும் அவரைச் சார்ந்திருக்க விரும்பல்லே. தன்னிறைவு பெற்று இருக்கவே விரும்பறேன். மேலும் என்னுடைய தனி நபர் சுதந்திரத்தை நான் ஒருகாலும் இழக்க விரும்பல்லே!''

''அப்போ உன் கருத்துப்படி வீட்டுத் தலைவியா இருக்கிற பெண்கள் சுதந்திரமா இல்லேங்கிறியா?''

''டோண்ட் ட்விஸ்ட் தி பாயிண்ட்! நான் சொல்ல வந்தது முழுமையா சார்ந்திருக்க விரும்பல்லேங்கிறதுதான். குடும்பத் தலைவியா மட்டும் இருக்கிறவ என்னதான் படிச்சிருந்தாலும், எதுக்கெடுத்தாலும் புருஷனைச் சார்ந்துதானே இருக்க வேண்டியிருக்கு? என்னைப் பொறுத்த வரைக்கும் பெண் என்பவள் ஒரு காம்ப்ளிமெண்டிங் ஃபேக்டர்; ஆணுக்கு எவ்விதத்திலும் தாழ்ந்தவள் இல்லே!''

''ப்ரேவோ!'' — சொல்லிவிட்டு அவன் சிரித்தான்.

''இதிலே கேலி பண்றதுக்கு என்ன இருக்கு?''

''நல்லவேளை, ஆணைவிட பெண் உயர்த்தின்னு சொல்லாம இருந்தியே!''

''யாரும் யாருக்கும் உயர்த்தி இல்லே. சமம்னுதான் சொல்றேன். ஆண்கள் இதை ஒப்புக்க ஏன் தயங்கணும்னுதான் புரியல்லே!''

''பெண்களும் வேலைக்குப் போறதனால குடும்பத்திேனாட ஹார்மனி— சௌஜன்யம்—குறையலாமில்லையா? பலவிதமான ஆடவர்களோட பழக வேண்டிய சூழ்நிலே, நிர்ப்பந்தம் ஏற்பட்டுப் போறது. மேலும், புருஷன்கிறவனைப் பத்திப் பெண்ணுக்கு இருக்க வேண்டிய ஒரு இமேஜ்கூடப் பாதிக்கப் படறது. அவன் லைஃப் பார்ட்னர் என்ற அளவுக்குத்தான் ஒரு முக்கியத்துவம் இருக்கே தவிர, பெண்ணினுடைய மனசில அதையும் மிஞ்சின ஒரு கௌரவம் அவனுக்கு அளிக்கப்படறதா? போன தலைமுறையிலே கணவன் மனைவிங்கிற உறவிலே இருந்த ஒரு பாந்தவ்யம் இப்போ இருக்கா?''

சியாமளி பின்னலை அவிழ்த்துப் பின்னிக் கொண்டிருந்தாள். ஒரு கன்சர்வேடிவ் போன்று பேசும் அவனைத் தன் பெரிய விழிகளால் ஒரு முறை பார்த்தாள். பிறகு சொன்னாள்: ''இந்த ஆணின் தன்னைப் பற்றிய உயர்ந்த கருத்துகூட ஒரு ஈகோதான் வித்யா! புருஷன்கிறவன் தாம்பத்தியத்துக்கு அவசியமாக இருக்கிற ஓர் ஆடவன். ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் உடலுறவினாலே ஏற்படக்கூடிய பாந்தவ்யம், பிணைப்பு, குழந்தைகள் பிறந்த பிறகுதான் வலுவடையறது. பயலாஜிகல் நெஸஸிடியினால்தான் நாம இணைய வேண்டியிருக்கு. இதிலே பெண்ணுக்கு ஆண் எந்தவிதத்திலே உசத்தின்னு எனக்குப் புரியல்லே. கௌரவப் பிரச்னைக்கே இதிலே இடமில்லே. ரெண்டு பேரும் மற்றவங்க கருத்துக்கு மதிப்புக் கொடுத்து அனுசரிச்சிண்டு போறதிலே தான் சௌஜன்யம் ஏற்பட முடியும்.''

''புதுமைப் பெண்!''

''தாங்க்யூ!''

''உனக்குக் கணவனா வரப் போறவன் அதிகப்படியான மரியாதையையோ, சலுகைகளையோ எதிர்பார்க்க முடியாது!''

அவள் இப்போது அவனைத் தீவிரமாகப் பார்த்தாள். `மேற்புறத் தோற்றத்தில் மிகுந்த முற்போக்கான கருத்துக்களை உடையவன் போல இருந்தாலும் வெகு சாதாரண பழைமைவாதியாகத்தான் மனத்தளவில் அவன் இருக்கிறான். பெண் என்பவள் ஆணுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டியவள், அவனுடைய ஆதிக்கத்திற்குட்பட்ட ஓர் இரண்டாம் தர மனிதப் பிறவி என்று எண்ணுபவன் என்பதைப் புரிந்து கொண்டாள்.

''என்ன, பேசவே மாட்டேங்கிறே?''

அவள் சொன்னாள்: ''ஆணுக்குப் பெண் சற்றுக் குறைவுதான்னு தீர்மானமா நீங்க இருக்கீங்க. இது போன தலைமுறையினோட கருத்துன்னு சொல்லி, கடந்து போன காலத்தினோட துணையை எதிர்பார்க்கறீங்க. நம்ம நாட்டிலே அந்நியர்களுடைய ஆட்சியாலே ஏற்பட்ட அவக்கேடுகளிலே இதுவும் ஒண்ணுன்னு நான் நினைக்கிறேன். வீட்டுப் பெண்களுக்கு உரிய மரியாதையையும் அந்தஸ்தையும் தர மறுக்கிற சமுதாயம் முன்னேறவே முடியாது. சம உரிமைங்கற பேரிலே பெண்கள் முறைகேடா நடக்கிறதையும், பண்பு கெட்டு வாழறதையும் நான் ஆதரிக்கல்லே. நம்ம திருமணச் சடங்கின் போதே நுகத்தடியை மணமக்கள் இரண்டு பேர் கழுத்திலேயும் சில விநாடிகள் வச்சு மந்திரம் ஜெபிக்கிறா. அதை





அமெரிக்காவில் கைத் துப்பாக்கியால் கொல்லப் பட்டு வரும் அமெரிக்கர் களின் எண்ணிக்கை ஆண்டுதோறும் அதிக மாகிக் கொண்டு வந்தாலும், அரசாங்கம் கைத் துப்பாக்கியைத் தடை செய்யாமல், சர்க்கரைக்குப் பதிலாகப் பயன்படுத்தப் பட்டு வரும் சாக்ரீனில் உடலுக்குத் தீங்கு விளைவிக்கும் பொருள் உள்ளது என்று உடனேயே அதற்குத் தடை விதித்ததைக் கிண்டல் செய்கிறது இந்த கார்ட்டூன்.

இதை வரைந்துள்ள மைக் பீட்டர்ஸ், 1981-ம் ஆண்டின் சிறந்த கார்ட்டூனுக்கான புலிட்ஸர் பரிசைப் பெற்றவர். (பரிசு பெற்ற கார்ட்டூன் இது அல்ல.)

* * *

வெறும் சடங்காக நாம நினைக்கக்கூடாது. வாழ்க்கைங்கற வண்டியினுடைய ஓட்டத்துக்கு வண்டி மாடுகளைப் போல ஒருங்கிணைந்து செயலாற்றணும்கிறதுதான் அதனுடைய தாத்பர்யம். அந்த மாடுகளிலே எது உயர்த்தி, சொல்லுங்க?''

''உம்...அப்புறம்..?'' அவன் குரலில் இப்போது ஏளனம் இல்லை. அவள் மேலும் பேசினாள்:

''வேத காலத்திலே ரிஷிகள் பெண்களை மிக உயர்வா மதிச்சா. கார்க்கிங்ற ரிஷி பத்னி, பண்டிதர்கள் நிறைந்த ஜனக மகாராஜா சபையிலே வேத விற்பன்னரான யாக்ஞவல்கியரையே இரண்டு கேள்விகள் கேட்டு அவருடைய சரியான பதிலைக் கொண்டு அவருடைய மேதைத் தன்மையை அங்கீகரிச்சா. ஸோ, நீங்க சொல்ற கருத்துக்கு ஆதாரம் அல்லது சமுதாய ரீதியான பக்கபலம் எங்கே இருக்கு?''

''ப்ரேவோ!''

''கன்யாதானம் போய் மாப்பிள்ளைக்குத் தட்சிணை கொடுக்கிற வழக்கமும் சமீப காலத்தியதுதான். இந்த மாதிரியான பிற்போக்கான சோஷல் அனக்ரானிஸம்ஸ்னுலதான் நாம வாழ்க்கையிலே முன்னேற முடியாம தவிச்சிக்கிட்டு இருக்கோம்'' என்றாள். அவள் குரலில் இருந்த உறுதி, பேச்சில் தொனித்த கனிவுடன் கூடிய தெளிவு, பார்வையில் மிதந்த உண்மையின் பொலிவு இவை அவனை ஆட்கொண்டன. பதில் பேச முடியாமல் திணறிப் போனான்.

தோட்டக்காரன் செல்லையா உள்ளே வந்தான்.

''சின்னம்மா! நீங்க சொன்ன மாறுதல்களையெல்லாம் செய்திட்டேன். வந்து பார்க்கறீங்களா?'' என்றான்.

''வித்யா! தோட்டத்துப் பக்கமா போயிட்டு வரலாமா?''

''ம்....''

அவன் அவளைப் பின்தொடர்ந்தான்.

தவிட்டு நிறக் குருவி ஜோடியொன்று நீரூற்றுக் குழாய்க்கு அடியில் தேங்கியிருந்த தண்ணீரில் அலகை அலம்பிக் கொண்டிருந்தது. இரண்டு அணில்கள் ஒன்றையொன்று வேகமாகத் துரத்திப் பிடித்துக் கொண்டிருந்தன. அந்த மாலை நேரம் மனத்திற்கு உல்லாசமளிப்பதாக இருந்தது.

செல்லையா செய்திருந்த மாறுதல்களைச் சியாமளி கவனித்தாள். மனம் திருப்தியடைந்தவளாகச் சொன்னாள்:

''நல்லா இருக்கு செல்லையா.''

அவன் மகிழ்ந்து போனான். வித்தியாதரனை ஏறிட்டு நோக்கினான். நல்ல

உயரம். பார்ப்பதற்குக் கம்பீரமாக இருந்த அவன் தோற்றம் செல்லையாவின் மனத்தில் ஜோடிப் பொருத்தம் பார்க்கத் தூண்டியது. ஒருவருக்கொருவர் மிகப் பொருத்தமாக இருப்பது போல அவனுக்குப்பட்டது.

வித்தியாதரன் சொன்னான்:''ஷ்யாம்! உங்க வீட்டுத் தோட்டம் அழகா இருக்கு. ஏன் ரோஜா வைக்கல்லே?''

''ரோஜா இந்த மண்ணுக்குச் சரியா வரமாட்டேங்குதுங்க.''

சியாமளி சிந்தனை வயப்பட்டவளாய் உலவ ஆரம்பித்தாள். அந்த மாலை நேரத்தில், மரகதப் பச்சைப் புல்வெளியில் தேவலோகத்துப் பெண் என்று கவிஞர்கள் வர்ணிப்பது போலிருந்தது அவள் தோற்றம். வித்தியாதரனின் மனத்தில் இனம் புரியாத கிளர்ச்சி ஏற்பட்டது. அவளை மிகவும் தீவிரமாகப் பார்த்தான்.

அவளுடைய பொலிவு மிகுந்த மேனியைத் தழுவ வேண்டும் போலிருந்தது. மறு கணமே அவன் நிதானித்துக் கொண்டான். அறிவுஜீவியாக இருக்கும் அவள் வெறும் சராசரிப் பெண்ணல்ல என்பதும், அவளிடம் தன் மனத்தில் அவள் ஏற்படுத்திவிட்ட பாதிப்பைப் பற்றிச் சொல்லும்போதுகூடச் சர்வ ஜாக்கிரதையாகப் பேச வேண்டும் என்றும் நினைத்துக் கொண்டான். தன்னை அவள் மதிப்புக் குறைவாக எண்ணிவிட இடமளிக்கக் கூடாது...

''சியாமளி!''

அவள் தன் நடையை நிறுத்தித் திரும்பிப் பார்த்தாள்.

அவனுடைய முகத்தில் தோன்றிய புன்சிரிப்பும், தன்னிடம் அவன் ஏதோ சொல்ல முயற்சிக்கிறான் என்பதும் அவளுக்குப் புரிந்தன.

அவன் அவள் அருகில் சென்றான். தோட்டக்காரன் செல்லையா அவுட் ஹவுஸ் பக்கமாகப் போய்க் கொண்டிருந்தான்.

''சியாமளி!''

''ம்....என்ன வித்தியாதரன்?''

அவள் தன் முழுப் பெயரையும் சொல்லிக் கூப்பிட்டதுகூட அவனுக்குச் சந்தோஷமாக இருந்தது. பேச்சை எப்படி ஆரம்பிப்பது என்று குழம்பினான். கல்லூரி நாட்களில் பல பெண்களிடம் சர்வசாதாரணமாகப் பழகிய தனக்கு இந்தப் பெண்ணிடம் மட்டும் தயக்கம் ஏற்படுவானேன்? தன்னைவிட அவள் உயர்ந்தவள் என்ற எண்ணம் தன்னையுமறியாமல் தன் மனத்தில் ஏற்பட்டுள்ளதோ?

''ஒண்ணுமில்லே!''

அவள் லேசாகச் சிரித்தாள்.

''நீ இன்னிக்குப் பேசினதையெல்லாம் நினைச்சுப் பார்த்தா...''—அவன் தயங்கினான்.

''நினைச்சுப் பார்த்தா....?''

''நீ திருமணத்துக்குப் பிறகு எப்படி இருப்பேன்னு யூகிக்க முடியல்லே!..''

''வேடிக்கையா இருக்கு! சில திட்டவட்டமான கருத்துக்கள் நம்ம ஒவ்வொருத்தருக்குமே இருக்கலாமில்லையா? அதனாலே அனுசரணைக் குறைவா இருக்கணும்னு இல்லையே! என்னுடைய மன உணர்ச்சிகளுக்கு நான் மதிப்புக் கொடுக்கிறேன்; அவ்வளவுதான்....''

அவளைத் தன் உடைமையாக்கிக் கொள்ளவேண்டும் போல் அவனுக்குத் தோன்றியது. அவளுடைய புத்தி தீட்சண்யம், சாதுர்யமான பேச்சு இவை தன்னுடைய அறிவாற்றலைச் சவாலுக்கழைப்பது போல அவனுக்குத் தோன்றியது. தன் மனத்தைத் தைரியப்படுத்திக் கொண்டு சொன்னான்:

''சியாமளி! என்னையுமறியாமல் எனக்கு உன்னிடத்திலே ஒரு கவர்ச்சி ஏற்பட்டுப் போச்சு. ஐ லைக் யூ வெரிமச்!''

''ரியலி....!''

அவள் அப்படிக் கேட்டது கேலியாகவா, இல்லை எந்தப் பொருளில் என்று அவனால் நிதானிக்க முடியவில்லை. ஆயுள் முழுமையும் அழகும், அறிவும், ஆற்றலும் மிகுந்த இவளைப் போன்ற ஒரு பெண் துணை கிடைப்பதென்றால்?....

அவன் அவளை நெருங்கினான்.

அவள் திடுமென ஓரிடத்தில் உட்கார்ந்து விட்டாள்.

அவளுக்கு மிக அருகாமையில் அவனும் அமர்ந்தான்.

''சியாமளி! நான்....''

அவள் யூகித்து விட்டவள் போலப் பார்வையை வேறு புறமாகத் திருப்பிக் கொண்டாள். அவன் மெல்ல மெல்ல அவளுடைய மனத்தில் பெண்மையின் இயற்கையான மனவெழுச்சிகளைக்

# இப்படியும் சிலர்...

தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் குறைந்த விலையில் விற்கும் பவுண்டு நோட்டுகளைச் சிலர் மொத்தமாக வாங்கி, அளவைக் குறைத்து வெட்டி, வேறு அட்டை ஒட்டி அதிக விலைக்கு விற்கிறார்களாம்.

இப்படி விற்கும் இரண்டு மூன்று விற்பனையாளர்களைப் பாடநூல் நிறுவனத்தினரே பிடித்திருக்கிறார்களாம்!

சென்னை அண்ணாசாலை விற்பனைக் கடை திறந்த முதல் நாள் எக்கச்சக்க கூட்டம்! நோட்டுக்கும், புத்தகத்திற்கும் ஆலாய்ப் பறந்தார்கள் மக்கள்.

கூட்டத்தில் ஒரு தொண்டு கிழவர் மாட்டிக் கொண்டு தவித்தார்.

வாலிபர்களாலும், சிறுவர்களாலும் அந்த நெரிசல் தாங்க முடியாத போது கிழவர் தவித்தது பரிதாபமாக இருந்தது.

அங்கு பணியாற்றிக் கொண்டிருந்த விற்பனை அலுவலர் ஒருவர் கிழவரைப் பார்த்தார். கூட்டத்தைத் தள்ளிக் கொண்டு அவர் அருகில் வந்து அவர் கையில் இருந்த சீட்டை வாங்கிக் கொண்டு, ''தாத்தா...! நீங்க சிரமப்படாதீங்க... பேசாம வெளியே போய் மரத்தடியிலே உட்காருங்க. உங்களுக்கு நான் அங்கே புத்தகங்களைக் கொண்டு வந்து தரேன்'' என்று கூறி, அவரைப் பத்திரமாக வெளியே அனுப்பி வைத்தார்.

சும்மா சொல்லக்கூடாது! நல்லவர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள்.

* * *

கிளர்ந்தெழச்செய்து கொண்டிருந்தான். மௌனமே அங்கு நிலவிய போதும், இளம் உள்ளங்கள் இரண்டின் உணர்ச்சி பூர்வமான அணுகல் நிகழ்ந்து கொண்டிருந்தது.

புல் தரையில் ஊன்றியிருந்த அவளுடைய வலது கையின் விரல்களை அவன் மெல்லத் தொட்டான். மெதுவாக அவள் கையைத் தன் கைகளினால் பற்றினான். அவளுக்கு என்னவோ போலிருந்தது. தன் கையை விடுவித்துக் கொள்ளவே மிகவும் விரும்பினாள். ஆனால் அப்படிச் செய்யவில்லை.

நீண்டு மிருதுவாக இருந்த அவள் கை விரல்களை அவன் மெல்ல வருடினான். அவள் காதோரம் காற்றில் அலைபாய்ந்த சுருண்ட கேசத்தைத் தொட்டு ஒதுக்கினான். மிக மெல்லிய குரலில் அவளுடைய கன்னத்தில் உராய்வது போன்ற நெருக்கத்தில் சொன்னான்: ''ஐ லவ் யூ சியாமளி!''

அவளுடைய உதடுகள் படபடத்தன. கண் இமைகள் சில விநாடி நேரம் வண்ணத்துப்பூச்சியொன்றின் இறக்கையைப் போன்று சிறகடித்தன. கடைக்கண்ணால் அவனைப் பார்த்தாள். ஆசையும், அன்பும் பொங்கும் விழிகளால் அவன் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். அவள் பதிலேதும் பேசவில்லை.

''காலேஜ் டேஸ்லேயே நான் உன்னை மிகவும் நேசித்தேன். ஆனால் நீ என்னை விட்டு விலகியே இருந்தே. எத்தனையோ முறை உன்கிட்டே இதைச் சொல்லிடணும்னு நான்துடிச்சிருக்கேன். ப்ளீஸ் சியாமளி! என்னைப் புரிஞ்சிக்கோ. நான் பல பேர்கிட்டே பழகியிருக்கேன்! ஆனா..''—அவன் தடுமாறினான். ''ஆனா உன்னைத்தான் என் மனசில, எண்ணத்திலே எப்பவுமே..'' பேச்சு நின்றது. அவள் கை விரல்களுடன் தன் விரல்களை இணைத்து அவளையே பார்த்தான். நீண்ட மூச்சு ஒன்று அவனிடமிருந்து வெளிப்பட்டது.

சியாமளியின் முகத்தில் செம்மை படர்ந்தது. தன்னால் ஒன்றுமே பேச முடியாது போலிருந்தது அவளுக்கு. சில விநாடிகள் மௌனத்தில் ஊர்ந்தன. அவள் நிலைமையைச் சுதாரித்துக் கொண்டவளாகச் சொன்னாள்: ''வித்யா! பரீட்சை எழுதி பாஸ் பண்ணணும்கிறது தான் இப்போ என்னுடைய ஒரே குறிக்கோள்...!''

மிகுந்த வியப்புடன் அவன் அவளையே பார்த்தான்.

(தொடரும்)

## 75,000 ரூ.
## மதிப்புள்ள பரிசுகள் பெறுவீர் !

# மால்டோவா "Zest for Life"

## கவர்ச்சி மிகு போட்டியில் கலந்து கொள்வீர்!

மொத்தம் 1001 பரிசுகள்

### முதல் பரிசு:

இருவருககு காஷ்மீர் பயணம்
கூடவே ரூ. 10,000 அல்லது
ரூ. 25,000 ரொக்கம்



### 2 இரண்டாம் பரிசுகள்



லியோனார்ட்
ரெப்ரிஜெரேட்டர்
அல்லது
ரூ. 5,000 ரொக்கம்.

### 15 மூன்றாம் பரிசுகள்



எச்எம்வி ஸ்டீரியோ
பாப்புலர்-II அல்லது
ரூ. 1,000 ரொககம்.

### 50 நான்காம் பரிசுகள்



ஹாக்கின்ஸ்
ப்ரெஷர் குக்கர் அல்லது
ரூ. 200 ரொக்கம்

**இப்போதே சேருவீர்!**
முதலில் வந்து சேரும் 10,000
பூர்த்தியான நுழைவுத் தாள்களுக்கு
போனஸ் பரிசு: மால்டோவா மீது
1 ரூ. தள்ளுபடிக் கூப்பன் ஒன்று
+ கவர்ச்சியான ஸ்டிக்கர்

### 933 பரிவுப் பரிசுகள்

மால்டோவா ஜாடி இலவசம்




# மால்டோவா

## ஆரோக்கியம், பலம் மற்றும் சக்திக்கு

**விதிகளும் கட்டுப்பாடுகளும்**

• இந்தப் போட்டியில் இந்தியவாசிகள் அனைவரும் கலந்து கொள்ளலாம். ஆனால் ஜகத்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட், அதன் தொடர்பு கொண்ட கம்பெனிகள், அட்வர்டைஸிங் அண்ட் சேல்ஸ் ப்ரமோஷன் கம்பெனி ஆகியவற்றில் பணியாற்றுவோரும் அவர்கள் குடும்பத்தினரும் கலந்து கொள்ளலாகாது.

• ஒருவர் எத்தனை நுழைவுத் தாள்கள் வேண்டுமாயினும் அனுப்பலாம். ஆயின் ஒவ்வொரு நுழைவுத் தாளுடனும் ஒரு 500 கிராம் மால்டோவா ஜாடியின் லேபில் மற்றும் அதன் உட்புறமுள்ள மெழுகுத்தாள்/தகரத்தகடு அல்லது 500 கிராம் மால்டோவா ரீ:பில் பேககின் முழு மேலட்டைகள் (பேககிலிருந்து ஜாடியில் கொட்டுவது போன்ற வரைபடத்துடன் கூடியது + இதனுடன் ஒட்டப்பட்டுள்ள அட்டை) சேர்த்து அனுப்பவேண்டும்

• நுழைவுத் தாள்கள் முற்றிலும் ஆங்கிலம் அல்லது ஹிந்தி, தமிழ், தெலுங்கு, கன்னடம் மலையாளம் அல்லது பெங்காலி ஆகிய மொழிகளில் எழுதப்படவேண்டும். போட்டியில்

பதின்மூன்று நாள் காரியங்களும் முடிந்து வெங்கடேசன் சென்னைக்குப் புறப்படுவதற்கு முன்னால் பேங்கர் சீனிவாசனைப் பார்க்க டவுனுக்குப் போனான். பேங்கர் தன் நெற்றியிலிருந்த குங்குமப் பொட்டு அழியாத வண்ணம் மேல்துண்டால் முகத்தைத் துடைத்துக் கொண்டே அவனை வரவேற்றார்.

''வா வெங்கடேசா! காரியத்துக்கு நானும் வரணும்னுதான் பார்த்தேன், முடியல்லே. தப்பா நினைக்காதே. சுந்தரேசனும் நானும் ஆறுவது வயசிலேருந்து பழகினோம். நல்லவன்! நாலு பேருக்கு உபகாரம் பண்ணணும்னு, தான் சிரமப்பட்டவன்.''— சொல்லிக் கொண்டே கணக்குப் புத்தகம் ஒன்றை எடுத்து முன்னால் வைத்துக் கொண்டார். அதில் ஒரு பக்கத்தைப் புரட்டினார். 'சுந்தரேசன்' என்று எழுதியிருந்தது.

வெங்கடேசன் பக்கமாகப் புத்தகத்தைத் திருப்பினார். ரெவினியூ ஸ்டாம்புகள் ஒட்டப்பட்டு, சுந்தரேசன் பல கையெழுத்துக்கள் போட்டிருந்தார்.

சீனிவாசன் சொன்னார்: ''அன்டிமாண்டு வாங்காம நான் சில பேருக்குப் பணம் தர்றது வழக்கம். உங்கப்பா அதிலே ஒருத்தன். ரொம்ப வேண்டப்பட்டவா, ஆத்ம சிநேகிதாளுக்கு மட்டும் இந்த நோட்டு. இன்டரெஸ்ட் ரொம்ப நாமினல். நூத்துக்கு ஒண்ணேகால்

# 5

# வேர்கள்

## கிருஷ்ணமணி

தான். செக்யூரிட்டி ஒண்ணும் கிடையாது. நம்பிக்கையின் பேரிலே கொடுத்தது. கணக்கை நீயே பார்த்துக்கோ.'' — அவர் குரலில் நிதானம் இழைந்தோடியது.

பென்சிலால் கூட்டுத் தொகை வட்டியுடன் சேர்த்து போடப் பட்டிருந்தது. கடந்த மூன்றாண்டுகளில் மட்டும் இருபதினாயிரம் வரைக்கும் வாங்கியிருந்தார் சுந்தரேசன் என்று கணக்குக் காட்டியது. அதற்கு முன்னர் சிறிது தொகை. காரியங்களுக்காக வெங்கடேசனே வாங்கியது. எல்லாமாகச் சேர்ந்து இருபத்தேழுக்குக் கொஞ்சம் குறைவாக இருந்தது.

''இது இன்னிக்குத் தேதி வரைக்கும் உண்டான கணக்கு. மூணு வருஷம் மகசூல் சரியில்லே. உனக்கும் மாசா மாசம் பணம் அனுப்பணும். எல்லாமாச் சேர்ந்து இவ்வளவு ஆகிட்டது. என்ன பண்ணலாம் சொல்லு!''

வெங்கடேசனுக்குத் தலையைச் சுற்றுவது போலிருந்தது. குடும்பத்தின் பொருளாதாரம் புரையோடிப் போயிருந்தது தெரிந்தது. எப்படியும் விளைச்சலிலும், தன் சம்பாத்தியத்திலும் கடனைக் கொடுக்கும் நம்பிக்கை வைத்துத்தான் இதை அவர் செய்திருக்க வேண்டும். காலத்தின் விளையாட்டில் அவர் கணக்குத் தவறாகப் போய்விட்டது. இனி கடனை நீடிப்பதில் புண்ணியமில்லை. பேங்கர் சீனிவாசன் கோர்ட்டில் தாவா செய்ய மாட்டார் என்று சொல்ல



முடியாது. அவருடைய வியாபார தர்மம் அது. வேண்டுமாளுல் இரண்டு அல்லது மூன்று மாதம் அவகாசம் கேட்கலாம். வட்டி தான் கூடும். பாட்டியிடம் இதைப் பற்றி எப்படிப் பிரஸ்தாபிப்பது? அம்மாவுக்கு லௌகீகம் தெரியாது. சீக்கிரமே ஒரு முடிவெடுக்க வேண்டும்...

''சரி ஸார்! நான் நாளைக்குச் சொல்றேன்.''

''நீ இன்னிக்கு மெட்ராஸ் போகப் போறதா கேள்விப் பட்டேனே!''

''ஆமாம்! இங்கே படிக்க முடியல்லே. அங்கே எனக்குத் தெரிஞ்சு சிவராமன்னு ஒரு ஃபிரெண்ட் இருக்கான். அவனுேட அப்பா பேருகூட முத்துசாமி. பெரிய வக்கீல்!''

''யாரு, ஜஸ்டிஸ் வெங்கடேஸ்வரன் பிள்ளை முத்துசாமியா? பெரிய கிரிமினல் லாயராச்சே!''



''ஆமாம் ஸார்!''

''அந்த சிவராமன் என்ன பண்றார்?''

''கெமிகல்ஸ் தயாரிக்கிற ஒரு கம்பெனியிலே மேனேஜிங் டைரக்டரா இருக்கான். என்னோட எம்.ஏ., படிச்சான். அவா அப்பா அவனை லா படிக்கச் சொன்னார். அவனுக்கு அதிலே இஷ்டமில்லே. அஞ்சு லட்ச ரூபா அந்த கம்பெனியிலே முதலீடு பண்ணிட்டு, மேனேஜிங் டைரக்டராயிருந்து கவனிச்சுக்கிறான்!''

''நான்கூடப் போயிருக்கேன் அவா வீட்டுக்கு. சேத்துப் பட்டிலே பெரிய மாளிகை. அவருக்குக்கூட ஒரு பெண் இருக்காளே!''

''ம்..நான் அடுத்த வாரம் மெட்ராஸ் போய்க்கிறேன்.''

''ஏன்பா?''

''உங்க விஷயத்தை முடிச்சிடலாம்னு பார்க்கிறேன்!''

''அதுக்கென்ன அவசரம்? நீ பரீட்சை எழுதிட்டு வந்து செட்டில் பண்ணிக்கலாமே!''

''வேண்டாம் ஸார். எனக்கு மனசு நிம்மதியா இருக்காது. இந்த ஒரு வாரம் போனாலும் பரவாயில்லே. ஏற்கெனவே நான் நல்லாத்தான் படிச்சிருக்கேன். கடைசி பத்து நாளிலே ரிவைஸ் பண்ணினா போறும். ஆனா அதுக்கு முன்னாடி என் மனசில பாரம் எதுவுமில்லாம இருக்கணும்.''

''ம்.... நீ உங்க தாத்தாவையே கொண்டிருக்கே. ரொம்ப பிராக்டிகல் பர்ஸன். சுந்தரேசன் அப்படியிருந்ததில்லே. போகட்டும், பணத்துக்கு என்ன செய்யப் போறே?''



''தூக்க மாத்திரை கொடுத்தேனே.. ராத்திரி போட்டுக்கிட்டீங்களா..?''

''நான் போட்டுக்கலே.. என் மனைவிக்குக் கொடுத்துட்டேன்.''

''ஏன்....?''

''அப்பத்தானே நான் நிம்மதியா தூங்க முடியும்!..''



''என்ன செய்யறது? எனக்கு உங்ககிட்ட வாய்தா கேட்கிறதிலே இஷ்டமில்லே. நாலு வருஷமா அசலும் வட்டியுமா அப்படியே இருக்கு. என் பங்குக்கு இருக்கிற நிலத்தை வித்துக் கடனைக் கொடுத்திடலாம்னு இருக்கேன்!''

''நிலத்தை விக்கிறதாவது? வித்துட்டா திரும்ப வாங்க முடியுமா சொல்லு! பரம்பரை பரம்பரையா வர்ற ஆஸ்திப்பா அது. வேணும்னா அதை ஈடுகட்டிப் புரட்டலாமே!''

அவனுக்கு அவருடைய உள் நோக்கம் புரிந்து விட்டது. ஈடுகட்டி யாரிடம் புரட்ட முடியும்? மேலும் அதற்கும் வட்டி கட்ட வேண்டி வரும். தீராத சுமையாக இருக்கும். தீர்மானமாக அவன் சொன்னான்: ''நோ ஸார்! நான் லேண்டை டிஸ்போஸ் பண்ணிடலாம்னு இருக்கேன்!''

''யாருக்கு?''

''அதுக்குண்டான விலையைத் தர்ற வாளுக்கு!''

''எந்த நிலத்தை?''

''ஏரிப் பக்கமா இருக்கிற மூணு ஏக்கரை.''

''முப்போகம் விளையறதாச்சேப்பா அது!''

''என்ன பண்றது?''

''என்ன பிரைஸ் ஆஃபர் பண்றே?''

''லோகல் ரேட் சென்ட் நூற்றிப் பத்து ரூபா.''

''ம்....'' அவர் நெற்றியும் புருவங்களும் சற்றே சுருங்கி விரிந்தன:

''சென்ட் நூறு ரூபான்னு வந்தாக் கூட கொடுத்திடலாம்.''

''எப்படி ஸார் முடியும்? மூணு ஏக்கருக்கு மூவாயிரம் ரூபா குறைஞ்சிடுமே. நான் பரீட்சை எழுதி, ரிஸல்ட் வந்து, சன்னத் வாங்கி ஒருத்தர்கிட்டே ஜூனியரா சேர்ற வரைக்கும் குறைஞ்சது ஆறு மாச காலத்துக்கு அந்த மூவாயிரம் எனக்கு ரொம்ப உதவியா யிருக்கும் ஸார்!''

''அதுவும் சரிதான்!''

''நான் எங்க பாட்டிகிட்டேயும் அம்மாகிட்டேயும் சொல்லிடறேன். இன்னிக்கு வெள்ளி. சனி, ஞாயிறு போனா அடுத்த திங்கள், புதனுக்குள்ளே முடிச்சுடலாம்!''

''பார்ட்டி ரெடியா இருக்காப்பல பேசறியே!''

''இருக்கு ஸார். மணியக்காரர்கிட்டே ஜாடையா விசாரிச்சேன். ரெண்டு மூணு பேர் தயாரா இருக்கான்னு சொன்னார்!''

சீனிவாசன் மௌனமானார். சில விநாடிகள் வெங்கடேசனையே பார்த்தார். எடுத்த முடிவிலிருந்து பின் வாங்காதவன் என்பதை அவன் முகத் தோற்றம் காண்பித்தது. தொண்டையைச் செருமிக் கொண்டார்:

''நீ தப்பா நினைச்சுக்கலேன்னா...''

''சொல்லுங்கோ!''

''நானே அதை வாங்கிக்கறேன். வேத்து மனுஷாகிட்டே போய் நீ அதை விற்பானேன்? நாளைக்கே நீ கை நிறைய சம்பாதிச்சா உனக்கே அதைத் திரும்ப வித்துடறேன்!''

''அது ஹைபொதெடிகல்..இப்போ நடக்க வேண்டியதைப் பார்ப்போம். நான் பாட்டிகிட்டே சொல்றேன். பிரைஸ் நான் சொன்னதுதான். கிச்சிலி சம்பா போட்டிருக்கு. அறுவடையும் முடிஞ்சிடும். அக்காவும் இப்போ இங்கேதான் இருக்கா. அதனால வில்லங்கம் எதுவுமில்லாம கிரயப் பத்திரம் எழுதிடலாம்.''

அவனுடைய தெளிவான, அமைதியான பேச்சு அவரை அயரடித்தது.



''பங்களா எப்படியிருக்கு பார்த்தீங்களா..? இவ்வளவு குறைவான தொகைக்கு இவ்வளவு பெரிய பங்களா கிடைக்கவே கிடைக்காது.. ஒண்ணும் பயப்படாதீங்க..ராத்திரி உங்களுக்குத் துணையா, உள்ளே ரெண்டு வௌவால் சுத்தும்..ஆந்தையும் கோட்டானும் அலறிக்கிட்டே இருக்கும்..!''

ஞ

வாழ்க்கையில் நிச்சயம் இவன் முன்னுக்கு வருவான் என்று அவர் மனம் சொல்லியது.

**பா**ட்டியிடம் வெங்கடேசன் விஷயத்தைச் சொல்லி விளக்கும்போது மாப்பிள்ளை நாராயணசாமியும், அவனுடைய தமக்கை ஈஸ்வரியும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். நாராயணசாமி கேட்டார்: ''அம்பி! தப்பா நெனைச்சுக் காதே. பெண்ணுக்குன்னு பங்கு உண்டோல்லியோ? நீ நிலத்தை விக்கிறதுக்கு முன்னாடி அவ பங்கைக் கொடுத்திடறது நல்லதில்லையா?''

''வாஸ்தவம்தான் ஸார். யார் இல்லேங்கிறா? அப்பா பட்ட கடனைத் தீர்த்துட்டு, மிச்சம் இருக்கிறதிலே அவ பங்கைத் தந்திடறேன்.''

''உங்கப்பா கடன் பட்டது உன் படிப்புக்குன்னுதானே அம்பி!''

இதைக் கேட்டதும் சுந்தரிப் பாட்டி வெகுண்டாள்:

''மாப்பிளே! நீங்க பேசறது ரொம்ப நன்னாருக்கு. அவன் சிறு குழந்தை. ஏதோ தோப்பனார் பட்ட கடனைக் கொடுக்கணும்னு நினைக்கிறான். நீங்க பாகப் பிரிவினை பேசறேளே! இந்தக் கெழத்துக்கும், இவனைப் பெத்தவளுக்கும் சம்பாத்தியம் இல்லாம எப்படிச் சோறு போடுவான்? இல்லே, நாங்க ரெண்டு பேரும் மைசூருக்கு வர முடியுமா? கொஞ்சம் யோசனை பண்ணுங்கோ'' என்றாள்.

''நான் நியாயத்தைச் சொன்னேன்'' என்றார் நாராயணசாமி.

''எது நியாயம்? அம்பது சவரன் நகையும், வைரத் தோடும், எட்டுக்கல் பேஸரியும் போட்டு, நாலு கிலோ வெள்ளிப் பாத்திரம், எதிர்ஜாமீன் ஏழாயிரத்தைந்நூறு கொடுத்து, கல்யாணத்துக்குன்னு ரொக்கமா பதினஞ்சாயிரம் செலவழிச்சு, ரெண்டு பிரசவம் பார்த்து, நாள் கிழமை ஒன்று விடாம சீர் செஞ்சிருக்கு ஈஸ்வரிக்கு. இதெல்லாம் கணக்குக் கிடையாதா? குழந்தை அவன் படிச்சாத்தான் பிழைக்க முடியும்கிற நிலைமையிலே இருக்கான். அவனைப் படிக்க வச்சதுக்குச் செலவுங்கறேளே? அவா தாத்தா இருந்த இருப்புக்கு ராஜா வாட்டமா வளர வேண்டிய பிள்ளை...''

பாட்டிக்குக் கண்களில் நீர் பொல பொலவென்று வந்து விட்டது. பேச முடியாமல் திணறினாள். கடைசியாகப் புலம்பலினூடே சொன்னாள்: ''கலி முத்திப் போச்சு. உறவு பாசமெல்லாம் கூட பணத்துக்கு முன்னால தூசியா போயிட்டது....''

மாப்பிள்ளை நாராயணசாமிக்குப் பேச நா எழவில்லை. ஈஸ்வரிக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை. பாட்டி சொன்னதிலுள்ள நியாயம் அவள் மனத்தைத் தொட்டது போலும்!

''ஈஸ்வரி! நாம ஊருக்குப் புறப்படலாம்'' என்றார் நாராயணசாமி.

வெங்கடேசனுக்கு மிகவும் வெறுப்பாக இருந்தது. மீதமிருக்கப் போகும் மூன்று ஏக்கரில் விளைவதை வைத்துக் கொண்டுதான் குடும்பம் நடக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டிருந்தது. தோப்பில் ஆண்டிற்கு ஆயிரம் ரூபாய் வருவதுகூடச் சிரமமாய் இருந்தது. பல மரங்கள் காய்க்காமலிருந்தன. காய்கள் அடிக்கடி திருட்டுப் போயின. அதுவும் தோட்டக்காரன் சம்பளமும் போக, வருடத்திற்கும் வீட்டிற்கு வேண்டிய தேங்காயெண்ணெய் கிடைப்பதே அரிதாயிருந்தது. விற்பனைப் பத்திரத்தில் சொத்தில் பாத்தியதை



''ஆபீஸ் பியூன் கிட்டே சண்டை போட்டது தப்பா போச்சு..''

''ஏன்? என்ன ஆச்சு?''

''எனக்கு இந்த மாசம் இன்கிரிமெண்ட் கொடுத்ததை வீட்டிலே வந்து சொல்லிட்டான்!''



யுடையவளான ஈஸ்வரி கையெழுத்துப் போட வேண்டிய அவசியம் இருந்தது. இப்பொழுது அவள் ஊருக்குப் போய் விட்டால் தன்னுடைய திட்டம் தகர்ந்து விடும் போல் தோன்றியது. அவன் சொன்னான்:

''அத்திம்பேர்! நீங்க கோபமா இருக்காப்பல இருக்கு. பாட்டி உணர்ச்சிவசப் பட்டுப் பேசிட்டா. இப்போ நிலத்தை வித்துக் கடனே அடைக்கல்லேன்னு, வட்டி ஏறிடும். வித்துக் கடன் போக, மிச்சம் மூவாயிரம் இருக்கும். அதிலே ஆயிரம் ரூபா உடனடியா தரேன். தோப்பையும் வித்துடலாம், நல்ல விலைக்கு வந்தால். ஆனு எனக்குச் சம்பாத்தியம்னு கிடைக்கிற வரைக்கும் நான் பாட்டியையும், அம்மாவையும் மெட்ராஸுக்கு அழைச்சிண்டு போக முடியாது. எங்க மூணு பேருக்கும் சாப்பாட்டுக்கு வேற வழி இல்லே. இது தான் நிலைமை. உங்க இஷ்டம் எப்படியோ அப்படிச் செய்யுங்கோ!''

ஈஸ்வரிக்குக் கண்களில் நீர் பனித்தது. தம்பியின், தன் பிறந்தகத்தின் நிலைமை அவளுக்குப் புரிந்தது. தன் கணவன் அப்படிப் பேசியிருக்க வேண்டாமென்று தோன்றியது. அவள் சொன்னாள்: ''அம்பி! நீ விசாரப்படாதே. நீ பேங்கர் சீனுவோட கடனைத் தீத்துடு. நான் இருந்து பத்திரத்திலே கையெழுத்துப் போட்டுட்டே போறேன்!'' என்றாள்.

நாராயணசாமி கோபமாகப் பேசினான்: ''நீ ராணியாட்டமா இருந்துட்டு வா! நான் போறேன்!....''

''இதோ பாருங்கோ! நமக்கும் ஒரு பொண்ணும், பிள்ளையும் இருக்கு. யார் யாருக்கு எப்படியெப்படி விதிச்சிருக்குன்னு தெரியாது. அவன்தான் ஆயிரம் ரூபா தரேன்னு சொல்லியிருக்கானே. வீணு ஆத்திரப்படறதிலே பிரயோசனமில்லே'' என்றாள் ஈஸ்வரி.

தன் மனைவியை மீறிக் கொண்டு போக முடியாது என்பதை உணர்ந்தவன் போல் நாராயணசாமி அங்கிருந்து எழுந்து வெளியே போனான்.

சுந்தரிப் பாட்டி அலுத்துக் கொண்டாள்: 'சே! என்ன உலகம்டா! வீட்டு எஜமானன் மண்டையைப் போட்டு முழுசா பதினஞ்சு நாளாகல்லே. அதுக்குள்ளே இப்படியா! இந்தக் காலத்திலே மனுஷாளுக்குத் தானே வாழணும்னு மனசில தோணிடறது. தர்ம நியாயமெல்லாம்கூட மறந்து போயிடறது. ஈஸ்வரா!' என்றாள்.

வெங்கடேசன் அந்தப் பேச்சுக்கு அத்தோடு முற்றுப்புள்ளி வைக்கவே விழைந்தான். மேற்கொண்டு ஆக வேண்டிய காரியங்களைப் பார்க்க வேண்டும். மறுநாள் மணியக்காரரை அழைத்துக் கொண்டு பேங்கர் சீனுவிடம் போய் விஷயத்தை முடித்துவிட வேண்டும். பதிவு செய்வதைத் திங்களன்று வைத்துக் கொள்ளலாம் போலத் தோன்றியது. சென்னைக்குச் சென்றால் ஹாஸ்டலில் தங்கலாம். ஆனால் ஒரு மாதச் செலவுக்குக் குறைந்தது நானூற்றைம்பது ரூபாயாவது வேண்டும். மேலும் ஹாஸ்டலில் இப்போது சூழ்நிலை சரியாக இருக்காது. தன் சகாக்களுடன் சினிமா, டிராமா என்று போக மனம் இடம் தராது. பரீட்சையை நன்கு எழுதித் தேறிவிட வேண்டும். சிவராமனுக்கு, அடுத்த வாரம் தான் அவன் வீட்டிற்கு வந்து தங்குவது பற்றிக் கடிதம் உடனடியாக எழுத வேண்டும்...

பற்பல சிந்தனைகள் மனத்தில் எழ அவன் வெளியே போனான்.

(தொடரும்)

# வேர்கள்

## கிருஷ்ணமணி

## 6

கிரிமினல் லாயர் முத்துசாமி தன் எதிரில் உட்கார்ந்திருந்த கட்சிக்காரரைப் பார்த்தார். வந்தவருக்குச் சுமார் ஐம்பது வயதிருக்கும். முன் பக்கம் வழுக்கை விழுந்திருந்தது. காதோரத்திலிருந்த கிருதா சற்று அதிகமாகவே நீண்டிருந்தது போன்று தோற்றமளித்தது. வசதியும் செல்வாக்கும் உடையவர் என்பது புறத் தோற்றத்திலிருந்தே தெரிந்தது.

வந்தவர் சொன்னார்: ''ஐயாகிட்டேதான் இந்த கேஸை ஒப்படைக்கணும்னு. சாதாரணமா தீர்ந்து போயிருக்க வேண்டிய விஷயம். அடிதடின்னு போயி கடைசியிலே ஒரு உயிரைப் பலி வாங்கிட்டது. செத்துப் போனவன் ஏழைதான்னு சொன்னாலும், அவனோட குடும்பம் அவனுடைய சம்பாத்தியத்திலேதான் பிழைச்சது. இப்ப அவங்க நிராதரவா இருக்காங்க. ஜில்லா கோர்ட்டிலே எதிரி தன் செல்வாக்கை உபயோகிச்சு, தனக்குச் சாதகமா ஆக்கிக்கிட்டாரு. ஒரு ஏழைக் குடும்பத்துக்கு நியாயம் வழங்கப்படணும்னுதான் நான் இதிலே தலையிட்டேனுங்க.''

''ம்....நீங்க எதிரின்னு குறிப்பிடறது யாரை?''

''அட்வகேட் ஏகாம்பரத்தைதான்.''

''ம்.... அவருக்கும் உங்களுக்கும் தனிப்பட்ட முறையிலே ஏதாவது வழக்கு வியாஜ்யம்னு....''

வந்தவர் சற்றுத் தயங்கினர். ''அப்படியெல்லாம் ஒண்ணுமில்லீங்க.''

''ஸோ... ஒரு ஏழைக் குடும்பத்துக்கு உதவி செய்யணும், நியாயம் கிடைக்கும்படியா செய்யணும்கிறதுதான் உங்க உத்தேசம்... இல்லையா, மிஸ்டர் கனகசபாபதி?''

''ஆமாங்க!''

''ஜில்லா கோர்ட்டு தீர்ப்பை நான் படிச்சேன். வழக்கினுடைய தன்மை, சந்தர்ப்ப சாட்சியங்கள், கொலை நடந்த விவரம், போலீஸ் ரிப்போர்ட் எல்லாத்தையும்விட, அந்த துர்ச்சம்பவம் நிகழ அடிப்படைக் காரணத்தையும் படிச்சேன். நீங்க அதைப் பத்தி என்ன நினைக்கறீங்க?''

கனகசபாபதி பதில் சொல்லவில்லை. அவருடைய தயக்கம் அதிகரித்தது. முத்துசாமி போன்ற புகழ்பெற்ற வழக்கறிஞர்களை வெறும்

பணத்திஞல் வாங்கிவிட முடியாது என்பது அவருக்குப் புரிந்தது. வழக்கின் தன்மைகளைப் பூரணமாக ஆய்ந்தறிந்து, நியாயத்திற்காகப் போராடும் கட்சிக்காரனுக்கே அவர் இதுவரையிலும் ஆஜராகியிருக்கிருர் என்பது பிரசித்தம். லட்ச ரூபாய் தருவதாளுலும், அநியாயமாக வழக்காட வரும் நபர்களை அவர் ஏற்றெடுத்தும் பாராதவர். பரம்பரை பரம்பரையாக வந்த கல்வியும் செல்வச் செழிப்பும் வரும் தலைமுறைகளுக்கும் கிட்ட வேண்டுமாஞல் தர்ம வழி மீறி நடக்கலாகாது என்ற சுய கட்டுப்பாட்டைக் கடைப்பிடிப்பவர் முத்துசாமி.

''கொலை செஞ்சவனேட பெஞ்சாதியை, கொலை செய்யப்பட்டுச் செத்துப் போனவன் கற்பழித்தது.... உண்மைதானே?''

மௌனம் நிலவியது.

''தனகசபாபதி! உங்களைத் தான் கேட்கிறேன்.''



''அவன் அப்படிச் செஞ்சது தவறுதாங்க. குடி வெறியிலே..''

''நிறுத்துங்க. மனைவி கற்பிழந்து, தற்கொலை செய்துக்கிட்டுச் செத்துப் போயிருக்கா. அந்த வேதனையிலே அவன் இவனைச் சந்திச்சுக் கோபமா பேசியிருக்கான். இவன் — அதாவது செத்துப் போனவன்—கண்டபடி ஏசியிருக்கான். அவன் இவனுடைய செய்கைகளுக்குப் பின்பலமா யார் இருக்காங்கிறதைத் தெரிஞ்சுக்கிட்டு சொல்லியிருக்கான். அந்தப் புள்ளி தென்ஞற்காடு ஜில்லாவிலே பெரிய புள்ளி. அந்தத் தைரியத்திலே செத்துப்போன சிங்காரம், கொலை செஞ்சதா குற்றம் சாட்டப்பட்ட பழனிவேலுவைத் தாக்கியிருக்கான். ஆஞல் பழனிவேலு அவனைக் குத்திக் கொல்லல்லே. சிங்காரம் தன்னை ஆதரிக்கிற பெரிய மனுஷனேட பெயரைச் சொல்லிப் பயமுறுத்தியிருக்கான். அன்னிக்கு ராத்திரியே சிங்காரம் கொலை செய்யப்பட்டிருக்கான். இதுதான் நடந்திருக்கு. அந்தப் பெரிய மனுஷன்தான் மறைவிலே இருந்து இந்த கேஸை நடத்தியிருக்காரு. பழனிவேலுவை வெளியே விட்டு வச்சா தனக்கு ஆபத்துன்னு இப்போ செஷன்ஸுக்கு வரப் பார்க்கிருரு. ஐ'ம் ஸாரி மிஸ்டர் கனகசபாபதி. நான் இந்த கேஸிலே ஆஜராக முடியாது!''

''ஐயா!.. நீங்க பீஸு எவ்வளவு கேட்டாலும் தர்றதா....''

''பத்து லட்ச ரூவா தர்றதாயிருந்தாக்கூட முடியாது....''

ஒரு தடவை மேலும் கீழும் பார்த்துவிட்டு வக்கீல் தொடர்ந்தார்:

''ஏகாம்பரம் எனக்குத் தெரிஞ்ச வக்கீல்தான். நேர்மையான மனுஷன். அரசியல்லே சேர்ந்தும், பதவிக்கும் பணத்துக்கும் ஆசைப்படாத லட்சிய வாதி. அதனுலதான் பழனிவேலுவுக்கு அவர் ஆஜராகியிருக்காரு. நீங்க யாருக்காக இங்கே வந் திருக்கீங்களோ அவர், அரசியல் காரணங்களுக்காக ஏகாம்பரத்தைத் தன் எதிரியா நினேக்கிருரு. நீங்க சொன்னீங் களே—அந்த சிங்காரம் குடும்பம் கஷ்டப்படுதுன்னு...வழக்குக்குச் செல வழிக்கிற பணத்திலே பத்திலே ஒரு பங்கு அந்தக் குடும்பத்துக்கு தரச் சொல்லுங்க. ஆனு செஷன்ஸுக்கு கேஸைக் கொண்டு வர்றதனுல பழனிவேலுவுக்குத் தண்டனே கிடைச் சிடும்னு நினேக்கிறது தப்பு. ஜில்லா கோர்ட்டிலே வழங்கப்பட்டது சரியான நியாயம்தான். தட்ஸ் ஆல் மிஸ்டர் கனகசபாபதி....''

கனகசபாபதிக்கு மேற்கொண்டு பேச முடியவில்லே. முத்துசாமி போன்ற புகழ்மிக்க வழக்கறிஞர்களின் யோச னேயை ஏற்காமல் மேலும் வழக்காடினுல் நிச்சயம் தோற்றுப் போகும் என்பது புரிந்தது. ஒருகால் ஏகாம்பரத்தின் பக்கமாக முத்துசாமியே தொகையேதும் வாங்காமல்கூட வழக்காட

## பத்து தலை ஆராய்ச்சி!

"ராவணனுக்குப் பத்து தலைகள். பத்து தலையோடு கூடியவனை ஒருத்தி பெறமுடியுமா?" என்று ஒரு மாணவன் என்னைப் பார்த்துக் கேட்டான். பத்து தலை இருந்ததா, இல்லையா என்று ஆராய்ச்சி செய்வதை விட, அதன் உள் நோக்கம் என்ன என்பதை அறிய வேண்டும். பெண்மைக்கு மதிப்புத் தருவது நமது பாரத பூமி. சீதையைத் தூக்கி வந்த ராவணனை அழிக்க வந்தது ஒரு வானரப் படை. அதாவது, மனிதனுக்கு முன்னால் வாழ்ந்த குரங்கு சமுதாயம். அந்தக் குரங்கினத்திற்கும் முன்னால் பறவை இனம்-சீதையைத் தூக்கி வரும் வழியில் ஜடாயுதான் வழி மறித்துத் தாக்கினான். பறவை இனத்துக்கு முன்பிருக்கிற பிராணிகளில் அணில்தான் அணை கட்ட உதவியது. ஆக, நம் பாரதத்தில் பெண்ணின் கற்புக்குப் பங்கம் நேர்ந்தால், பத்து தலைகளும் இருபது கைகளுமுடைய ராவணனே வந்தாலும், அவனுக்கு எல்லா வகையிலும் அழிவு நிச்சயம் என்பதுதான் ...."

—இலக்கிய கூட்டத்தில் ம. பொ. சி.

★ ★ ★

முன் வரலாம். யோசனைகள் பல அவர் மண்டையைக் குழப்பின. தயக்கத்துடன் எழுந்தார்.

"ஐயா! நான் வரேனுங்க!"

"ம்....!"

கனகசபாபதி போனதும் சிவராமன் உள்ளே நுழைந்தான். முத்துசாமி தன் மகனிடம் ஒன்றும் பேசவில்லை. அவனாகவே பேச்சை ஆரம்பித்தான்:

"அப்பா! திண்டிவனம் சுந்தரேசன் தெரியுமோன்னோ?"

"யாரு?"

"திண்டிவனம் சுந்தரேசன்."

"யெஸ்! ஏதோ ஆக்ஸிடெண்ட்லே போயிட்டானமே. நல்லவன். பாவம்..! அவனோட அப்பாவும், உங்க தாத்தாவும் சௌத் ஆர்க்காட்ல டிஸ்டிரிக் கோர்ட்லே ஒண்ணா வேலை பார்த்தவா. அவன் பிள்ளை கூட லா படிக்கல்லியோ?"

"ஆமாம்பா! எம். ஏ. நானும் அவனும் ஒண்ணாத்தான் பண்ணினோம். அவன் பரீட்சைக்குப் படிக்க ஒரு பத்து நாள் நம்ம வீட்டிலே தங்க வசதியிருக்குமான்னு கேட்டு லெட்டர் போட்டிருக்கான். அதான் உங்களைக் கேட்டுண்டு.."

"டோன்ட் பி ஸில்லி! நான் வேண்டாம்னு சொல்லப் போறேன்? எத்தனை வருஷமா அந்தக் குடும்பம் நம்ம குடும்பத்துக்குத் தெரியும்? சுந்தரேசனோட ஃபாதர் பெயரும் வெங்கடேசன்தான். பெரிய தர்மப்பிரபுன்னு சொல்லுவா. ஸ்கூல், காலேஜ் இதுக்கெல்லாம் நிறைய டொனேஷன் கொடுத்திருக்காராம். திண்டிவனத்திலே தினமும் இருபது ஏழைப் பசங்களுக்குச் சாப்பாடு போட ஏற்பாடு பண்ணி, அது சுமார் முப்பது வருஷ காலம் தொடர்ந்து நடந்திருக்கு. பெரிய மனுஷங்கடா — மனசில, படிப்பிலே, செய்கையிலே... யெஸ்! அந்தத் தலைமுறையெல்லாம் போயிடுத்து. இப்போ சொஸைட்டியே ரொம்ப மாறிப் போயிட்டது. பெத்த தாய்க்குப் புடவை வாங்கித் தராத பிள்ளைகள் எத்தனை பேர் இருக்கான் தெரியுமோ? பேஷா வரட்டும்டா! அந்தப் பரம்பரையோட வேர் போலத்தான் நம்ம குடும்பத்து வேரும் இருக்கணும். உங்க தாத்தா திண்டிவனம் போனா அவங்க வீட்லதான் தங்குவார். இது அவனோட வீடுன்னு உபசாரத்துக்குச் சொல்லக்கூடாது. ஹீ மஸ்ட் பி மேட் டு ஃபீல் இட். நான்கூட கன்டொலன்ஸ் லெட்டர் போட மறந்திட்டேன்."

"நான் போட்டேன்பா!"

"வெரிகுட்....! சிவராமா, ஒண்ணு தெரிஞ்சுக்கோ. உலகத்திலே சாதாரணமா மனுஷாளுக்குச் சந்தோஷமா இருக்கறச்சே நண்பர்களோட ஆதரவு தேவையில்லே. துக்கத்திலே இருக்கறச்சே அனுதாபமா சில வார்த்தை சொன்னாலே மனசுக்கு ஆறுதலா இருக்கும். பை ஆல் மீன்ஸ் யூ கன்வே மை இன்விடேஷன் டு ஹிம்!"

சிவராமன் புன்னகையுடன் வெளியேறினான்.

அப்பாவுக்கு எதுவும் மறப்பதில்லை. ஒரு சிலரைப் போல நல்ல நிலைமையி

லுள்ளவர்களை மட்டும் நினைவில் வைத்துக் கொள்வதும், காலத்தின் போக்கில் ஏற்படும் வாழ்க்கையின் மாறுதல்களால் சிரமப்படுவோரை ஏறெடுத்தும் பாராததுமாக இருப்பவர்கள் எத்தனை பேர்! வெளித் தோற்றத்திற்கு முத்துசாமி தடபுடலான பேர்வழி போல இருந்தாலும், மனத்தளவில் அவர் எளிமையானவர்தான். சிவராமனுக்குத் தன் தந்தையின் நற்குணம் தெரிந்திருந்தும், அவருக்குத் தெரியாமல் எதையும் செய்யக்கூடாது என்பதனால்தான் வெங்கடேசனின் வரவு பற்றி அறிவித்தான்.

கச்சேரி அறையை விட்டு அவன் வெளியே வந்ததும் வித்தியாதரன் மாடியிலிருந்து இறங்கி வந்து கொண்டிருப்பதைப் பார்த்தான். வெளிநாட்டுத் துணியினலான ஸ்லாக் சட்டை கண்ணைக் கவரும் வண்ணமிருந்தது. ஐ. ஏ. எஸ். தேர்வு எழுதப் போகும் ஒருவனாக அவன் இருக்கவில்லை. மாறாக, சினிமா கதாநாயகன் போலிருந்தான். அவனுடைய முகத்தில் சற்றே பெண்மையின் சாயல் குடிகொண்டாற் போலிருந்தது.

''ஹலோ சிவ்ராம்!''

''ஹலோ வித்யா!''

வித்தியாதரன் அருகில் வந்ததும் உயர் ரக ஸெண்டின் மணம் மூக்கைத் துளைத்தது.

''படிப்பெல்லாம் எப்படியிருக்கு வித்தியாதரன்?''

''ம்.... இருக்கு. பரீட்சை தேறணுமேன்னு இருக்கு. இந்தத் தடவை எக்ஸாம் கஷ்டமாயிருக்கும்னு பேசிக்கிறு. பார்ப்போம்.''

''டிரை ஹார்ட். நிச்சயம் பாஸ் பண்ணிடலாம். ஆமா, காலையிலே எங்கே புறப்பட்டே?''

''மார்னிங் ஷோ..!'' — மவுண்ட் ரோடில் ஒரு தியேட்டரின் பெயரைச் சொன்னன். ''பழைய நண்பர்களை நேத்துப் பார்த்தேன். இன்னிக்குக் கட்டாயம் போக வேண்டியிருக்கு. பை தி பை, நான் ப்ரெக்ஃபாஸ்டுக்கு டிரைவ் இன் போறேன். உங்க அம்மாகிட்டே சொல்லிடணும்.'' சொல்லிவிட்டு மணியைப் பார்த்தான். டிஜிடல் கடிகாரம்.

சிவராமன் புன்னகைத்தான்.

''பை... பை...'' சொல்லிவிட்டு வித்தியாதரன் புறப்பட்டு விட்டான்.

தேர்வுக்கு ஒரு வாரம்கூட இல்லை; சினிமா பார்க்கப் போகிறுனே என்று நினைத்தான் சிவராமன். வித்தியாதரன் வந்து தங்கி பத்து நாட்களாகி விட்டன. சேர்ந்தாற்போல் இரண்டு நாட்கள்கூட சாப்பிட்டிருக்க மாட்டான். அவனுடைய போக்கு பிடிபடாமல் இருந்தது. நிறையச் செலவழிப்பான் போலிருக்



# 'ராயல்டியா? வேண்டாம்!

'சாதல் இல்லையேல் காதல்' நாடகம் சஷ்டியப்த பூர்த்தி கொண்டாடி விட்டது. கொண்டாடியவர்கள்: நாடக பிரியா நாடகக் குழுவினர்.

பதினைந்து வருடங்களுக்கு முன்பு கல்கியில் சோ எழுதிய நாடகம் இது.

மேடையேற்றும் உரிமையை நாடகபிரியாவுக்கு வழங்கியபோது சோ போட்ட கண்டிஷன்:

''உங்கள் இஷ்டப்படி நாடகத்தை மாற்றிக் கொள்ளலாம். ஆனல், கடுகளவு விரசம்கூட நாடகத்தில் தலை நீட்டக்கூடாது!''

நாடகாசிரியருக்குத் தர வேண்டிய 'ராயல்டி' தொகையை சோவிடம் கொடுக்கச் சென்றபோது அதை வாங்கிக் கொள்ள மறுத்து விட்டாராம் அவர்.

''நான் உங்களுக்கென்று ஸ்பெஷலாக இந்த நாடகத்தை எழுதவில்லை. அதனல் எனக்குப் பணம் வேண்டாம்...'' என்று சொல்லிவிட்டார்.

இன்னெரு விஷயம்:

அறுபது தடவைக்குமேல் மேடையேற்றப்பட்டும் நாடகத்தை சோ இன்னும் பார்க்கவில்லை!

—எஸ்.

கிறது. வசதி இருக்கிறது. ஐ. ஏ. எஸ். எழுதுவதுகூட ஒரு பொழுதுபோக்கு போன்றிருந்தது அவனுக்கு. ஏனோ சிவராமனின் மனம் வெங்கடேசனைப் பற்றி நினைத்தது. அவன்தான் படிப்பில் எவ்வளவு கெட்டிக்காரன்! அதிகம் பேசமாட்டான். சென்னையில் நான்கு ஆண்டுகளுக்கு மேலாகத் தங்கியும் இன்னமும் கிராமப் பின்னணியில் வளர்ந்தவன் என்பது நன்கு புலனுகும் படியானதொரு தோற்றம். வலிமை வாய்ந்த உடற்கட்டு. மாநிறந்தான். ஆனுல் கண்கள் பெரியதாக இருக்கும். அகன்ற நெற்றி. கம்பீரமான நடை. திமில் அசைய நடந்து வரும் காளையைப் போன்றிருப்பான். சுபாவத்தில் சங்கோஜி.

''அண்ணு!'' சியாமளி கூப்பிட்டாள்.

நினைவு கலைந்து அவளை நோக்கினுன்.

''என்ன சியாமளி?''

''எனக்கு வெளியிலே கொஞ்சம் வொர்க் இருக்கு. அப்பா இன்னிக்கு ப்ரெக்ஃபாஸ்ட் சாப்பிடமாட்டார். நீ வந்தால் நாம ரெண்டு பேரும் சாப்பிட்டுடலாம். ப்ளீஸ், வரியா?''

''ம்....'' அவன் அவளைப் பின் தொடர்ந்தான்.

மேஜையில் வாழை இலைத் துண்டுகள் போடப்பட்டிருந்தன. சூடான வெண் பொங்கலும், மெதுவடையும், தேங்காய் சட்னியும் கொண்டு வந்தார் சமையற்காரர். நெய்யின் மணம் வீசியது.

சிவராமன் ரசித்துச் சாப்பிட்டான். வழக்கத்திற்கு விரோதமாகச் சியாமளி வேகமாகச் சாப்பிட்டாள்.

''தக்காளி கொத்சு வேணுமாம்மா?'' — சமையற்காரர் கேட்டார்.

''ம்.... வேணும்!''

சிவராமனுக்கு ஆச்சரியமாக இருந்தது. சியாமளிக்கென்றே விசேஷமாகத் தயாரிக்கப்பட்ட ஸைட் டிஷ் அது. இந்தப் பெண்ணுக்கு என்ன வந்து விட்டது? சியாமளியின் தாய் அந்தப் பக்கமாக வந்தவள் இதைக் கவனித்து விட்டாள்.

''ஏண்டி, சியாமளி! சரியாவே சாப்பிடலியே!''

''டயம் ஆயிடுத்தும்மா!''

''எதுக்கு?''

கீழுதட்டைக் கடித்துக் கொண்டாள் யாமளி. சுதாரித்துக் கொண்டு சொன்னுள்: ''என் ஃபிரெண்ட் நிர்மலாவைத் தெரியுமா? அவ இன்னிக்கு தாதர்லே பம்பாய் போரு. சென்ட்ரலுக்குப் போறேன்.''

''மணி எட்டரைதானே ஆகிறது! எதுக்கு இவ்வளவு அவசரம்?''

''ம்....''

''புரையேறப் போறது. மெதுவா சாப்பிடு....''

''சியாமளி! வேணும்னு நான் நம்ம காரிலே கொண்டு போய் விடட்டுமா?'' —சிவராமன் கேட்டான்.

''வேண்டாண்ணு! பஸ்லேயே போய்க்கிறேன்.'' — பெயருக்குச் சாப்பிட்டுவிட்டு அவள் எழுந்து விட்டாள். வாஷ் பேஸினில் கையலம்பும்போது கண்ணுடியில் முகம் தெரிந்தது. தன் பரபரப்புக்குக் காரணம் அவளுக்கே வியப்பாக இருந்தது.

வித்யாதரனுடன் தான் அன்று காலைக் காட்சிக்குப் போகக்கூடும் என்று அவள் நினைத்தவளே அல்ல. அவனுடைய பழக்கம் தனக்கு மிகவும் தேவைப்பட்டது போல் உணர்ந்தாள். அம்மாவுக்குத் தெரியாமல் அவள் சினிமா போவது இதுவே முதல் தடவை. தன்னை நம்பும் பெற்ருேரை ஏமாற்றுவது சரியா என்று ஒரு கணம் தோன்றியது. குறும்புப் பார்வை மிதக்கும் வித்யாதரனின் கண்கள்! அவன்தான் என்னவெல்லாம் பேசுகிருன்! பரீட்சை எழுதுவதுதான் தன் ஒரே குறிக்கோள் என்று சொன்னவளை இந்த ஒரு வார காலப் பழக்கத்தில் சிறிது சிறிதாக அவன் மாற்றியிருக்கிருன். அவன் சொல்லும் சம்பவங்கள், வர்ணிக்கும் நபர்கள், ஹாஸ்யம் இழைந்தோட, வெகு உரிமையோடு அவளுடன் அவன் பேசும்பொழுது அவள் மெல்ல மெல்லத் தன்வயமிழந்து அவன் பேச்சில் லயித்துப் போவதும்.... அவள் முகம் சிவந்தது.

''அம்மா போயிட்டு வரேன்!''— சொல்லிவிட்டுப் புறப்பட்டாள்.

சிவராமனின் கண்கள் அவள் போவதையே பார்த்தன.

இவளுக்கென்ன இன்றைக்கு இவ்வளவு பரபரப்பு? சற்று நேரம் முன் வெளியே கிளம்பிய வித்யாதரன், காலை உணவைச் சாப்பிடாமலே சென்று விட்டான். இவளும்...! அவனுக்கு வியப்பாக இருந்தது. அப்படியும் இருக்குமோ? அவனும் சியாமளியும் தங்களுக்குள் ரகசியமாக



''பெரியோர்களே... தாய்மார்களே... உங்கள் வாக்குகளை எனக்கே போடுங்கள்... நான் லஞ்சம் வாங்கியதோ... பொய் சொன்னதோ... திருடியதோ கிடையாது... தயவுசெய்து எனக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுங்கள்...!''

* * *

எதையும் வைத்துக் கொண்டதில்லை. என்னதான் சொந்த அண்ணனாக இருந்தாலும் தன்னிடம் அவள் தன் மனத்தின் எண்ணங்கள் எல்லாவற்றையும் சொல்லி விட முடியுமா என்றும் தோன்றியது.

வித்தியாதரனும் சியாமளியும் நல்ல ஜோடிதான். இருந்தாலும்.. மனத்தை என்னவோ செய்வது போலிருந்தது.

காரை எடுத்துக் கொண்டு புறப்படலாமா? அப்பா ஏன், எதற்கு என்று கேட்டால் என்ன சொல்வது? தன்னுடைய மோட்டார் சைக்கிளை எடுத்துக் கொண்டு புறப்பட்டால் என்ன? சே! சியாமளி என் தங்கை. அவளை நான் சந்தேகிக்கலாமா?...

''என்னடா சிவராமா?'' — கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தார் முத்துசாமி. சனிக்கிழமைகளில் அவர் மதியம் ஒரு வேளை மட்டும்தான் சாப்பிடுவார். காலை எட்டரை மணிக்கு ஒரு தம்ளர் பால். இரவில் ஒரு தம்ளர் பால். வேறு எதுவும் கிடையாது. மதியம் இரண்டு மணிக்குமேல் ஞாயிறு காலைவரை மௌன விரதம்.

அவருக்காகப் பால் தயாராக இருந்தது.

அருந்திவிட்டுத் தன் மனைவியைப் பார்த்தார்.

''காவேரி சர்க்கரை ஆலை முதலாளி சங்கரன் போன் பண்ணினர். புதுசா பிளாஸ்டிக் இண்டஸ்ட்ரி ஒன்று ஆரம்பிக்கப் போறாராம். ஷேர் எடுத்துக்க முடியுமான்னு கேட்டார். நீ என்னடா சொல்றே?''

சிந்தனை கலந்து சிவராமன் நிதானத்துக்கு வந்தான். ''பிளாஸ்டிக் இண்டஸ்ட்ரியாப்பா? பார்க்கலாம். காம்பெடிஷன் ஜாஸ்தி.''

''ம்...சங்கரனுக்கு ஒரு பெண் இருக்கா. காயத்ரின்னு பேரு. பி.எஸ்ஸி., படிச்சிருக்காளாம். உன்னைத்தான், கேக்கறியோ?''

அவர் மனைவி சிரித்துக் கொண்டே சொன்னுள்: ''கேட்டுண்டுதானிருக்கேன், சொல்லுங்கோ!''

''நம்ம சிவராமனுக்குப் பார்க்கலாமான்னு கேட்டார்.''

''என்ன சொன்னேள்?''

''உன்னைக் கேட்டுண்டு சொல்றேன் அப்படீன்னேன்!''

சிவராமன் சிரித்துக் கொண்டே எழுந்து விட்டான். அம்மாவை நாளுக்கு ஒரு தரமாவது வார்த்தையால் சீண்டாமல் இருக்கமாட்டார் அப்பா. அவர் சுபாவம். தன் பெற்றோரின் அந்நியோன்னியம் கண்டு அவன் மனம் பூரிப் படைந்திருக்கிறுன். 'ஒரு மனிதனின் வாழ்க்கை வெற்றிகரமாக அமைய நல்ல மனைவி தகுந்த பலமாக இருக்கிறுள்' என்று எங்கோ படித்தது அவன் நினைவுக்கு வந்தது. தன் தங்கை சியாமளி எங்கே போகிறுள் என்ற நினைவும் கூடவே வந்தது.

(தொடரும்)

## அறிமுகப் படுத்துகிறேம்

புதிய

# பிரெஸ்டீஜ்




**ஒப்பற்ற காஸ்கெட்
ரிலீஸ் ஸிஸ்டம் என்ற
அமைப்பு இப்புதிய
பிரெஸ்டீஜில் இருப்பதால்
அது உங்களுக்கு மிகுந்த
பாதுகாப்பைத் தருகிறது**

# நெல் மணியில் குருமணி

கலைஞர் டி. துரைரத்தினம் இலங்கையில் பிறந்து வளர்ந்த தமிழர். யாழ்ப்பாணத்திலுள்ள அச்சுவேலி அவரது ஊர். இந்த ஆண்டு தொடக்கத்தில் மதுரையில் நடைபெற்ற உலகத் தமிழ் மகாநாட்டுக்கு வந்தவர் இன்னும் தாயகம் திரும்பவில்லை.

மேற்கு மாம்பலம் சங்கர மடத்தினருகில் தங்கியுள்ள அவர் கண்களில், ஒரு நாள் காஞ்சிப் பெரியவரின் உருவப் படம் ஒன்று பட்டிருக்கிறது. இலங்கையில் இருந்தபோது தமிழகப் பத்திரிகைகளில் சுவாமிகளுடைய புகைப்படங்களைப் பார்த்த நினைவு வந்தது. பெரியவரைப் பற்றியோ, அவர் எங்கிருக்கிறார் என்பது பற்றியோ இவருக்கு ஒன்றுமே தெரியாது. நேரில் தரிசிக்கும் பாக்கியம் பெற்றதேயில்லை. ஆனால், அவருடைய திருவுருவம் மட்டும் அவர் மனத்தில் நன்றாகப் பதிந்துவிட்டிருந்தது.

ஓரிரு நாட்கள் கழித்து, நெல்மணிகளைக் கொண்டு இலங்கையில் சிலரது உருவப் படங்கள் செய்திருப்பதைப் பற்றி அன்பர் ஒருவரிடம் பேசிக் கொண்டிருந்தார் அவர். ''காஞ்சிப் பெரியவரின் படம் ஒன்று தருகிறேன். அதைப் பார்த்து வரைந்து நெல்மணிகளைப் பதித்துப் பாருங்களேன்'' என்று யோசனை கூறியிருக்கிறார் அந்த அன்பர். இந்த வாய்ப்பு, தனக்குக் கிடைத்தது முற்பிறவியின் நல்வினைதான் என்று கருதுகிறார் துரைரத்தினம்.

நாலைந்து மாதங்கள் வகை வகையான நெல்மணிகளைத் தேடி தமிழக மாவட்டங்களில் அலைந்திருக்கிறார். தஞ்சை, மதுரை, ராமநாதபுரம் திருநெல்வேலி, சேலம், நீலகிரி என்று பல இடங்களுக்கும் சென்று வெவ்வேறு நிறங்களில் ஒன்பது வகையான நெல்மணிகளைச் சேகரித்தார். பெரியவரின் உருவப்படம் ஒன்று வரைந்தார். ஒவ்வொரு நெல்மணியாகத் தேர்ந்தெடுத்து ஃபெவிகோல் என்ற கோந்து வைத்து ஒட்டினார்.

முகச் சுருக்கங்கள், ஆடையின் மடிப்புகள், விபூதி, குங்குமம், ருத்திராட்சம், கண்களின் ஒளி அனைத்தையும் நெல்லின் நிறத்தை வைத்தே துரைரத்தினம் தத்ரூபமாக அமைத்திருக்கும் இந்த ஓவியம் நம் ஆன்மாவையே தொடுகிறது.

சிவபெருமானுக்கு அன்னாபிஷேகம் செய்து பார்த்திருக்கிறோம். சிவப் பழமான காஞ்சிப் பெரியவரை நெல்லாலேயே அர்ச்சித்து, அபிஷேகம் செய்து ஆராதித்திருக்கிறார் இந்தக் கலைஞர்.

''இதைச் செய்வதற்கு எத்தனை நாட்கள் ஆயிற்று?''

''சுமார் மூன்று வாரங்கள். கூடியமட்டும் ஆசாரமாக இருந்து பயபக்தியோடு செய்தேன்.''

துரைரத்தினம்



''இந்தப் படத்தில் மொத்தம் எத்தனை நெல் மணிகள் இருக்கும்?''

''கணக்கு வைத்துக் கொள்ளவில்லை.''

நான் பெரியவரின் நெற்றியில் துலங்கும் குங்குமத்திலுள்ள நெல்மணிகளை மட்டும் எண்ணினேன். சுமார் 26 நெல்மணிகள் இருந்தன.

''உங்கள் ஆசை என்ன?''

''பெரியவர் எங்கிருக்கிறாரோ, அந்த இடத்திற்குச் சென்று இந்தப் படத்தைக் காட்ட வேண்டும். அவரது அருளாசியைப் பெற வேண்டும்.''

நாக்குழற, கண்கள் கலங்கக் கூறினார் கலைஞர் துரைரத்தினம்.

— திருவுடையோன்.

# வேர்கள்

## கிருஷ்ணமணி

### 7

'ஜெஸ்வந்த் ஹெவன்' பங்களா நிசப்தமாக இருப்பது போல் தோன்றியது. சூட்கேஸ்கள் இரண்டை இரண்டு கைகளிலும் பற்றிக்கொண்டு, காம்பவுண்டு கேட்டைத் தாண்டி உள்ளே நுழைந்தான் வெங்கடேசன்.

புதிய மனிதன் ஒருவனைப் பார்த்ததும் ஓடி வந்தான் செல்லையா.

''ஐயா! யார் வேணும்?''

''சிவராமன் இருக்காரா?''

''சின்ன ஐயாவுங்களா? இப்பத்தான் வெளியே போனருங்க. நீங்க யாருன்னு சொன்ன....''

''என் பெயர் வெங்கடேசன். மங்கள புரத்திலேருந்து வரேன். திண்டிவனம் பக்கம்.''

''இருங்க.''—சொல்லிவிட்டு செல்லையா உள்ளே போனன்.

வெங்கடேசனுக்குக் கூச்சமாக இருந்தது. தோட்டத்தின் புல் தரை அழகாக இருந்தது. கண்ணைக் கவரும் பூச்செடிகள். வெயில் தெரியாதவாறு நிழல் பரப்பிக் கொண்டிருந்த பலவகை மரங்கள். பெட்டிகளைக் கீழே வைத்துவிட்டுப் புல் தரையில் உட்கார்ந்து விட்டான். மிகவும் அசதியாக இருந்தது.

நடந்துபோன நிகழ்ச்சிகள் மனத்திரையில் பளிச்சிட்டன. ஏரிக்கரையோரமாக இருந்த மூன்று ஏக்கர் நிலத்தை பேங்கர் சீனுவுக்குக் கிரயம் செய்து கொடுத்து, மீதம் ஆறுயிரத்தை வாங்கிக் கொண்டு வீட்டிற்குப் போனபோது சுந்தரிப் பாட்டி பிரலாபித்தாள்:

''ஊரும் உலகமும் மெச்சுக்க வாழ்ந்த குடும்பம்டா அம்பி! நீயாவது வக்கில் உத்தியோகத்திலே கைநிறைய சம்பாதிக்கணும். நாலு பேருக்கு ஆதரவா நாம இருக்கணும்டா. பிறத்தியாரோட ஆதரவிலே வாழக்கூடாது. உன்னைப் பெத்தவ வாயில்லாப்பூச்சியா இருக்கா. அவளுக்கும் சேர்த்து நான் சொல்றேன். ஆச்சு, என் காலம் போயிட்டது. நீ நாளைக்கே கல்யாணம் பண்ணிண்டாலும் பெத்தவ அவளை மனம் கோணும வச்சுக்கோடா. அந்த உடம்பிலே மூச்சு ஓடற வரைக்கும், சம்ரட்சணை பண்றது உன் பொறுப்பு. எனக்குப் பொண்ணே பொறக்கல்லே. அதனுல அவளைப் பொண்ணு போத்தி வளர்த்தேன்!..''

''கவலையே வேணும் பாட்டி! அம்மாவை நான் ஜாக்கிரதையா பார்த்துப்பேன்.''

''உனக்குச் சொல்ல வேணும்டா. மனசு அடிச்சுக்கிறது. சில பிள்ளையாண்டான்கள் பெண்டாட்டி வந்ததும், அம்மாவைத் தூக்கித் திண்ணையிலே போட்டுடறான். கோடியாத்து விஷயம் தெரியுமோ? அந்த சரசுக்குக் கண் சரியா தெரியல்லியாம். பூ போட்டிருக்கு. ஆஸ்பத்திரிக்குப் போகணும்னு சொன்னளாம். அவ பிள்ளை மெட்ராஸ்ல ஆயிரம் ஆயிரமா சம்பாதிக்கிறன். பெண்டாட்டி சொன்னதுதான் வேத வாக்கு. டி. வி. வாங்கியிருக்கானும். மாவரைக்க, அதுக்கு இதுக்குன்னு எல்லாத்துக்கும் மெஷின் தானும். மச்சினி கல்யாணத்துக்குப் பத்தாயிரம் கொடுத்திருக்கானும். பெத்தவளை கண் டாக்டர்கிட்டே அழைச்சிண்டு போகல்லியாம். 'தர்ம ஆஸ்பத்திரிக்குப் போய் சமையல் வேலை செய்யறேன்னு சொல்லு. காசு வாங்காம வைத்தியம் பண்ணுவா' அப்படின்னு

சொன்னும். எவ வயித்திலே குடியிருந் தானே, அவளை வேலைக்காரியா இருக் கேன்னு சொல்லுங்கறன். பாவம்! பெத்தவ மனம் குமைஞ்சு இருக்கா. எல்லாம் காலத்தோட கோலம்டா!''

வெங்கடேசனுக்கு அந்த விஷயம் தெரியும். அப்படியும் சில புத்திர சிகாமணிகள் இருக்கிறார்கள்.

''அம்பி! உத்தியோகத்திலே சத்தியமா நடந்துக்கணும்டா. பீஸ் வரதேன்னு அதர்மமான வழியிலே போகக்கூடாதுடா!'' எவ்வளவு பொருள் பொதிந்த வார்த்தைகள்!

ஈஸ்வரி ஆயிரம் ரூபாயை வாங்கிக் கொண்டுதான் போனாள். ஊருக்குப் போகும்போதுகூட நாராயணசாமி சரியாகப் பேசவில்லை. மனித வாழ்க்கையின் கணிப்புக்கள் மாறித்தான் போய் விட்டன...

ஆளரவம் கேட்டது.

சிந்தனை கலைந்து அவன் பார்த்தான்.

செல்லையா ஓட்டமும் நடையுமாக வந்து கொண்டிருந்தான். அவன் பின்னலேயே வருவது யார்? உற்றுக் கவனித்தான். ஆம்! அவரேதான். முத்துசாமி. வெங்கடேசனுக்கு வியப்பாக இருந்தது.

அவனைப் பார்த்ததும் சற்றே நின்றார்.

அவன் அவருக்கு வணக்கம் செலுத்தினன்.

''செல்லையா! இந்த ரெண்டு சூட்கேஸையும் மாடியிலே இருக்கிற இன்னொரு கெஸ்ட் ரூம்ல கொண்டுபோய் வை!''

செல்லையா பெட்டிகளை எடுத்துக் கொண்டு போனன்.

அவர் அவன் அருகில் வந்தார். மௌனமாக அவனையே பார்த்தார்.

''கேள்விப்பட்டேம்ப்பா! ஐ'ம் வெரி ஸாரி..இட் வாஸ் எ ஷாக் டு மி. என்ன பண்றது? ம்..! தெய்வ சித்தம்..''

இருவரும் பங்களாவை நோக்கி மௌனமாகவே நடந்தனர். போர்ட்டிகோவினருகில் வந்ததும் அவன் தோள்களில் தன் கையைப் போட்டு அணைத்தவாறே சொன்னர்: ''இங்கே உனக்கு என்ன சௌகரியம் வேணுமோ தயக்கமில்லாம கேட்கலாம். உபசாரத்துக்காக நான் பேசல்லே. யூ மஸ்ட் பி அட் ஹோம். நல்லா படி, பரீட்சை எழுது. நிச்சயமா நீ எதிர் காலத்திலே உங்க தாத்தா போலப் பேர் எடுப்பே! மே காட் ப்ளெஸ் யூ!''

அவனுக்கு அந்த மொழிகள் மிகவும் இதமாக இருந்தன. நல்ல பண்பாளர் ஒருவரின் நிழலில் தான் இருப்பதற்கு நேரிட்டதை அவன் மகிழ்ச்சியாகவே ஏற்றுக் கொண்டான்.

''வெங்கடேசா! கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துண்டு, குளிச்சிட்டு, ஆகாரம் பண்ணிடு. சிவராமன் அதுக்குள்ளே வந்திடுவான்'' என்றார்.

செல்லையா படியிலிருந்து இறங்கி வந்து வெங்கடேசனுக்காகக் காத்திருந்தான். தன் எஜமானரே எதிர் கொண்டழைக்கும்படியான நபரிடம் தான் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்பது அவனுக்குத் தெரிந்ததே. முன் நடந்து வெங்கடேசனின் அறைக்கு வழி காட்டினன்.

மௌனமாகப் பின்தொடர்ந்தான் வெங்கடேசன்.

சில நிமிட ஓய்விற்குப் பிறகு குளித்து, மாற்றுடையணிந்து அவன் கீழேயிறங்க இருந்த சமயம், சமையற்காரர் ஒரு தட்டில் சூடான இட்லியும் சட்னியும் கொண்டுவந்து வைத்தார். ராஜ உபசாரமாக இருந்தது அவனுக்கு. சிற்றுண்டி முடிந்ததும் அசதியின் மிகுதியால் கட்டிலில் படுத்தவன் அப்படியே நித்திரையிலாழ்ந்தான்.

மதியம் ஒரு மணி சுமாருக்கு வெங்கடேசன் தங்கியிருந்த அறைக் கதவு தட்டப்படும் ஓசை கேட்டு அவன் விழித்தெழுந்தான். கைக் கடிகாரம் பார்த்து




''மீட்டருக்கு மேலே எவ்வளவுப்பா வேணும்..? அஞ்சா, பத்தா..?''

''ஒண்ணும் வேண்டாம் சார்..! மஃப்டியிலே வந்திருக்கிற போலீஸ் சார்ஜெண்ட் நீங்கங்கறது எனக்குத் தெரியும்..!''

—உ. ராஜாஜி

மணியைத் தெரிந்து கொண்டவன் தனக்குள்ளாகவே சிரித்துக் கொண்டான். எழுந்திருந்து கதவைத் திறந்தான்.

''நல்ல தூக்கத்திலே டிஸ்டர்ப் பண்ணிட்டேனே?''— முகத்தில் புன்னகையுடன் நின்று கொண்டிருந்தான் சிவராமன். புன்னகைத்து விட்டு மேற்கொண்டு ஒன்றும் சொல்லாமல் திரும்பினான் இவன்.

''ம்..ஜஸ்ட் எ மினிட்!'' — சொல்லிக்கொண்டே வாஷ் பேஸினில் முகம் கழுவிக் கொண்டான் வெங்கடேசன்.

''ரெண்டு மூணு நாளா நல்ல அலேச்சல். சரியான தூக்கமில்லே!''— துவாலையால் துடைத்துக் கொண்டே பேசினான்.

''சாப்பிடக் கூட்டிண்டு போகலாம்னு வந்தேன். பதினொரு மணிக்கு வந்தேன். அப்பா சொன்னார். உன்னைப் பார்க்கலாம்னு வந்தா, நீ அசந்து தூங்கிண்டிருந்தே. வா! சாப்பிடப்போகலாம்!''

மிக இயல்பாகப் பேசினான் சிவராமன். நண்பர்களிருவரும் சந்தித்து மாதங்கள் பலவாகியும், எந்தவிதமான பிரிவும் ஏற்படாதது போல் இருந்தது அந்தச் சந்திப்பு. உண்மையான நட்பிற்குச் சந்திப்புக்கள் கூட அவசியமில்லை போலும்!

நண்பர்களிருவரும் படியிறங்கிப் போகவும், டைனிங் ஹாலில் முத்துசாமி, சியாமளி, வித்தியாதரன் ஆகியோர் இவர்களுடைய வரவிற்காகக் காத்திருப்பது தெரிந்தது. வெங்கடேசனுக்குச் சற்றுக் கூச்சமாகக்கூட இருந்தது. அவனுக்கும் சிவராமனுக்கும் நெருங்கிய பழக்கம் உண்டு என்றாலும், 'ஸெவன்த் ஹெவ'னுக்கு அவன் விருந்தாளியாக வந்திருப்பது இதுவே முதல் தடவை. அவர்கள் வீட்டில் ஆங்கிலேயர் வழக்கப்படிதான் குறிப்பிட்டநேரத்தில் குடும்பத்தினர் அனைவரும் ஒன்று சேர்ந்து உண வருந்துவது வழக்கம் என்று சிவராமன் ஒரு சமயம் சொன்னது அவனுக்கு இப்போது நினைவிற்கு வந்தது. நாற்காலிகள் இரண்டில் நண்பர்களிருவரும் சென்று அமர்ந்தனர்.

உணவு பரிமாறப்பட்டது.

''வெங்கடேசன்! என் தங்கையை உனக்குத் தெரியுமில்லே?''



''ம்....''

''சியாமளி. இந்த வருஷம் ஐ.ஏ.எஸ். எழுதப் போறு!''

சியாமளி,வெங்கடேசனைக் கண்களால் அளவெடுத்துக் கொண்டே புன்னகைத் தாள். நாகரிகத்தின் பாதிப்பு அதிகம் ஏற்படாத கிராமத்துக் கட்டிளங்காளை யாக இருந்தான் அவன். அமைதியான முகம். பரந்த மார்பு. திரண்ட புயங்கள். போலித்தனம் சிறிதுமில்லாத மிக எளிய பார்வை. நிறம்தான் சற்றுக் குறைவாக இருப்பது போல் தோன் றியது.

''அது மிஸ்டர் வித்யாதரன். சியாமளி யோட காலேஜ்மேட். அவனும் ஐ.ஏ. எஸ். எழுதப் போறுன். ஃபேமிலி ஃபிரெண்ட்.இவன் ஸாரி..இவர் மிஸ்டர் வெங்கடேசன். என் காலேஜ்மேட். பி. எல். எழுதப் போறுன். எ பிராஸ் பெக்டிவ்... ஏண்டா வெங்கி, நீ எந்தப் பிரிவிலே பிராக்டிஸ் பண்ணப் போறே? சிவிலா, இல்லே கிரிமினலா?''

''இன்னும் தீர்மானிக்கலே. அநே கமா கிரிமினலாத்தான் இருக்கும்!''

''ப்ரேவோ! எ பிராஸ்பெக்டிவ் கிரிமினல் லாயர்!''

முத்துசாமி இப்போது வெங்கடேச னைப் பார்த்தார். அந்தப் பார்வையின் பொருளை அவனும் புரிந்து கொண்டான்.

''ஏண்டா வெங்கி! கிரிமினல் லாயரா வரப் போறவன் இப்படி சங்கோஜியா இருக்கலாமோ! நல்லா சாப்பிடுடா. எதையுமே தொடல்லியே!'' என்றுன் சிவராமன்.

முத்துசாமி சொன்னுர்: ''கிரிமினல் லாயர்ஸ் ஆர் ரிஸர்வ்ட் பீபிள் ஆஸ் எ கிளாஸ். அவங்களுக்கு ஹ்யூமன் பிஹேவியரிஸத்தைக் கூர்ந்து கவனிக் கிறதிலே ரொம்ப இன்டரஸ்ட். வெங்கடேசன் வித் ஹிஸ் பெர்ஸனுலிடி வில் டெஃபனெட்லி ஷைன் ஆஸ் எ கிரிமினல் லாயர்!''

''ஒரு அனுபவம் மிகுந்த சீனியரோட அட்வான்ஸ் காம்ப்ளிமெண்ட்ஸ்!'' —சிவராமன் சொன்னுன்.

மிக மகிழ்ச்சிகரமான சூழ்நிலை அங்கே நிலவியது. ''உணவு உண்ணும்பொழுது மனத்தில் வேறெந்த அரித்துத் தின்னும் கவலைகளும் ஆக்கிரமிக்க அனுமதிக்கக் கூடாது. வெகு நிம்மதியாக உண்ண வேண்டும். பரிமாறப்படும் பதார்த்தங் களின் ருசியை அனுபவித்து உண்ண



வேண்டும். உணவு புனிதமானது. அதை வீணாக்கக் கூடாது.'' — முத்துசாமி சிரித்துக் கொண்டே சொன்னார். வழக்கமாக அதிகம் பேசாத அவர் அன்று உற்சாகமாக இருந்தார்.

வெங்கடேசன், கிராமத்தில் தன் தந்தை ஜீவியவந்தராக இருந்த காலத்தில்கூட அவருடன் சேர்ந்து சாப்பிட்டது மிகக் குறைவு. ஒவ்வொருவர் உணவு உண்ண ஒரு வேளை என்றுதான் இருந்தது. தான் ஏன் தன் தந்தையைப் பற்றின ஒரு கணிப்பை முத்துசாமியுடன் ஒப்பிட்டு நோக்க வேண்டுமென்று கூட அவனுக்குத் தோன்றியது.

அவனைப் பார்த்துக் கொண்டே முத்துசாமி சொன்னார்:

''குற்றப் பிரிவு என்பது மிக சுவாரஸ்யமானது. மனிதர்களோட வக்கரிப்புக்கள், குற்றம் செய்யறதுக்கு உண்டான மனோநிலை, சந்தர்ப்பங்கள்—இதையெல்லாம் பார்க்கும்போது மனித மனசோட பல தோற்றங்கள் நமக்குத் தெரியறது. வெளித் தோற்றத்துக்குப் பரம சாதுவா இருப்பான்; உள்ளுக்குள்ளே பயங்கரமான ஆசாமியா இருப்பான். அவன் ஏஜென்ட் ப்ரொவொகேடரா இருந்திண்டு பணத்துக்கு ஆளமர்த்திக் குற்றத்தைச் செய்திருப்பான். கிடைக்கிற பணத்துக்கு ஆசைப்பட்டுண்டு ஒரு உயிரைப் போக்கடிக்கிறவன் எவ்வளவு சாமர்த்தியமா செயல்பட்டாலும் கடைசியிலே ஒரு சின்ன தடயம் அவனைக் காட்டிக் கொடுத்திடும். அப்போ அந்த கிரைமுக்கு பிரின்ஸிபல் தான் தப்பிக்க வழி தேடுவான். சில சமயங்களிலே தப்பிச்சிக்கிறான். கிரிமினல் லாயரா இருக்கிறவன் கிரைமோட அடிப்படைக் காரணத்தை வெளியே கொண்டு வரணும். அதுதான் அவனோட கெட்டிக்காரத்தனம். குற்றம் செஞ்சவன் சட்டத்தினுடைய துணையோடு தப்பிச்சிக்கிறதை விட, நிரபராதியொருவன் அதனோட துணை சரியா கிடைக்காமல் தண்டனையடையறது மகா பாவம். அதைத்தடுத்து நிறுத்தணும்கிறதுதான் சட்டத்தோட அடிப்படை நோக்கமே!''

முத்துசாமி பொதுவாகத் தன் தொழிலைப் பற்றிப் பேசவே மாட்டார். வெங்கடேசனின் முகம் அவரைப் பேசத் தூண்டியது போலும்!

சிவராமனும் சியாமளியும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். தங்களிடம் அதுநாள் வரை தன் தொழிலைப் பற்றிப் பேசியே அறியாத தங்கள் தந்தை, அன்று வெங்கடேசனிடம் எவ்வளவு சகஜமாகப் பேசுகிறார்! வெங்கடேசனிடம் அவருக்கு ஒருவிதப் பரிவும் பாசமும் ஏற்பட்டுக் கொண்டிருப்பதைப் போல சிவராமனுக்குத் தோன்றியது.

கலைஞனாக இருப்பவன் ஆத்மார்த்தமாகத் தனக்கு வாரிசு வேண்டுமென்று விரும்புவது போலவே சட்டம், பொறியியல், மருத்துவம் போன்ற துறைகளில் பிரகாசிக்கும் அறிஞர்களும் தங்களுக்கென்று ஒரு தொழில் ரீதியான பரம்பரை உருவாவதை வெகுவாக விரும்புகிறார்கள் போலும்! தன்னிடம் அந்தக் குணாதிசயம் இல்லாததால், வெங்கடேசனிடம் தன் தந்தைக்கு ஓர் ஈடுபாடு உண்டாகியிருக்கலாம் என்று எண்ணினான் சிவராமன்.

''என்னடா வெங்கி, ஒன்றுமே பேச மாட்டேங்கிறே?''

வெங்கடேசன் புன்னகைத்தான். பிறகு சொன்னான்: ''நான் இன்னும் சட்ட மாணவன்தான். வழக்கறிஞரா ஆகல்லே. வெல் எஸ்டாப்ளிஷ்ட் லாயர் ஒருத்தர்கிட்ட நான் பேசறத்துக்குத் தகுதியுடையவனாக இருக்க வேண்டாமா?''

அவனுடைய தன்னடக்கம் சியாமளிக்கு வியப்பாக இருந்தது. ''நான் சொல்றேன்னு தப்பா நினைக்காதீங்க மிஸ்டர் வெங்கட்! புரொஃபஷனல்ஸுக்குத் தன்னம்பிக்கை ரொம்ப வேணுமில்லையா? இல்லேன்னா தொழில்லே முன்னேற்றம் காண முடியுமா?'' என்றாள் சியாமளி.

''கான்ஃபிடன்ஸ் வேணும்தான். அது தொழில் செய்யும்போது. ஆனா ஆசானிடத்திலே?... சந்தேகம் கேட்கலாம். தெளிவு கிடைக்கிற வரைக்கும் அவருடைய அனுபவ அறிவைத் துணையா எடுத்துண்டு வழி நடக்கணும். சட்டப் புத்தகங்களைப் படிச்சிட்டு, பரீட்சையிலே கேள்விக்குப் பதிலெழுதித் தேர்ச்சியடைஞ்சிட்டதாலேயே ஒருத்தர் சிறந்த வழக்கறிஞராக ஆகிட முடியாது. அதனாலதான் குறைஞ்ச பட்சம் ரெண்டு வருஷமாவது ஒருத்தர்கிட்டே ஜூனியரா இருக்கணும்கிறது. நான் தெரிஞ்சிக்க வேண்டியது ஏராளமா இருக்கு. பதில் பேச என்ன இருக்கு?'' என்றான்.

வித்தியாதரனுக்கு என்னவோ போல் இருந்தது. தன்னுடைய செல்வ நிலை

# மானேக்ஷா(க்)!

மானேக்ஷா பிரிகேட் கமாண்டராகப் பதவி வகித்தபோது ஒரு முறை ஸட்லெஜ் நதியில் ஒரு மோட்டார் படகில் சில அதிகாரிகளுடன் போய்க் கொண்டிருந்தார். நதியில் வெள்ளம் சுழித்துக் கொண்டு ஓடியது. திடுமென்று மோட்டார் படகில் இயந்திரக் கோளாறு ஏற்பட்டு, படகு பயங்கரமாக ஆடத் தொடங்கியது. மற்ற ராணுவ அதிகாரிகள் அனைவரும் சடசடவென்று காலணிகளையும், கனமான உடைகளையும் கழற்றி வைத்துவிட்டு, நீந்துவதற்குத் தயாரானார்கள். மானேக்ஷாவோ கொஞ்சமும் பதட்டமின்றி மீசையைக் கைகளால் முறுக்கியவண்ணம் அசையாமல் உட்கார்ந்திருந்தார்.



நல்லவேளையாக, இன்னொரு படகிலிருந்தவர்கள் தக்க சமயத்தில் உதவிக்கு வந்தார்கள். படகு மாறி, மானேக்ஷாவும் மற்றவர்களும் பத்திரமாகக் கரை சேர்ந்தார்கள்.

அதிகாரிகளில் ஒருவர் மானேக்ஷாவை அணுகி, ''உங்கள் தைரியமே தைரியம் சார்..! நீந்துவதற்கு பூட்ஸைக்கூடக் கழற்றாமல் தைரியமாய் உட்கார்ந்திருந்தீர்களே!...'' என்று வியப்புத் தெரிவித்தார்.

''பூட்ஸைக் கழற்ற வேண்டுமா? எதற்காக?... எனக்குத்தான் நீச்சலே தெரியாதே!'' என்றார் மானேக்ஷா அமைதியாக!

  

காரணமாகத்தான் தனக்கு அங்கே மதிப்பு ஏற்பட்டிருக்கிறது என்பது போல உணரத் தலைப்பட்டான். முத்துசாமி தன்னிடம் வெகு இயல்பாகப் பேசவில்லை போன்றிருந்தது அவனுக்கு. காரணமில்லாமல் வெங்கடேசன்மீது அவனுக்கு ஒருவித எரிச்சல் கூட உண்டாயிற்று. தானும் ஐ. ஏ. எஸ். பாஸ் செய்த பிறகு ஒரு நிர்வாக அதிகாரியாக வர முடியும். ஆனாலும் வக்கீல்கள் சமுதாயத்தில் புகழ் பெறுவதைப் போல ஒரு நிர்வாகி பெற முடிவதில்லை. சர்க்கார் காரியாலயம் என்பதுகூட சட்டங்களுக்குட்பட்டதே. சாமானியன் ஒருவனுக்கு சர்க்கார் அநீதி இழைத்துவிட்டது என்றாலும்கூட அவனும் சட்டத்தின் உதவியைத்தான் நாடுவான். தான் சட்டம் படிக்காதது அவனுக்குக் குறையாகத் தோன்றியது. தனக்குள்ளாக, தன்னையுமறியாமல், காரண காரியமில்லாமல் வெங்கடேசன் மீது ஒரு பொறாமையுணர்ச்சி தலைகாட்டுவதை உணர்ந்தான்.

சியாமளி வெங்கடேசனின் ஆணித்தரமான பதிலைக் கேட்டு வியந்தாள். அவன் சிறிதே பேசினாலும் கற்பனையாக வாழ்பவனில்லை என்பது புரிந்தது.

''வெரி பிராக்டிகல் பர்ஸன்..''—அவள் முணுமுணுத்தாள்.

''சியாமளி! என்னம்மா சொல்றே?'' — முத்துசாமி கேட்டார்.

அவள் சற்றே முகம் சிவந்தாள். பதில் சொல்லவில்லை.

அவர் சிரித்தார்.

உணவு முடிந்ததும் சம்பிரதாயமாகப் பேசுவது அங்கு வழக்கமில்லை.

''சிவராம்! உனக்கு சாயந்திரம் வேலை ஏதானும் இருக்கா?''

''குறிப்பா ஒண்ணுமில்லே!''

''ரைட்டோ! சாயந்திரம் பார்க்கிறேன்.''—சொல்லிவிட்டு வெங்கடேசன் தன் அறைக்குத் திரும்பினான். தேர்வு நெருங்கி விட்டது. கடுமையாக உழைக்க வேண்டும். சிறிது நேர ஓய்விற்குப் பின்னர் அவன் தன் படிப்பில் கவனம் செலுத்தினான். ஒருமன முனைப்போடு, அவன் தான் படிக்க வேண்டிய விஷயங்களை நினைவுபடுத்திக் கொண்டு செயல்பட்டான்.

உணவிற்குப் பின் தன்னுடன் அவன் பேசுவான் என்று எதிர்பார்த்த சியாமளிக்குச் சற்று ஏமாற்றமாகவே இருந்தது.

(தொடரும்)



''அஞ்சாறு வருஷமா காலியாவே இருந்த அவுட் ஹவுஸ்!... ஒட்டடை அடிக்காமலா ஓனர் உங்களுக்கு விட்டுடப் போறாரு?!.... அதைக் கையாலே விலக்கிட்டு உள்ளே எட்டிப் பாருங்க சார்.... முடிச்சுடலாம்....!''

டு புரோக்கர்

# ண்ணிய கோடி!



''மாடி போர்ஷன் கா
கிச்சன் கார்டன் வெச்சிரு
சார்.... அவ்வளவு தான்



''இந்த சந்துக்குள்ளே நல்ல போர்ஷன்
ண்ணு இருக்குது.. ஹும்!.. விடுங்க.. உங்களுக்குச்
ரிப்பட்டு வராது!..''



''டெலிபோனேட முழு
டு ஒண்ணு காலியா
ருக்குதுன்னு அன்னிக்கு
சான்னேனே ....
தான்!..''





## உங்கள் கேசம் அடர்த்தியின்றி சக்தியின்றி இருக்கிறதா? உங்கள் கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...

**செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த**

# ஹேலோ எக் ஷாம்பூ

ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தியின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.

பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரை வளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.

**ஹேலோ எக் ஷாம்பூ...**
**அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு**




HES. G. & TH

9 காலை இன்பமாக மலர்ந்தது.

தோட்டத்தில் வெங்கடேசன் உலவிக் கொண்டிருந்தான். தினமும் சராசரி பத்து மணி நேரத்துக்குக் குறையாமல் அவன் படிப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தான். சுபாவமாக அமைந்துவிட்ட தன்னடக்கம், குறைவாகப் பேசும் தன்மை இவை அவனுக்குப் படிப்பில் கவனம் செலுத்த உதவியாக இருந்தன. தேர்வுகள் ஆரம்பித்து விட்டன. அன்றைய தினத் தேர்வுக்குண்டான பகுதியைப் பற்றியே அவன் மனம் சிந்தித்துக் கொண்டிருந்தது.

''குட்மார்னிங்!...''

குரல் கேட்டுச் சற்றே நிமிர்ந்தான்.

சியாமளி நின்று கொண்டிருந்தாள்.

''குட்மார்னிங்!''

வெளிர்நீல வண்ணப் புடவையில் தேவதை போன்று அவள் காட்சி தந்தாள். ஷாம்பூ போட்டுக் குளித்த கூந்தலைப் பைப் பின்னலாகப் போட்டிருந்தாள். விடியற்காலையிலேயே குளித்துவிடும் பழக்கம் அவளுக்கு. வந்த நாளிலிருந்து அவளிடம் வெங்கடேசன் சேர்ந்தாற்போல ஐந்து நிமிட நேரம் பேசினதேயில்லை. தானுண்டு தன் வேலையுண்டு என்றிருக்கும் அவனுடன் பேசியே தீருவது என்று கங்கணம் கட்டிக் கொண்டவள் போல அவள் கேட்டாள்:

''எங்கப்பா வாரத்திலே அரை நாள்தான் மௌன விரதம் இருப்பார்; ஆனா நீங்களோ வாரம் பூராவும் மௌன விரதம் போலிருக்கு!''

அவன் இலேசாகப் புன்னகைத்தான்: ''அப்படியெல்லாம் ஒண்ணுமில்லே. நீங்களும் பிஸி, நானும் பிஸி. அவ்வளவுதான்.''

# வேர்கள்

கிருஷ்ணமணி

''மேற்கொண்டு என்ன செய்யப் போறதா உத்தேசம்?''

''ரிஸல்ட் வர்ற வரைக்கும் ஊரைப் பார்க்கப் போகணும். அதுக்குப் பிறகு சன்னத் வாங்கி யார்கிட்டேயாவது ஜூனியரா சேரணும். ஊரிலே பாட்டியும், அம்மாவும்தானிருக்கா. அநேகமா அடுத்த அறுவடைக்குப் பிறகுதான் மெட்ராஸ் வருவேன்னு நினைக்கிறேன்.''

''கிராமத்திலே போரடிக்காதா?''

''ம்.... நான் அவுட் அண்ட் அவுட் எ வில்லேஜர்....''

''ஏறக்குறைய நாலஞ்சு மாசம் ஆகுமே?''

''என்ன பண்றது? இப்போ குடும்பம் இருக்கிற நிலைமையிலே எனக்குன்னு வருவாய் இல்லாம நான் மெட்ராஸ்ல தங்கறது உசிதமில்லே. குறைஞ்சபட்சம் மாசம் நானூறு ரூபாயாவது எனக்கு வேணும்!''

''ரியலி! நீங்க வித்தியாசமா எடுத்துக்கலேன்னா.... இங்கேயே தங்கக் கூடாதா?''

''வாட் டு யூ மீன்? விருந்தும் மருந்தும் மூணு நாள்னு சொல்றதுண்டு. இப்பவே நான் அதை மீறிட்டேன். நிர்ப்பந்தம் காரணம்!''

''நீங்க நினைக்கிறப்ல இங்கே யாரும் நினைக்கல்லே!''

''இருக்கலாம். ஒருவருக்கு நம்ம பேரிலே இருக்கிற அன்பும் பரிவும் நிரந்தரமா இருக்கணும்னு நாம நம்முடைய லிமிடேஷன்லை உணர்ந்து செயல்படணும். அள வுக்கு மீறி எந்த ஒரு விஷயத் திலேயும் நான் போக விரும்பல்லே!''

''உங்க பெர்ஸனல் மேட்ட ரைக் கேக்கறேன்னு தப்பா எடுத்துக்காதீங்க. நீங்க அப்பாகிட்டேயே அவருக்கு உதவியா ஏன் இருக்கக் கூடாது? அவருக்கும் உங்களை ரொம்ப பிடிச்சுப் போயிருக்கு.''

''ம்....'' அவன் இப் போது சந்தேகக்குறி தோன்ற அவளைப் பார்த் தான். இவள் இப்படிப் பேசுவது எதற்காக? எதை முகாந்திரமாகக் கொண்டு இப்படிப் பேசு கிறாள்? இல்லை, யதார்த்த மாகக் கேட்கிறாளா?

''யோசிக்க வேண்டிய விஷயம். ஏற்கெனவே அவர்கிட்டே மூணு ஜூனி யர்ஸ் இருக்கா. நாலாவதா என்னையும் சேர்த்துக்க அவர் சம்மதிக்கணும். நான் கேட் டுட்டா, அவரை அது தர்ம சங்கடத்தில் ஆழ்த்தி விடலாம். பழைய நண்பருடைய பிள்ளை, எங்க குடும்ப நண்பர் என்கிற முறையிலே என்கிட்டே அவர் ஒரு தந்தையைப் போல அன்பா இருக்கார். அந்த அன்பை நான் மிஸ்யூஸ் பண்ணிடக்கூடாதில்லையா?''

''நீங்க ரொம்பத்தான் சங்கோஜப்பட றீங்க. யூ மஸ்ட் பீ போல்ட்!''— சொல்லிவிட்டு அவள் புன்னகைத்தாள்.

அவன் அவளை வெகு தீவிரமாகப் பார்த் தான். அவனுடைய பார்வையின் தீட்சண்யம் தன் மேனி முழுவதும் பரவி, தன்னுள் ஒரு பரபரப்பை ஏற்படுத்துவது போன்றிருந்தது யாமினிக்கு. சலனமற்ற ஒரு பார்வை. உண்மையை ஒளிக்காது பேசக்கூடிய திறன் பெற்ற இடசித்தமுள்ள



ஓர் ஆத்மாவின் சத்திய பார்வை.

''நான் எந்த விஷயத்திலே தைரியமில்லாம இருக்கேன்? இல்லே, நீங்க எந்த அர்த்தத்திலே அப்படிச் சொன்னீங்க?''

அவளால் பதில் சொல்ல முடியவில்லை. ''ம்...'' என்று முனகினாள். தன் பார்வையைச் சற்றே தாழ்த்திக் கொண்டாள்.

''ஸியாமளி!'' அவன் குரலில் இப்போது கனிவு நிறைந்திருந்தது.

அவன் தன்னைப் பெயர் சொல்லிக் கூப்பிட்டதே அவளுக்குச் சந்தோஷமாக இருந்தது. வித்தியாதரனுக்கும் வெங்கடேசனுக்கும்தான் எத்தனை வித்தியாசம்! வெங்கடேசன் எதிலும் ஓர் அக்கறையுள்ளவனாக, தீவிரத்தன்மையுள்ளவனாக இருந்தான். எதையும் விளையாட்டாக, மேம்போக்காக எடுத்துக் கொள்வதில்லை. பேசுவதில் உள்ள வார்த்தைகளின் மதிப்பை உணர்ந்து பேசினான். முழுக்க முழுக்க ஒரு

தொழில் நிபுணரைப் போன்று அவனிடம் அலாதியானதொரு கம்பீரம் இருந்தது. அநாவசியமான பேச்சுக்கு அவன் இடமளிக்கவில்லை.

சியாமளி சொன்னாள்: ''நீங்களே அப்பாகிட்டே நேரிடையா கேட்கலாம்னு சொன்னேன்!''

''நோ! அது சரியில்லே. ஒவ்வொரு தொழிலுக்கும் ஒரு நியதி இருக்கு. இந்த விஷயத்தை 'சஜஸ்டிவ்'வா சிவராமனை விட்டுச் சொல்ல வைக்கலாம். அவருக்கு அதனாலே அசௌகரியம் எதுவுமில்லேன்னா நிச்சயமா சம்மதம் கொடுப்பார். அவரை ஒரு 'டெலிகேட் பொஸிஷன்'லே வைக்க நான் விரும்பல்லே. என் மேல இவ்வளவு ஆதங்கத்தோட என் நலன்லே இவ்வளவு அக்கறை காட்டற உங்களுக்கு என்னுடைய நன்றி!''—சொல்லிவிட்டு அவன் தன் இரு கைகளையும் இடுப்புக்குப் பின்னால் ஒருசேரப் பிணைத்துக் கொண்டு நடக்கலானான்.

மேற்கொண்டு அவன் பேச விரும்பவில்லையா? இல்லே, தன்னுடன் விவாதிக்க விரும்பவில்லையா? சிவராமனைக் கொண்டு சொல்லச் சொல்லலாம் என்பதன் நுணுக்கம் புரிந்தது. அவளுக்கும் தனக்கும் இன்னமும் நெருங்கிய பழக்கம் ஏற்படவில்லையென்பதையும், சிவராமனின் நட்பினால்தான் இங்கேதான் தங்க வந்திருப்பதையும் நாசூக்காகச் சொல்லிவிட்டான்.

திடீரென்று அவளுக்கு அவன் தன்னை ஒதுக்குவது போலத் தோன்றியது. மேலும், அவனுடன் பேசவே அவள் விழைந்தாள். ஆனால் சற்றுக் கூச்சமாக இருந்தது. மௌனமாக அவளும் அவனுடன் சேர்ந்து நடக்கலானாள்.

''சியாமளி!''

''ம்.........''

''நான் ஒன்று கேட்டால் தப்பா நினைக்கமாட்டியே... ஐ'ம் ஸாரி, மாட்டீங்களே?''

''என்னை ஒருமையிலே கூப்பிட்டா பரவாயில்லே. என்ன கேட்கப் போறீங்க?''

''என் மேல ஏன் இத்தனை கரிசனம்?''

''ம்......ஒண்ணுமில்லே! ஜஸ்ட் லைக் தட்......''

''ரியலி......''

உங்களை எனக்குப் பிடித்திருக்கிறது என்று சொல்லிவிட வேண்டுமென்று நினைத்தாள். முடியவில்லை. வித்தியாதரனிடம் எவ்வளவு சகஜமாக இருக்க முடிகிறது! இவரிடம் ஏன் அப்படியிருக்க முடியவில்லை? இவருக்கு உள்ள தனித்தன்மையின் விளைவா? தன்னுடைய தைரியம் எங்கே போயிற்று? உண்மையாகவா என்று கேட்பதன் பொருளென்ன? தான் என்ன சொல்ல வேண்டுமென்று இவர் நினைக்கிறார்? சுதாரித்துக் கொண்டு சொன்னாள்:

''நல்லவாளுக்கு ஹெல்ப் பண்றதிலே உள்ள கரிசனம்தான்.''

''ம்..'' அவன் சிரித்தான். ''தாங்க்யூ சியாமளி!'' — சொல்லிவிட்டு அவள் பதிலுக்குக் காத்திராமல் பங்களாவை நோக்கி விடுவிடென்று நடக்கலானான் வெங்கடேசன்.

அவன் படிப்பதற்குப் போகிறான். அறைக் கதவு தாழிடப்பட்டே இருக்கும். உணவு நேரம் போக எஞ்சிய நேரங்களில் அவன் கீழே வருவதில்லை. எதனால்



''உங்க படத்திலே ரெண்டு பாட்டுதானே இருக்கு! ஆனா டைட்டில்லே மூணு கவிஞர்கள் பேர் காட்டறீங்களே!''

''கதாநாயகி சந்தோஷமா இருக்கிற நேரங்களில் அவள் உள்மனசிலருந்து 'லா... லா... லா'னு ஒரு ஹம்மிங் வருதே, அதை மட்டும் ஒருத்தர் எழுதியிருக்கார்!''

—சி. பூபால்சிங்

தன்னுள் அவனைப் பற்றிய ஒரு நினைவோட்டம் இருந்து கொண்டிருக்கிறது? அவனுடைய ஆளுமையின் சக்தியா அது? மெல்ல மெல்லத் தான் அவன்பால் , சர்க்கப்படுவது போல உணர்ந்தாள்.

வித்தியாதரனுடன் சினிமா போனது நினைவிற்கு வந்தது. அவன் அன்று காலை அவளை மகிழ்விக்க மிகவும் பிரயாசை எடுத்துக் கொண்டான். சியாமளியின் மனத்தில் தன்னைப் பற்றி ஓர் உயர்வான அபிப்பிராயம் உருவாக வேண்டுமென்று அவன் எண்ணினான் போலும். ஆனால் வெங்கடேசனுடைய பழக்கம் அவ்விதம் இருக்கவில்லை. அவனுடைய பேச்சிலும் நடத்தையிலும் பாவனைகள் ஏதும் கலந்திருக்கவில்லை போலத் தோன்றியது.

"ஹலோ சியாம்!'' — கூப்பிட்டுக் கொண்டே வித்தியாதரன் வந்தான்.

''ஹலோ!''

''என்ன, காலங்கார்த்தால சிந்தனை பலமா இருக்கு?''

''ஒண்ணுமில்லே!''

''எனக்குத் தெரியும்!''

''அப்ப ஏன் கேட்கணும்?''

''நீ எரிச்சலோட பேச இப்ப என்ன நடந்திட்டது?''

''நான் சாதாரணமாத்தான் சொன்னேன்.''

''நீயும் அவனும் பேசிண்டிருந்ததை நான் பார்த்தேன். நான் வர்றதைப் பார்த்திட்டுத் தான் அவன் போனான் போலிருக்கு!''

''நோ! அவர் படிக்கிறதுக்கு முன்னாடி கொஞ்ச நேரம் உலாத்தறது வழக்கம். பத்துப் பதினைஞ்சு நிமிஷம். அந்த டயம் ஆனவுடனே படிக்கப் போயிடுவார்!...''

வித்தியாதரன் கேலியாகப் பார்த்தான்.

''பேஷ்! அவனைப்பத்தி ரொம்ப அக்கறை எடுத்துக்கிருப்பல இருக்கே. கொடுத்து வச்சவன்.''

''டோன்ட் பி ஸ்டுபிட்! நான் சாதாரணமா சொன்னேன். பாவம்! அவருடைய அப்பா திடீர்னு காலமாயிட்டதனால பதினைஞ்சு நாளுக்கு ஒண்ணுமே படிக்க முடியல்லியாம். அதனால இப்போ கொஞ்சங்கூட ரெஸ்ட் இல்லாம....''

அவன் குறுக்கிட்டான்: ''உனக்கு ரொம்பக் கரிசனம்தான். நான் உன்னோட இவ்வளவு பழகறேன், என்னைப்பத்தி ஏதானும் கவலைப் படறியோ?''

''வித்யா, ப்ளீஸ் ஸ்டாப் டீஸிங் மி! உங்களைப் போல அவரும் எங்க வீட்டு கெஸ்ட். அவருடைய சௌகரியங்களைக்

## பெருந்தன்மை

கவிஞர் தமிழ்முடி தாம் எழுதிய 'பிள்ளைக் கனியமுது' என்ற நூலுக்குக் கருத்துரை பெறுவதற்காகப் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்களை அணுகினார்.

''நான் கருத்துரை தராவிட்டால் என்ன செய்வீர்கள்?'' என்று கேட்டார் பாரதிதாசன்.

''அச்சிட்டுள்ள ஆயிரம் புத்தகங்களையும் எரித்து விடுவேன்!'' என்று உணர்ச்சிவசப்பட்டுக் கூறினார் தமிழ்முடி.

புரட்சிக் கவிஞரின் நெஞ்சம் நெகிழ்ந்து விட்டது.

''சரி, நானே வந்து என் கருத்துரையை வாங்கிச் செல்லுங்கள்!''

மறுநாள் தமிழ்முடி போகவில்லை. இரண்டு நாள் கழித்தே சென்றார்.

''என் கருத்துரையைப் படித்துப் பார்த்தீர்களா?... பிடித்திருந்ததா?'' என்று கேட்டார் பாரதிதாசன்.

''நான் அதை இன்னும் வாங்கிக் கொள்ளவே இல்லையே...'' என்று தயங்கியபடியே கூறினார் தமிழ்முடி.

''நான் அன்றிரவே உங்கள் நூலைப் படித்து, கருத்துரை எழுதி வீட்டில் கொடுத்து விட்டுப் போய்விட்டேனே...''

''நீங்கள் பெரும் கவிஞர். உங்களுக்கு எவ்வளவோ வேலையிருக்கும்.. எனவே, என் நூலைப் படித்து, எழுத ஓரிரு நாட்களாகும் என்றெண்ணித்தான் முன்பே வரவில்லை....''

'' 'சொன்ன மொழி தவறும் மன்னவனுக்கே எங்கும் தோழமையில்லையடி தங்கமே தங்கம்!' என்பது மகாகவியின் வாக்கு.. அப்படியிருக்க, உங்களை வரச் சொல்லிவிட்டு, நான் வாக்குத் தவறலாமா?... அப்படிச் செய்வது ஒரு கவிஞனுக்கு அழகல்ல; இன்னொரு கவிஞனுக்குச் செய்யும் மரியாதையுமல்ல...!''

புரட்சிக் கவிஞரின் பெருந்தன்மையைக் கண்டு பிரமித்துப் போனார் தமிழ்முடி!

கவனிக்கிறதிலே அக்கறை காட்டறதிலே என்ன தப்பு?''

''நான் வெறும் கெஸ்ட் என்கிற அளவிலேதான் இன்னும் இருக்கேனு? சியாமா, என்னை நீ புரிஞ்சிக்கல்லியா? இல்லே, அந்த மாதிரி ஒரு பாவனை பண்றியா? அன்னிக்கு என்னோட சினிமாவுக்கு வந்தப்ப இருந்த மாதிரி இப்ப நீ இல்லே. உன்கிட்டே ஏதோ ஒரு மாறுதல் ஏற்பட்டிருக்காப்ல தோணறது!''

''வெறும் கற்பனை! மேலும், என்னிக்கும் ஒரே மனநிலையிலே இருக்க முடியுமா? உங்களை நான் நல்லா புரிஞ்சிண்டு தான் இருக்கேன். இப்ப என்ன சொல்லணும்கிறீங்க? வெங்கட், கேரியர் மைன்டட் பர்ஸன். அப்படியிருந்தாத்தான் வாழ்க்கையிலே முன்னுக்கு வர முடியும்!''

''ஓகே! உன் மதிப்பீட்டிலே அவன் என்னைவிட உயர்ந்தவனு இருக்கான் போலிருக்கு. எனக்கு கேரியர் மைன்ட் இல்லேங்கிறே! அதுக்கு அவசியமில்லே. நானுத்தான் ஐ. ஏ. எஸ். எழுதறேன்னு சொன்னேன். நான் வேலை பார்க்கணும்கிற கட்டாயம் இல்லே. ஒரே பிள்ளையான எனக்கு எங்கப்பாவே இருபது லட்சத்துக்கு ஆஸ்தி சேர்த்து வச்சிருக்கார். சுயமா பிஸினஸ் பண்றேன்னு சொன்னுக்கூட அவர் ஒண்ணும் சொல்லப் போறதில்லே. எதுவுமே வேணும். மெர்க்காரா எஸ்டேட்டைப் பார்த்திண்டு இருந்தாலே போதும். வருஷத்துக்கு லட்ச ரூபாய் வருமானம் கிடைக்கும்!''

அவள் பதில் பேசவில்லை. மாருக, ஆகாயத்தைப் பார்த்தாள்.

வானம் சாம்பலை அள்ளிப் பூசிக் கொண்டது போல் இருந்தது. காலை நேரத்தின் சுறுசுறுப்பு இன்னமும் இயக்கம் பெறவில்லைபோல் தோன்றியது. மரங்களில் புள்ளினங்கள் குரல் கொடுத்துக் கொண்டிருந்தன.

வித்தியாதரனுக்குத் தான் ஒரு செல்வந்தன் என்ற எண்ணம் மேலோங்கியிருப்பது அவளுக்குப் புலனுகியது. வெங்கடேசனுடைய எளிய நிலைமையிலும் அவனுக்கிருந்த தெளிவான மனவோட்டம் இவனிடம் இல்லாததுபோல் தோன்றியது. வித்தியாதரன் எதற்காக இப்படியெல்லாம் வீணை கற்பனையில் மூழ்கிப் பேசுகிறுன்? நம்மையுமறியாமல் அவன் மனத்தில் தவருனதோர் எண்ணம் ஏற்படச் செய்து விட்டோமா என்றுகூட அவளுக்குத் தோன்றியது.

''வித்தியாதரன்! இப்ப எதுக்காக இதெல்லாம் பேசணும்? நாளைக்கு உங்களுக்கு மனைவியா வரப் போறவ குடும்பத்துக்கு உங்க ஃபைனன்ஷியல் ஸ்டேடஸ் தெரிஞ்சா நல்லது. ஐ'ம் நாட் இன்டெரஸ்டட் இன் இட். உங்களோட சினிமாவுக்கு வந்தேன்கிற காரணத்திஞலேயோ, இல்லே, சகஜமா பழகறேன்கிற காரணத்திஞலேயோ நீங்க என்னைப்பத்தித் தவருன எந்த யூகத்துக்கும் வந்திடாதீங்கோ!''

''அப்போ அன்னிக்கு நான் உன்னோட....''

''புரியறது. ஏன் நிறுத்திட்டீங்க? விரல்களை வருடிக் கொடுத்தீங்க, நான் மறுப்பு சொல்லல்லே. தப்புதான். மேலும், அன்னிக்குத் தோட்டக்காரன் எதிரிலே நான் சத்தம் போட விரும்பல்லே. அவன் என்னைக் குழந்தையிலிருந்து சுமந்து வளர்த்தவன். அவனுக்குக் கோபம் வந்திடும். அந்தச் சிறு காரணத்தை வச்சே நீங்க என்னைத் தப்பா புரிஞ்சிட்டிருந்தா ஐ'ம் ஸாரி ஃபார் தட். நாம ரெண்டு பேரும் ஜஸ்ட் ஃபிரெண்ட்ஸ்தான். உங்க மனசில வருத்தம் ஏற்படணும்னு நான் இதைச் சொல்லல்லே. நான் சுயமா என்னுடைய புத்தி, உழைப்பு இவற்றைக் கொண்டு வாழ்க்கையை அமைச்சிக்கணும்னு நினைக்கிறேன். யெஸ்! என்னுடைய தனித்தன்மையால 'ஒரு பெர்ஸனு' இருக்கவே விரும்பறேன்.''

''ஐ ஸீ! வெளிப்படையா நீ பேசினதுக்கு நன்றி. நான் ஏதேதோ கற்பனையிலே இருந்திருக்கலாம். இட் இஸ் ஆல்ரைட். எதையுமே ஒரு பக்கமா பார்க்கக்கூடாதில்லையா?''

அவளுக்கு என்னவோ போலிருந்தது. காலை விடிந்ததும் விடியாததுமாகத் தன்னுடன் பேச வந்த வித்தியாதரனுடைய மனத்தை நோகடித்து விட்டது போல் இருந்தது. இருந்தாலும் உண்மையைச் சொல்லித் தீர வேண்டிய கட்டத்தில் மௌனமாக இருப்பது தவறு என்று பட்டது. ''ஐ'ம் ஸாரி வித்தியாதரன்!....''

''பரவாயில்லே! ஆனு உன்னுடைய இந்தத் திடீர் மாற்றத்துக்குக் காரணம் வெங்கடேசன்தான்னு நினைக்கிறேன். சைகாலஜி ஸ்டூடண்ட் நான். அதிலே 'எலெக்ட்ரா காம்ப்ளெக்ஸ்'னு ஒண்ணு

வரும். அதாவது, தந்தையைப் பெரிதும் நேசிக்கும் பெண்களுடைய மனோபாவத்தைப் பத்திச் சொல்றதுக்கு அந்த டெக்னிகல் டெர்ம். உம் மனசில நீ வெங்கடேசனை உன் தந்தையின் பிரதி பிம்பமா காண்றே. பிகாஸ் ஹீ இஸ் ஆல்ஸோ எ வுட் பீ லாயர். அதுவும் கிரிமினல் லாயர். உங்கப்பாவைப் போலவே ஆகிருதி. ரிஸர்வ்ட் டைப். இயற்கையா தந்தையைப் பெரிதும் போற்றுகிற பெண்களுக்குத் தந்தையின் அம்சத்தைக் கொண்ட ஆண்களைத்தான் ரொம்பப் பிடிக்கும். நான் சொல்றது சரிதானே?''

''வித்யா!''—அவள் குரலில் சீற்றம் சற்றே தலை காட்டியது. ''நீங்க எதை யெதையோ போட்டு மண்டையைக் குழப்பிக்காதீங்க. உங்களைப் போல வெங்கடேசனும் ஒரு நண்பர். நான் இன்னிக்குத்தான் சேர்ந்தாப்ல அவர் கிட்டே அஞ்சு நிமிஷம் பேசியிருப்பேன். விபரீதமான கற்பனையிலே நீங்க உங்க மனசை வருத்திக்க வேண்டிய அவசிய மில்லை!''

''தாங்க்யூ!''

சிறிது மௌனம் நிலவியது.

''நான் ப்ரெக்ஃப்பாஸ்டுக்கு வெளியே போறேன்....'' அவன் சொன்னதற்கு அவள் மறுமொழி யொன்றும் பேச வில்லை. மறுமொழி கிடைக்காததால் அவன் சலிப்புற்றவன் போல் மெள்ள நடந்து பங்களாவினின்றும் வெளியே போக முற்பட்டான்.

சியாமளி அவன் போவதையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவனைத் தடுத்து நிறுத்த அவள் எண்ணவில்லை. மாறாக, அவனுள்ளத்தில் எத்தகையதொரு பொறாமையுணர்ச்சி சிறிதும் தேவை யற்ற வகையில் குடி கொண்டிருக்கிறது என்று நினைத்தாள்.

தான் அவனுடன் அவ்வளவு தாராள மாகப் பழகியிருக்கக் கூடாது. இனியா வது கவனமாக இருக்க வேண்டும். பல நாட்கள் காலைச் சிற்றுண்டிக்கு வித்தியா தரன் இருந்தது கிடையாது. அதனால் அவனைப்பற்றி யாரும் கேட்க மாட்டார் கள். வீட்டில் செல்லப் பிள்ளையாக வளர்ந்தவன். ஆணின் கவனிப்பில் வள ராமல் பெண்ணின் பார்வையில் வளர்ந்த வன். பிடிவாதம், தான் நினைத்ததைச் சாதித்துக் கொள்ள வேண்டுமென்ற வீம்பு இவற்றுக்கு அடிமையானவன்.



''காசில்லாம சாப்பிட்டா மாவரைக்கச் சொல்வாங்க; இல்லேன்னா தண்ணி இறைக்கச் சொல்வாங்க! ஆனா, இங்கே துப்பாக்கியைக் காட்டி மிரட்ட றீங்களே....என்ன அநியாயம் ஸார் இது?''

''இது 'மிலிட்டரி' ஓட்ட லாச்சே..!''

—சி. பூபால்சிங்



பிரத்தியட்ச உலகில் வாழ்க்கையின் மேடு பள்ளங்களைக் காணாதவன். அவளுக்கு அவன் மீது இரக்கம்தான் பிறந்தது.

செல்லையா நீண்ட ரப்பர் குழாயை எடுத்து நீரூற்றுக் குழாயில் பிணைத்து, வால்வைத் திறந்து செடிகளுக்கு நீர் பாய்ச்ச ஆரம்பித்தான். இவளைக் கண்ட தும் அவன் முகம் மலர்ந்தது.

''புதுசா வந்திருக்கிறவரு வக்கிலுக்குப் படிக்கிறாராமே!''

''ஆமாம் செல்லையா!''

''தங்கமான மனுசன். ஒருவர் சோலிக்கு வர்றதில்லே. பாத்தா ஒரு சின்ன சிரிப்பு. அத்தோட சரி. பெரிய மனுஷங்க வீட்டுப் பிள்ளைன்னா அப்பிடித் தான். எம் பேரு என்னன்னுகூடக் கேக்க லீங்க. சின்னவருகூட காலேசிலே படிச்சவராமே?''

''ஆமாம் செல்லையா!''

''நல்லாருக்கட்டும்!''

வெயில் படர ஆரம்பித்தது. அவளுக் குக் காலை உணவு சாப்பிட்டால் பரவா யில்லை போல் தோன்றியது. அன்றைய செய்தித்தாளைக்கூட இன்னமும் தான் படிக்கவில்லையென்பது நினைவிற்கு வந்தது. சிந்தனையோடு பங்களாவை நோக்கி நடந்தாள்.

(தொடரும்)

# வேர்கள்

**10**

## கிருஷ்ணமணி

பேங்கர் சீனுவின் மகன் சதீஷ் பொறியியல் பட்டப் படிப்பின் கடைசி செமஸ்டரை எழுதி விட்டு, தடபுடலாக வந்து இறங்கினான். சீனுவின் சாயலைவிடக் காமாட்சியின் சாயல் அவனிடம் அதிகம் இருந்தது. நடையுடை பாவனையிலும், பேச்சிலும் சற்று நிதானமானவன் தான். பார்ப்பதற்கு நன்றாகவே இருந்தான். அவனுக்கு சென்னையில் ஹாஸ்டலில் தங்கிப் படித்துக் கொண்டிருந்தபோது சிற்சில பழக்கங்கள் ஏற்பட்டிருந்தன.

மிகுந்த கட்டுப்பாட்டுடன் வளர்க்கப் படும் குழந்தைகள், அந்தக் கட்டுப்பாடு கள் தங்களுடைய நலனுக்காகவே விதிக்கப்பட்டுள்ளன என்று உணராமல், அதை மீறுவதாலேயே தங்களுடைய தனி மனிதச் சுதந்திரத்தைப் பெற முடியும் என்று எண்ணத் தலைப்படு கின்றனர். தங்களுடைய ஆளுமையை இப்படிப்பட்டவர்கள் ஒரு வக்கரித்த போக்கில் வளர்த்துக் கொள்ளவே முற்படுகின்றனர். குறிப்பாக, 'டீன் ஏஜ்' பருவத்தில் ஆரம்பிக்கும் இந்த மனப் போராட்டம், அடிமன நினைவாகத் தங்கி, பருவ வயதில் மேலெழும்பி விடுகிறது. ரகசிய மீறுதல்கள், ஒப்புக் கொள்ளப்பட்ட நியதிகளை உடைத் தெறிந்து வெளியேறுதல் போன்றவையே சாகசச் செயல்களாகக் கருதப்படு கின்றன.

''சதீஷ்... வாடா!... காமு! உன் பிள்ளை வந்திருக்கான்!''—சீனு குரல் கொடுத்தார்.

மகனை உற்றுப் பார்த்தார். இருபத்து நான்கு வயதுதான் அவனுக்கும் ஆகிறது. ஆனால் முகம் சற்று ஒட்டிப் போயிருந்தது. உதடுகள் கறுத்துக் காணப்பட்டன. ஏனோ அவரையு மறியாமல் வெங்கடேசனுடன் தன் மகனை ஒப்பிட்டுப் பார்த்தார். இத்தனைக் கும் சதீஷ் செலவு பண்ணத் தாராள மாகப் பணம் கேட்டு எழுதியபோதெல் லாம் தான் அனுப்பி வைத்தது நினை விற்கு வந்தது. செலவாளியான மகன் தந்தைக்கு ஒரு பாரமாக மட்டு மல்லாமல், பிரச்னைக்குரியவனாகவும் ஆகி விடுகிறான்.

''பரீட்சையெல்லாம் எப்படி எழுதினே?''

''நல்லாத்தான் எழுதியிருக்கேன்.''

வண்டிக்காரன் பெட்டிகளை எடுத்துக் கொண்டு வந்து உள்ளே வைத்தான். பர்ஸிலிருந்து ரூபாய் நோட்டொன்றை எடுத்து அவன் கையில் கொடுத்தான் சதீஷ்.

சலாம் போட்டுவிட்டு அவன் போனான்.

சீனு கேட்டார்: ''பஸ் ஸ்டாண்டி லிருந்து நம்ம வீட்டுக்கு வரத்துக்கு எட்டணா கொடுத்தால் போதாதோ?''

சதீஷ் அவரை விநோதமாகப் பார்த் தான்: ''மெட்ராஸ்ல குறைஞ்ச பட்சம் இரண்டு ரூவா தரணும்.'' அவன் சாக்ஸைக் கழற்றிக் கொண்டிருந்தான். வலது கை ஆள்காட்டி விரலுக்கும் நடுவிரலுக்கும் இடையே நுனியில் மஞ்சளாகக் கறை படிந்தாற்போல...

புகை பிடிப்பவர்களின் விரல் நுனியில் தான் அப்படியோர் அடையாளத்தைப் பார்த்திருக்கிறார் சீனு. சதீஷிடம் இது பற்றிப் பிறிதொரு சமயம் ஜாடையாகப் பேச வேண்டும்.

தலை நிறைய முடி வைத்திருந்தான்.

''முடி வெட்டிக்க மாட்டியோடா?''

ஊருக்கு வந்ததும் வராததுமாகச் சற்றும் இங்கிதம் இல்லாமல் பேசும் தந்தையை அவன் பார்த்தான்.

''நேத்துத்தான் வெட்டிண்டு வந்திருக்கேன். ஸ்டெப் கட்டிங். அஞ்சு ரூவா சார்ஜ். ஷாம்பூ போட்டு மாஸேஜ் பண்ணினால் பத்து ரூவா.''

''என்னது! முடி வெட்டிக்கப் பத்து ரூவாயா?'' சீனுவுக்கு நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக் கொண்டது போல் ஆகிவிட்டது.

சதீஷ் சிரித்தான்: ''மெட்ராஸ்லே எல்லாமே அப்படித்தாம்ப்பா. ஒரு பேண்ட்டும் ஷர்ட்டும் டிரை வாஷுக்குப் போட்டா மூணரை ரூவா. நல்ல ஓட்டலா பார்த்து டிபன் சாப்பிடணும்னு போனா அஞ்சு ரூவா இல்லாம நுழையக் கூடாது. கூட்டம் ஜாஸ்தி. ரேட்டும் ஜாஸ்தி. மாசம் குறைஞ்ச பட்சம் ஒரு ஆள் டீஸன்டா வாழ்க்கை நடத்தணும்னு சொன்னா அறுநூறு ரூவா வேணும்!''

''ஆங்! இங்கே அஞ்சு பேர் உள்ள குடும்பமே வயிறாரச் சாப்பிடுமேடா! என்னவோ தெரியல்லே. நாடு எங்கே போறதுன்னே தெரியல்லே. நம்ம வக்கீல் வீட்டு வெங்கடேசன் லா படிக்கிறானே. நானூறு ரூவாயிலே காலம் தள்ளியிருக்கான்.''

''மங்களபுரம் வெங்கடேசனா?''

''ம்......''

''அவனுக்கு அவங்க ஹாஸ்டல்லே மடிசஞ்சின்னு பேரு. நான்கூட ஒரு தடவை அவன் ரூமுக்குப் போயிருந்தேன். ஸ்டவ் வச்சிண்டு பால் காய்ச்சிண்டிருந்தான். அவனை மாதிரி இருந்தா முந்நூறு ரூவாயே ரொம்ப ஜாஸ்தி...'' ஷூக்களைக் கழற்றி விட்டுச் சிரித்தான்.

''கஷ்டம் தெரிஞ்சவன்.''

''கஞ்சின்னுகூட அவனுக்குப் பேர் வச்சிருக்காங்களாம். அப்பா அனுப்பிச்சிண்டிருந்த பணத்திலே மிச்சம் பிடிச்சு



சேவிங்ஸ்லே பணம் போட்டு வச்சிருக்காரும். ஆள் மட்டும் வாட்ட சாட்டமா இருக்கான். ஹாஸ்டல் மெஸ்லே சாப்பாட்டை ஒரு கை பார்ப்பான்னு சொன்னுங்க. புடலங்காய் கூட்டோ, இல்லே சேம்பு கறியோ எதுவானுலும் அவனுக்கு ஒண்ணுதான். வளைச்சு ஒரு வெட்டு! ஹோட்டல், சினிமா, மூச்.... சரியான இதுப்பா அவன்.''

காமாட்சி வாயிற்புறம் வந்தவள் மகனைப் பார்த்தாள். அவன் சற்று உயரமாக இருந்ததுபோல் தெரிந்தது.

அவன் தாயைப் பார்த்துப் புன்னகைத்தான்.



''ஏண்டா அண்ணு! (அவனே எல்லோரும் அப்படித்தான் கூப்பிட்டனர்.) அடுத்த வாரம்தான் வரப் போறேன்னு உங்கப்பா சொன்னுரே!''

''பரீட்சை முடிஞ்சிடுத்தும்மா—ஹாஸ்டல்லே ரொம்ப தூரத்திலேருந்து அதாவது வெளி ராஜ்யங்களிலேருந்து வந்திருக்கறவங்கதான், டிரெயின் ரிஸர்வேஷன் கிடைக்கலேனு இருக்காங்க. எனக்கென்ன! ஆம்னிபஸ்லே வந்துட்டேன். ஜானகி எங்கே?''

''கோயிலுக்குப் போயிருக்கா.''

''அவளுக்கு ஒரு அமெரிக்கன் ஜார்ஜெட் வாங்கிண்டு வந்திருக்கேன். இருநூறு ரூவா.''

''தங்கை மேலே கரிசனம். உள்ளே வா! காபி தரேன்......!''

மாத முதலில் எண்ணூறு ரூபாயும், பிறகு முந்நூறும் தான் அவனுக்கு அனுப்பியதும், அவன் மாத நடுவிலேயே வந்து இறங்கியிருப்பதும்... இருபது நாட்களுக்கு ஒரு மாணவனுக்குச் செலவு இவ்வளவா? சீனு கணக்குப் போட்டுப் பார்த்துச் சலிப்படைந்தவரானர்.

சதீஷ் உள்ளே போனன். டவுன் என்றழைக்கப்பட்டாலும் சற்றுப் பெரிய கிராமம்தான் அந்த ஊர் என்ற எண்ணமும் சென்னை வாழ்க்கைக்கு எவ்வளவு விரைவில் திரும்பிப் போக முடியுமோ அவ்வளவு சீக்கிரம் போய்விட வேண்டுமென்றும் அவன் மனம் சிந்தித்தது.



''பெண் நர்ஸாயிருக்கிருள், சரி. சமைக்கத் தெரியுமா?''

''ஓ! பார்லி கஞ்சி, நொய்க் கஞ்சியெல்லாம் பிரமாதமா வைப்பாளாக்கும்!''

—எம். பூங்கோதை

சீனுவின் ரசனையே வித்தியாசமானது. அவர் மனம் இப்பொழுது மகனைப் பற்றியே தீவிரமாக நினைத்தது. சதீஷுக்கு வாழ்க்கையில் ஒரு நிரந்தரமான பிடிப்பு ஏற்படச் செய்ய வேண்டும். அவன் விருப்பப்படியே கம்பெனியொன்று வைத்துக் கொடுத்துவிட வேண்டியதுதான்.

ஜானகிக்கு வரன் கேட்டு மங்களபுரம் போனது நினைவில் நிழலாடியது. சுந்தரிப் பாட்டி பிடி கொடுத்துப் பேசவில்லை. மேலும் வெங்கடேசனைக் கேட்காமல் எதுவும் சொல்வதற்கில்லை என்று சொல்லி விட்டாள். அதனுல் சதீஷுக்குப் பெண் பார்க்கும் இடத்திலேயே பிள்ளையும் கிடைத்து விட்டால் ஜானகியைக் கொடுத்து விடலாம். செலவும் குறையும். அந்த மாதிரி ஓரிடம் இப்போது வந்திருக்கிறது. பையனுடைய அபிப்பிராயத்தைக் கேட்பதா, வேண்டாமா என்பதுதான் பிரச்னை. அவன் இருக்கும் நிலையைப் பார்த்தால் அவனைக் கேட்பதுதான் உசிதம் என்று பட்டது.

''ஐயா!...''—அவருடைய வேலையாட்களில் ஒருவனுன மாரிமுத்து வந்து நின்றுன். கடைகள், காய்கறி வியாபாரிகள் இவர்களிடம் தண்டலுக்குச் செல்பவன் அவன். சீனு பேங்கர் என்று பெயரெடுத்த பிறகும்கூட தன் தொழிலின் ஆரம்ப காலப் பிரிவான அந்தச் சில்லறைக் கடன் (ஐந்நூறு ரூபாய்க்குக் குறைவான கடன்கள் இந்தப் பிரிவில் வந்தன) டிபார்ட்மெண்டை மூடவில்லை. அதில் வட்டி விகிதம் சற்றுக் கூடுதல்தான். நூற்றுக்கு ஐந்து ரூபாய்.

''என்ன மாரி?''

''சுப்பையாவுக்கு இருநூறு வேணுமாம். காய்கறிக் கடை போடப் போருனும்.''

''அதுக்கு ஏன் அவ்வளவு?''

''சோடா கலரு கூட விப்பான் போலும்.''

''ம்... பார்ப்பம். நம்ம மகன் வந்திருக்கான். வள்ளி நேத்து பணம் கொடுத்தாளா?''

''இல்லீங்க......''

''அவ கடைக்குப் போயி உருளைக் கிழங்கு, வெங்காயம், தக்காளி இதுலே

ரெவ்வெண்டு கிலோ வாங்கி வந்துடு. ஜல்தி போ. கொல்லைப்புறமா போயி அம்மாகிட்டே பை வாங்கிக்கிட்டுப் போ!''—சொல்லிவிட்டு அவர் வெளியே புறப்பட்டார்.

காபியைக் குடித்ததும் சதீஷ் பெட்டியைத் திறந்தான். அமெரிக்கன் ஜார்ஜெட் புடவையை எடுத்தான். கோயிலுக்குப் போயிருந்த அவன் தங்கை ஜானகி வந்து கொண்டிருந்தாள்.

''அண்ணு!''

''வா ஜானகி! உனக்குத்தான் இதை வாங்கிட்டு வந்தேன்!''

நல்ல பச்சை நிறத்தில், ஓரங்களிலும் தலைப்பிலும் எம்பிராய்டரி பூக்கள் சிரித்து நிற்க, புடவை மிக நன்ருக இருந்தது.

''ரொம்ப சன்னமா இருக்கே!''

''இதான் இப்போ ஃபாஷன்!''

''அப்பா என்ன சொல்லுவாரோ?''

''அம்பது வயசு மாமிகள்கூட மெட்ராஸ்லே அமெரிக்கன் ஜார்ஜெட் கட்டிக்கிரு. நீ சுத்த கர்நாடகமா பேசறியே ஜானு! இருநூறு ரூவா போட்டு வாங்கினது!''

ஜானகியின் கண்கள் நன்றியைக் காட்டின. எடுத்து அதைத் தோளில் போட்டுக் கொண்டு, கண்ணுடியில் பார்க்க உள்ளே போனுள்.

சதீஷுக்கு அனுசூயாவின் நினைவு வந்தது. மேரிக் கல்லூரி மாணவி. அவனுடன் நெருங்கிப் பழகியவள். ஆந்திர மாநிலத்தைச் சேர்ந்தவள். அவள் குடும்பத்தார் சினிமா பட விநியோகக் கம்பெனி வைத்திருந்தார்கள் என்று அவள் சொல்வாள்.

அவள்தான் எத்தனை அழகு! நல்ல உயரம். அதற்கேற்ற உடல் வாகு. சிரித்த முகம். கண்களில் மை தீட்டிக் கொள்ளத் தவறவே மாட்டாள். அவள் நடந்து செல்லும் பொழுது பின்னழகை ரசித்துப் பார்க்க... அவன் மனம் கிளுகிளுந்தது. ஆங்கிலத்தில் அவள் உரையாடும் பாங்கே தனி. அவள் பேச்சில் கிளி கொஞ்சும். சிறிது நாள் பழக்கத்திலேயே மிகவும் நெருக்கமாக அவள் இவனுடன் ஒட்டிக் கொண்டு விட்டாள். சினிமா, பீச், ஓட்டல் என்று அவளுடன் இன்பமாகக் கழித்த மாலை நேரங்கள். பணம்தான் சற்றுத் தாராளமாகச் செலவு செய்யும்படியாக ஆகிவிட்டது. அத்தனை நெருங்கிய பழக்கத்திலும்கூட அவள் ஓர் எல்லைக்கோட்டுக்குள்ளேயே இவனை நிறுத்தி வைத்திருந்தாள். அனுசூயாவைப் போன்ற ஒரு பெண் மனைவியாக வாய்த்தால் வாழ்க்கை எவ்வளவு இன்பமாக இருக்கும்! நாகரிகமான சமுதாயத்தில் பழக அப்படிப் பட்டவளால்தான் முடியும்......

சென்னைக்குச் சீக்கிரமே திரும்பிவிட வேண்டும். தினசரி அவளைப் பார்க்காவிட்டால் எதையோ இழந்து விட்டதைப் போல மனம் தவிக்கும்.

''அண்ணு, உன்னை அம்மா கூப்பிடரு!''—ஜானகி அவன் சிந்தனையைக் கலைத்தாள்.

''வரேன் ஜானு!''

பிரயாண உடைகளைக் கழற்றி எறிந்தான். பெட்டியிலிருந்து கைலி ஒன்றை வெளியே எடுத்துக் கட்டிக் கொண்டான். அவனுக்கு உடனே புகை பிடிக்க வேண்டும் போல் தோன்றியது. காபி குடித்தவுடன் சிகரெட் பிடிப்பது வழக்கமாகி விட்டது. மாடி அறைக்குச் சென்று விடவேண்டும்.

''என்னம்மா?''

பிள்ளையின் புதுக் கோலத்தைப் பார்த்ததும் காமாட்சி திடுக்கிட்டாள்.

''என்னடாது, கைலி கட்டிண்டு



**காணவில்லை!**

மகனே முத்து! நீ எங்கிருந்தாலும் உடனே வந்து விடு. இனியும் நான் எழுதிய கதைகளை உனக்குப் படித்துக் காட்டி உன் பிஞ்சு மனத்தை நோகச் செய்யமாட்டேன். இது சத்தியம்.

உன் தந்தை,
எழுத்தாளர் ஏகலைவன்.

—வெ. சீதாராமன்



''ஏம்பா! போன மாசம் இதே ஹோட்டல்லே வடை பெரிசா இருந்தது.. இப்ப சின்னது பண்ணிட்டீங்களே!''

''அதுதான் தப்பு! ஹோட்டலே இடிச்சுக் கட்டி பெரிசு பண்ணியிருக்கோம்.. அதனாலே உங்களுக்கு வடை சின்னதா தெரியுது!''



வந்து நிக்கறே? வேட்டி இல்லியோ கட்டிக்க?''

அவன் சிரித்தான்: ''இது ரொம்ப சௌகர்யம்மா. அழுக்கும் தெரியாது. இதுவும் துணிதானேம்மா!''

''உங்கப்பா என்ன சொல்வாரோடா! நமக்கெதுக்குடா இதெல்லாம்? ஆசாரம் பார்க்கிற குடும்பம்டா!''

அவன் சிரித்தான்: ''நம்ம ஆசாரம் எல்லாம் துணி உடுத்தறதிலே, சாப்பிடறதிலே, சகுனம் பார்க்கிறதிலே தானிருக்கு. பிராம்மணன் வித்தைகளைப் படிச்சுத் தெரிஞ்சிண்டு, பிறத்தியாருக்கு அதை உபதேசிக்கிற குருவா இருக்கணும். நம்ம குடும்பத்திலே என்ன பண்றோம்? வட்டி வியாபாரம். அது அனுசாரம் இல்லியாம்மா? நான் எஞ்சினீயர். பழைய காலத்திலே தச்சனுர், கொத்தனுர், கருமார் பண்ணின வேலேதான் என்ஜினீயரிங்னு புதுப் பேரோட இப்ப இருக்கு. அதை இங்கிலீஷ்லே படிக்கிறோம். விரிவா படிக்கிறோம். பட்டம் வாங்கறோம். ஆனு தொழில் அதுதான்......''

''அகட விகடமா பேசாதேடா. போகட்டும். உன்பாடு உங்கப்பா பாடு. வெந்நீர் போடறேன். எண்ணெய் தேய்ச்சுக்க!''

''வேணும். நான் ஷாம்பூ போட்டுக் குளிக்கிறவன்!''

காமாட்சியின் முகத்தில் ஆச்சரியம் படர்ந்தது.

சதீஷ் பெட்டியை மூடினுன்.

''அம்மா! மாரிமுத்து உன்னேக் கூப்பிடருன் போலிருக்கு.''

காமாட்சி கொல்லேப்புறம் போனுள்.

முன்புறம் சென்று பார்த்தான். அப்பாவின் மிதியடிகளேக் காணவில்லே. வெளியே போயிருக்கிறுர் என்று தெரிந்து மாடிப்படியேறிச் சென்றுன்.

அந்த அறை பூட்டப்படாமல் இருந்தது. கதவுகளேத் திறந்தான். தரையில் தூசு படிந்திருந்தது. ஜன்னல் களேத் திறந்து வைத்தான். மாடியிலிருந்து பார்த்தால் மார்க்கெட், பஸ் ஸ்டாண்டு, மணிக்கூண்டு எல்லாம் தெரியும். எங்கும் புழுதிமயம். குப்பை கூளங்கள். 'இந்த ஜனங்களுக்குச் சுத்தமா இருக்கணும்னு எப்போ தெரியும்? டவுன் பஞ்சாயத்துத் தலைவர் அப்பாவின் தயவில் இருப்பவர். இந்த நாட்டில் பொதுப்பணியில் ஈடுபடுகிறவர்கள் பெரும்பாலும் தங்கள் தனிப்பட்ட நலனே விருத்தி செய்து கொள்வதில் கொள்ளும் அக்கறையைத் தாங்கள் மேற்கொண்ட பணிகளில் காட்டுவதில்லே. மக்களும் அதைப் பற்றி அக்கறை கொள்வதாகத் தெரியவில்லே.

சிகரெட் பெட்டியையும், தீப்பெட்டியையும் பனியனுக்குள்ளிருந்து எடுத்தான். ஒன்றை உருவியெடுத்துப் பற்ற வைத்துக் கொண்டான். மாடி அறையைச் சுத்தம் செய்யச் சொல்ல வேண்டும். தங்குவதற்கு ஏற்ற இடம்.

இரண்டு நிமிடங்கள்தாம் ஆகியிருக்கும்.

''அண்ணு!''

—ஜானுவின் குரல்.

அவன் தலேக்குமேல் சுருள் சுருளாகப் புகை போய்க் கொண்டிருந்தது.

''ஜானு!''

''ஐயையோ! என்னண்ணு இது?''

அவன் அவள் வாயைப் பொத்தினுன்: ''கத்தாதே! என்ன ஆயிடுத்து இப்போ? இது எனக்குப் பழகிப் போச்சு... ஜானு நல்ல பெண்ணேல்லியோ? இந்த ரூமைப் பெருக்கி, ஒட்டடை போக சுவர் மூலேயெல்



''நம்ம விமானம் விபரீதமான உயரத்துக்கு வந்திடுச்சோ..?''

''ஏன் இப்படிக் கேக்கறீங்க?''

''வெளியிலே பாருங்க..... கிரீடமும், அங்கவஸ்திரமுமா யார் யாரோ சிரிச்சுக்கிட்டுப் போற மாதிரி தெரியுது!''

—முத்து. தங்க. ஐயப்பன்

லாம் சுத்தம் பண்ணி வைக்கச் சொல்லு. நான் இங்கேதான் தங்கப் போறேன். கீழே நமக்குச் சரிப்படாது.''

அவள் மிரள மிரள அவன் வாயையே பார்த்தாள். அருவருப்பு அவள் கண்களில் மிதந்தது.

''இந்த ரூமை யூஸ் பண்றதே கிடையாது. தாத்தா வந்து போனதுக்குப் பிறகு இப்படியேதானிருக்கு. அம்மா என்ன சொல்லுவாளோ?''

''ஒண்ணும் சொல்லமாட்டா. ஏய், ஜானு! நீ பார்த்ததை அம்மாகிட்டே சொல்லாதே.''

''ஏன்? சிகரெட் பிடிக்கணும்னு நினைச்சால் தைரியமா எல்லார் எதிரிலேயும் பிடிக்க வேண்டியதுதானே?''

''ஜானு!...ப்ளீஸ்..! அம்மா வருத்தப்படுவோ, நல்ல பெண்ணோல்லியோ?''

அவள் சிரித்துக் கொண்டே, மாடியில் துணிகளை உலர்த்தப் போய்விட்டாள்.

வயது வந்த தன்னைப் போன்ற வாலிபர்களின் தனிப்பட்ட வாழ்க்கையில், விருப்பு வெறுப்புகளில் பெற்றோர்கள் தலையீடு இந்த நாட்டில் சற்று அதிகமாகத்தானிருக்கிறது. நாசூக்காக அவர்கள் தங்களுடைய எல்லையை வரையறுத்துக் கொண்டு, அநாவசியத் தலையீட்டைக் குறைத்துக் கொண்டால் என்னவென்று அவனுக்குத் தோன்றியது.

ஒருவனை வளர விடவேண்டும். அவனுடைய மனமும், அறிவும் உடல் வளர்ச்சியுடன் விருத்தியாக வேண்டும். அவனவன் வாழ்க்கையை அவனவன் போக்கில் விட்டால்தானே? பெற்றோரைச் சார்ந்திருக்கும் நிலையினால்தான் இதெல்லாம். தலைமுறை இடைவெளி இட்டு நிரப்ப முடியாதது. இதை ஏன் அவர்கள் புரிந்து கொள்ளக்கூடாது? தலைமுறைக்குத் தலைமுறை வாழ்வைப் பற்றிய கண்ணோட்டம் மாறுபடவே செய்கிறது. இந்தப் பிரத்தியட்ச உணர்வைத் தன் பெற்றோரிடத்தில் சொல்ல வேண்டும். ஜானு இங்கேயே வளர்ந்து விட்டதனால் பழைய தலைமுறையினரைப் போலவே நினைக்கிறாள். அவளிடம் புதுமையான கருத்துக்கள் சிறிதும் இல்லை.

அனுசூயா! அவள்தான் எவ்வளவு மாறுபட்டவள்! ஜானுவின் வயதுதான் இருக்கும் அவளுக்கும். ஆனால் தனியாக அவளால் எதையும் சாதிக்க முடியும். அதற்கேற்ற மனோதிடம், உலக நடப்பின் விவகார அறிவு அவளுக்கு இருந்தது. அவளைப் பற்றி நினைக்க நினைக்க மனத்தில் ஓர் உல்லாசம் பிறந்தது. எப்படியும் அம்மாவிடமாவது அவளைப் பற்றிச் சொல்லிவிட வேண்டும். சிந்தனையின் தீவிரத்தில், புகையின் இழுப்பில் அவன் தன்னையே மறந்தவனாக இருந்தான்.

(தொடரும்)

அறிமுகப் படுத்துகிறோம்

புதிய

# பிரெஸ்டீஜ்

காஸ்கெட்
ரிலீஸ்
ஸிஸ்டம்

Patent pending




100%
பாதுகாப்பு

ஒப்பற்ற காஸ்கெட்
ரிலீஸ் ஸிஸ்டம் என்ற
அமைப்பு இப்புதிய
பிரெஸ்டீஜில் இருப்பதால்
அது உங்களுக்கு மிகுந்த
பாதுகாப்பைத் தருகிறது

## 7 சிறிய பர்னரையே அதிகமாக உபயோகியுங்கள்

பெரிய பர்னரினால் உணவு சமைப்பதற்கு நேரம் குறையும். ஆனால் சிறிய பர்னரைவிட 10% கூடுதலாக எரிபொருள் செலவாகும். அப்படி நேரத்தை மிச்சப்படுத்தியதால் பயன் உண்டா என்று உங்களையே கேட்டுக் கொள்ளுங்கள். சிறிய பர்னரை உபயோகிப்பதால் ஒவ்வொரு தட்வையும் எரிபொருள் மிச்சமாகிறது.

## 8 சுத்தமான பர்னரும் உதவுகிறது

உங்கள் பர்னர் அடைத்துக்கொண்டிருக்கிறதா ? அல்லது திரிகளை மாற்ற வேண்டுமா ? உங்கள் ஸ்டவ்களை வழக்கமாகத் துடைத்து துப்புரவாக வைத்துக் கொள்ளுங்கள். நன்றாக வேலை செய்யும்.

இங்குள்ள தகவல், பெட்ரோலியம் அமைச்சகத்தின் ஒரு பிரிவான பிஸிஆர்ஏ நடத்தி, நன்கு சோதித்து, பயனபடுததிப் பார்க்கப்பட்ட ஆராய்ச்சிகளின் முடிவாகும். இன்று நம்மை எல்லாம் பாதித்துக்கொண்டிருக்கும் உலகம் தழுவிய எண்ணெய் நெருக்கடியை எதிர்பார்த்து 4½ வருஷங்களுக்கு முன் அமைக்கப்பட்ட பிஸிஆர்ஏ, வீடுகள், பண்ணைகள், தொழிற்சாலைகள், சாலைகள் ஆகியவற்றில் எரிபொருளை அதிகத் திறனுடன் பயன்படுத்துவதை வளர்ப்பதற்கு உதவுகிறது ஏனெனில் மாற்று எரிபொருள் வசதிகளைக் கண்டுபிடிக்கும் வரை, உலகின் குறைந்து வரும் எண்ணெய் இருப்புக்களை நாம் சிறந்த முறையில் பயன் படுத்திக்கொள்ள வேண்டியிருக்கிறது.




பொதுமக்களின் நலனைக் கருதி பிஸிஆர்ஏ வெளியிட்டுள்ளது

**PETROLEUM CONSERVATION RESEARCH ASSOCIATION**

709-711, Surya Kiran Building
19 Kasturba Gandhi Marg New Delhi-110001

**ஏனெனில் எண்ணெய் நிரந்தரமாகக் கிடைக்கப்போவதில்லை.**

### எண்ணெய் நெருக்கடி—
### நீங்கள் அக்கறை கொள்ள வேண்டியது.

இந்த யோசனைகளைக் கடைப்பிடித்தால் உங்கள் எரிபொருள் செலவு பெரிதும் குறையும். நீங்களும் ஏதேனும் யோசனை இருந்தால் தெரிவிக்கலாம். அது எங்கள் இயக்கத்தின் வளர்ச்சிக்கு மிகவும் பயன்படும்.

தகவல் ஏதேனும் தேவைப்பட்டால் எங்களுக்கு எழுதுங்கள். உங்கள் வாகனம் என்ன என்பதையும், வீட்டில் உபயோகிக்கும் எரிபொருள் என்ன என்பதையும் குறிப்பிடுங்கள். உபயோகிப்பாளர்களின் குழுக்களுக்கென ஆய்வுக்கூட்டங்களை நாங்கள் ஏற்பாடு செய்ய முடியும். அவற்றில் ஒரு நிபுணர் பேசுவார். திரைப்படங்கள் காட்டப்படும். படங்கள் கொண்ட சிறு பிரசுரங்களை விநியோகிக்க ஏற்பாடு செய்ய முடியும். உங்களுக்கு ஆர்வம் இருந்தால், ஆய்வுக்கூட்டத்தில் கலந்து கொள்ள விரும்புவோரின் எண்ணிக்கையையும், அவர்கள் எத்தகையவர்கள் என்பதையும் விவரமாக எங்களுக்கு எழுதுங்கள்.

தொடர்பு கொள்ளவும்: ப்ராஜக்ட் மானேஜர்
பெட்ரோலியம் கன்ஸர்வேஷன் ரிஸர்ச் அஸோஸியேஷன்

**இந்தச் செய்தி மூன்று கோடிக்கும் அதிகமான வீடுகளுக்குக் கிடைக்க வேண்டும். இதை பரவச் செய்யுங்கள்**

எரிபொருள் செலவைக் குறைக்க இதை வெட்டி வைத்துக்கொள்ளுங்கள்

HTD-PCR-6967

# வேர்கள்

## கிருஷ்ணமணி

## 11

நேர்வுகள் முடிந்து விட்டன. பெட்டிகளைத் தயார்ப்படுத்தி வைத்தாயிற்று. ஊருக்குப் புறப்பட வேண்டும். ரயிலில் இடம் கிடைக்கவில்லை. ஆம்னி பஸ்ஸில்தான் போக வேண்டும்.

வெங்கடேசன் ஊருக்குத் திரும்புமுன் தனக்கு ஏறக்குறைய மூன்று வாரங்கள் தங்க அனுமதியளித்து, ஒரு குறையுமில்லாமல் உபசரித்து, உறுதுணையாக இருந்த முத்துசாமி குடும்பத்திலவரைப் பற்றி நினைத்துக் கொண்டான். நல்லவர்கள், பண்பு மிக்கவர்கள்.

அவன் கீழே இறங்கிப் போக எண்ணித் தன் அறைக் கதவைச் சாத்திவிட்டுத் திரும்பினான். வித்தியாதரன் தன்னையே பார்த்துக் கொண்டு நிற்பதையும், அவன் தன்னுடன் பேசவிருப்பதுபோல் இருப்பதையும் கவனித்தான்.

''ஹலோ, மிஸ்டர் வித்தியாதரன்! நான் இன்னிக்கு ஊருக்குப் போறேன். உங்களை 'மீட்' பண்ணினதிலே ரொம்ப சந்தோஷம். பரீட்சை முடிஞ்சிட்டதா?''

அவன் நெருக்கமாக வந்தான்: ''மிஸ்டர் வெங்கடேசன்! என் ரூமிற்கு வர முடியுமா?''

''ஓ யெஸ்!''

இருவரும் வித்தியாதரனின் அறைக்குள் நுழைந்தார்கள். வித்தியாதரன் கதவைத் தாழிட்டான்.

மேஜையின் மீது ஆஷ்-ட்ரே ஒன்று இருந்தது. எரிந்து போன தீக்குச்சிகள் சில தரையில் கிடந்தன. ட்ரே நிரம்பியிருந்தது. வித்தியாதரனின் கண்கள் சற்றே சிவந்திருந்தன.

''என்ன சமாசாரம்? மூணு வாரம் ஒரே வீட்டிலே தங்கியிருந்தும் நாம பேச முடியல்லே. இனிமே நான் ஃப்ரீயா இருக்க முடியும். எக்ஸாம் எப்படின்னு சொல்லல்லியே?''

''சியாமளி சொல்லியிருப்பாளே!''

''ம்......இல்லே. நான் அவளைக் கேட்கல்லே. பிராக்டிகலி யாரோடவும் பேச எனக்கு நேரம் இருக்கல்லே!''

வித்தியாதரன் சந்தேகத்தோடு பார்த்தான். உண்மையிலேயே தானுண்டு தன் வேலையுண்டு என்றிருப்பவன்தானா இவன்! இவனால் எப்படி இந்த அளவிற்குத் தன்னை மற்றவர்களிடமிருந்து அந்நியப்படுத்திக் கொள்ள முடிகிறது? இல்லை, நம்மிடம் உண்மையை மறைத்துப் பேசுகிறானா?

''என்ன மிஸ்டர் வித்தியாதரன், பதிலே இல்லே?''



''உனக்கு நகைகளே தேவையில்லே.....!''

''ஏன்.....?''

''நீதான் புன்னகை அரசியாச்சே....!''



''உங்க பெர்ஸனல் விஷயத்தைக் கேட்கிறேன்னு தப்பா எடுத்துக்கக் கூடாது. நீங்க மிஸ்டர் முத்துசாமியிடம் ஜூனியரா சேரப் போறீங்களா?''

வித்தியாதரன் இப்படிக் கேட்டதும் வெங்கடேசனுக்கு வியப்பாக இருந்தது. தன் தொழிலைப் பற்றி இவனுக்கென்ன அக்கறை?மேலும் பரீட்சை எப்படி எழுதியிருக்கிறுன் என்பதைப் பற்றி ஒன்றுமே சொல்லவில்லையே! அவனையே சில விநாடிகள் உற்றுப் பார்த்தான். அவனுடைய பார்வையில் ஒருவிதக் கலக்கம் இருப்பது போல் தோன்றியது. முந்தின இரவு நீண்ட நேரம் அவன் கண் விழித்திருக்க வேண்டும். இடது கண் சற்று அதிகமாகவே சிவப்பேறியிருப்பது போலிருந்தது.

''ம்.....நான் இன்னும் அதைப் பற்றி யோசனையே பண்ணல்லே. ஊரிலே நிலத்திலே விதைச்சிருக்கு. நாற்று நட வேண்டியிருக்கு. போன அறுவடை நெல்லே இன்னும் ரைஸ் மில்லுக்குக் கொண்டு போகல்லே. வயசான வேலேக்காரன் ஒருவன் இருக்கான். நான் போய்த்தான் இதையெல்லாம் கவனிக்கணும். என் மதர், கிராண்ட் மதர் ரெண்டு பேராலேயும் எதையும் செய்ய முடியாது. ரிஸல்ட் வரட்டும்னு இருக்கேன். சௌகரியப்பட்டால்தான் மெட்ராஸ் வர முடியும். இல்லேன்னு உள்ளூரிலேயே தொழில் ஆரம்பிக்க வேண்டியதுதான். வாழ்க்கையிலே நாம ஆசைப்படறதெல்லாம் நடந்தேறிட்டா! அதனுல எது கிடைக்கிறதோ அதை ஏத்துகிட்டு போறதுங்கற முடிவுக்கு வந்திட்டேன். என்னுடைய கேரியருக்காக அம்மாவையும் பாட்டியையும் அசௌகரியத்துக்கு ஆளாக்கமுடியுமா?''

—வெகு இயல்பாகப் பேசினுன் வெங்கடேசன். வித்தியாதரன் இப்பொழுதுதான் அந்த நேர்மையாளனைப் புரிந்து கொண்டான். அவனிடம் பாவனைகள் இல்லே. எளிய மனத்தினன், நேர்படப் பேசுபவன்.

''ஐ'ம் ஸாரி வெங்கடேசன்! உங்களைப்போல இன்டெலிஜென்டா இருக்கிற ஒருவர் தாலுகா, ஜில்லா லெவல்லேயே முடங்கிப் போறதுங்கறது......''

''லைஃப் இஸ் லைக் தட். இதிலே வருத்தப்பட என்ன இருக்கு? வருமானம் கூடக் குறைவா இருக்கலாம். நமக்கு எது கிடைக்கணுமோ அது நிச்சயமா கிடைக்கும். நிழலேத் துரத்திப் பிடிக்க முயற்சிக்கிறது போல ஃபார்ச்சூனைத் தேடிப் போறதிலே எனக்கு நம்பிக்கையில்லே. ஐ டேக் லைஃப் ஆஸ் இட் கம்ஸ்......!''

''நீங்க ஒரு ஃபேடலிஸ்டோ?''

''அப்படி எந்த லிஸ்டும் இல்லே. மோர் பிராக்டிகல் இன் மை அப்ரோச் டுவார்ட்ஸ் லைஃப். திட்டமில்லாம வாழணும்னு நான் சொல்லல்லே. திட்டங்கள் பலிதமாகும் போதும் சரி, தோல்வியடையும் போதும் சரி, அதைச் சாதாரணமா எடுத்துக்கணும்கிறதுதான் என் கருத்து. தோல்வியும் வெற்றியும் மாறி மாறி வரலாம். எதுவானு என்ன? இட் இஸ் பார்ட் ஆஃப் லைஃப். வாழ்க்கைங்கறதே தொடர்ச்சியான அனுபவங்களின் ஒட்டுமொத்தம்தானே?''

''ரொம்ப பிலஸாபிகலா பேசறீங்க. நீங்க ஆப்டிமிஸ்டா, இல்லே, பெஸிமிஸ்டான்னு நிதானிக்க முடியல்லே!''

''வார்த்தைகளிலே என்ன இருக்கு மிஸ்டர் வித்தியாதரன்! வாழ்க்கைங்



இந்த ஆண்டு பிலிம்ஃபேர், தமிழக அரசு—இரட்டை விருது களைப் பெற்ற நடிகர் சிவகுமாருக் கும், நடிகை சரிதாவுக்கும் விகடனின் நல்வாழ்த்துக்கள்.



கறது வாழ்ந்து தீர வேண்டிய ஒரு விஷயம். அதை இப்படித்தான் வாழ ணும்னு மனசில ஒரு வரைமுறையை, நியதியை, சில கொள்கைகளை அடிப் படையா வச்சிண்டு வாழணும்னு நான் நினைக்கிறேன். தவிர, கற்பனையா மனசில சஞ்சாரம் பண்றதை நான் ஏத்துக்கற தில்லே. நம்முடைய செய்கைகள் பிறத் தியாருக்கு நல்லது பயக்காவிட்டாலும், தீமை பயக்காமல் இருந்தா சரி.''

''நீங்க சொல்றது வாழ்க்கை பேரிலே கசப்பு ஏற்பட்டுப் போனாப்ல இருக்கே?''

''நோ. தரௌளி யூ ஹேவ் மிஸ்டே கன் மீ. நான் வாழ்க்கையை நேசிக் கிறேன். ஆனால் உணர்ச்சிபூர்வமான அணுகல் எனக்கு அந்நியப்பட்டிருக்கு. என்னையே நான் நேசிக்கிறேன். ஆனா நார்ஸிஸஸ் மாதிரி இல்லே. என்னுடைய முன்னேற்றம், வளமும் செம்மையுமான வாழ்க்கை இவற்றுக்கு என் உழைப் பையே நான் நம்பறேன்!''

''சியாமளிக்கும் உங்களுக்கும் கருத்து ஒன்றுபட்டிருக்கு. அவளும் இப்படியே தான் பேசினா. ஃபைனர் ஃபீலிங்ஸுக்கு, மனுஷ மனசோட நுண்ணுணர்வுகளுக்கு இந்த மாதிரியான மனோபாவம் உள்ளவங்க தர்ற மதிப்புக் குறைவுதான். எதிலும் ஒரு ஈகோ பின்னணியிலே இருக்காப் போலத் தோண்றது.''

''நாட் அட் ஆல்......நுண்ணுணர் வுன்னு நீங்க எதைச் சொல்றீங்கன்னு புரியல்லே. பேஸிக்கா, வாழ்க்கையி னுடைய நிலையிலே மனித இனம் தோன்றி நாகரிகம் அடைஞ்ச நாளிலே ருந்து மாற்றம் எதுவும் ஏற்பட்டுப் போனதா தெரியல்லே. பசி, தாகம், தூக்கம், பருவ ஆசைகள், இன விருத்தி, கோபம், பொறாமை, இரக்கம் இப்படிப் பலப்பல...என்னிக்கும் இதெல் லாம் இருக்கு. எல்லாத் தலைமுறைகளும் இவற்றை அனுபவிச்சிருக்கு. ஆனா நம்ம வாழ்க்கையிலே நமக்கு ஏற்படற அனுப வங்கள்தான் உண்மைங்கற மாதிரியும், முக்கியத்துவம் உள்ளவைங்கற மாதிரி யும் நாம நினைக்கிறோம். அதனால்தான் நான் முதல்லேயே சொன்னேன், உணர்ச்சிபூர்வமா நான் எதையும் அணுக விரும்பல்லேன்னு. அது என் னோட சமன நிலையைக் குலைச்சிடும்...!''

''ஸ்பெலெண்டிட்! ஓர் இளைஞன் ஒரு யுவதியைக் காதலிக்கிறான்னு வச்சிப் போம். அது உணர்ச்சிகளின் மோதல் தானே? இல்லே, காதலே பொய்னு சொல்றீங்களா? காதல் பொய்யா இருக் கிற பட்சத்திலே காவியங்கள் பல நமக் குக் கிடைக்காமலேயே போயிருக்கு மில்லையா? அறிவுபூர்வமா பார்த்தால் காதல்ங்கிறதுகூட இன விருத்திக்காகத் தான்னு சொல்லிடலாம். ஆனா அத னுடைய மென்மையான நிகழ்ச்சி இரண்டு உள்ளங்களிலே ஏன் ஏற்பட ணும்? அது கைகூடாதவங்களிலே சில பேர் தற்கொலை செஞ்சிட்டிருக்காங்க. வாட் டு யூ ஸே ஃபார் தட்...?''

வெங்கடேசன் மெல்லச் சிரித்தான். தன்னிடம் கேள்விகள் கேட்பது போல், தன்னுடைய மனத்தில் அப்போது நிகழ்ந்து கொண்டிருக்கும் ஒரு மனப் போராட்டத்திற்கு வித்தியாதரன் துணை தேடுகிறான் என்பது அவனுக்குப் புரிந் தது. ஒருவேளை வித்தியாதரன் யாரை

யாவது காதலிக்கிறுனு? அதை வெளிப் படையாகச் சொல்லக் கூச்சப்பட்டுக் கொண்டு...

''வெல்! உண்மையான காதல் நிறை வேறல்லேன்னு அது தற்கொலேயிலே முடியணும்னு நினேக்கிறது பைத்தியக் காரத்தனம். தான் நேசித்த ஒருவனே, ஒருத்தியோ தனக்குக் கிட்டாமல் போனு லும், வாழ்க்கையிலே நல்லா இருக்க ணும்னு நினேக்கிறதுதான் ஆரோக்கிய மான சிந்தனையா இருக்க முடியும். எவ்ரி லவ் என்ட்ஸ் இன் எ பெட்... இது மறுக்க முடியாத உண்மை. ஸோ, பொஸஸிவ்வா இருக்கிற மனசு தன்னு டைய உடைமை தன்கிட்டேயிருந்து பறிக்கப்பட்டது போல உணர்ந்து தவிக்கும்போது கேவலமான, கோழைத் தனமான ஆத்ம ஹத்தி ஒன்றுதான் வடிகாலா தெரியறது. தூய்மையான காதல் உள்ளத்தைப் பொறுத்ததுதானே தவிர, உடலே உடைமையாக்கிக்கிறதிலே ஏமாற்றம் ஏற்பட்டா அதுக்காக முறிஞ்சு போகாததாகவும் இருக்க வேண்டியிருக்கு. ஆனு அடிப்படையிலே இந்த உணர்ச்சி இன விருத்திக்காகத் தான் ஏற்படறதுங்கறதுதானே உண்மை யும்கூட!'' ஒரு தர்க்க சாஸ்திரியினுடை யது போன்றிருந்தது அவன் பேச்சு.

வெங்கடேசனுடைய ஆணித்தரமான பேச்சு, தெளிவான சிந்தனேயோட்டம் இவற்றைப் புரிந்துகொண்ட வித்தியா தரன், தான் அதுகாறும் அவனேப் பற்றித் தன் மனத்தில் கொண்டிருந்த தவருன தொரு கண்ணேட்டத்தைக் குறித்து வருந்தினுன். தன்னேடொத்த வயதின ஞக இருந்தபோதும் விஷயங்களே வெங்க டேசன் அணுகிய முறையில் இருந்த ஒரு பாரபட்சமற்ற முறை, அவனுடைய சிந்தனேப் பொறியைத் தாக்கியது.

''வெல் மிஸ்டர் வித்தியாதரன்! நான் கீழே போய் மத்தவங்ககிட்டே என் பயணத்தைப் பத்திச் சொல்லலாம்னு இருக்கேன். பரீட்சை நல்லா எழுதுங்க. திறமையும் ஆர்வமும் உள்ள இளம் வயதினரான ஒரு நல்ல நிர்வாகி இந்த நாட்டின் சேவைக்குக் கிடைக்கட்டும்'' என்றுன் வெங்கடேசன் சிரித்தபடியே.

வித்தியாதரனுல் பதிலுக்குப் புன்னகைக்கத்தான் முடிந்தது. வெங்கடேசனுடன் தான் சரியாகப் பழகாமல் போய்விட்ட குறை இப் போது அவன் மனத்தில் தோன்றியது.

இரு கைகளேயும் கூப்பி வணக்கம் தெரிவித்தான். தாழ்ப்பாளேத் திறந்து அவனுக்கு வழி விட்டான்.

வெங்கடேசன் வெளியேறும்போது சொன்னுன்: ''உங்க நலன்லே அக்கறை யுள்ளவன் ஒருவன் சொன்னதா நீங்க மனசில ஏத்துக்கணும். புகை பிடிக்கிற பழக்கத்தை மெல்ல மெல்லக் குறைச் சிடுங்க. அறவே விடும்படியான நேரம் வரும்பொழுது நிறுத்திடுங்க. மே காட் ப்ளெஸ் யூ!''

வெங்கடேசன் கதவை நன்ருகத் திறந்துவிட்டு வெளியே போனுன்.

உறுதியான மனமும், தெளிவான நல்லறிவும் கொண்ட அவன் சுத்தமான காற்றைப் போல எவராலும் விரும்பப் படுவதன் காரணத்தை உணர்ந்தவனுக வித்தியாதரன் அவன் போவதையே பார்த்து விட்டுத் திரும்பினுன். தரையில் கிடந்த எரிந்த குச்சிகளும், ஆஷ்—ட்ரே யில் நிரம்பி வழிந்த சிகரெட் துண்டு களும் தன்னுடைய பலவீனத்தைப் பறைசாற்றுவது போலத் தோன்றியது. தன்னுடைய வாழ்க்கை முறையை ஒழுங்குபடுத்திக் கொள்ள வேண்டும் போல் தோன்றியது.

முன் ஹாலில் சியாமளி உட்கார்ந்து கொண்டு ஒரு சஞ்சிகையைப் புரட்டிக் கொண்டிருந்தாள். இளமஞ்சள் வண்ணத்தில் சேலேயும், அதற்கேற்ற



''பணம் வைத்திருக்கிற யாரும் படம் எடுக்கலாம் என்று ஆகி விட்டது. யார் கண்டார்கள், ஒரு பீடாக் கடைக்காரர் படம் எடுக்க வந்தால்கூட நான் அதில் நடிக்க வேண்டியிருக்கும்...''

—நடிகை ஷபனு ஆஸ்மி



மூக்கு நீளமாக இருக்கிறது என்று ஆரம்பத்தில் தயாரிப்பாளர்களால் நிராகரிக்கப்பட்டவர் ராஜ் பப்பர். இன்றைக்கு இளைய தலைமுறையில் முன்னணி நடிகராக, அமிதாப்பச்சனுக்குப் போட்டியாக உயர்ந்து கொண்டு வரும் ராஜ் பப்பரை நிராகரித்த பட அதிபர்கள் இப்போது அவர் பின்னால் ஓடிக் கொண்டிருக்கிறார்கள்.

பிளவுசும் அணிந்திருந்தாள். அவளைப் பார்த்துக் கொண்டே நுழைந்தான் வெங்கடேசன்.

ஆளரவம் கேட்டதும் அவள் தலை நிமிர்ந்தாள். அவனைப் பார்த்ததும் புன்னகைத்தாள்.

''சியாமளி! நான் இன்னிக்குக் கிராமத்துக்குப் போகலாம்னு இருக்கேன்.''

''ம்... பரீட்சை முடிஞ்சிடுத்து. அதனால உடனே புறப்படணுமா?''

''என்ன பண்றது! மை பிரஸன்ஸ் இஸ் நீடட் தேர்... இந்த மூணு வார காலம் நான் ரொம்ப சௌகரியமா இருந்தேன். நன்றின்னு சொன்னா அது வெறும் உபசாரத்துக்காகச் சொல்லப்பட்டதா எடுத்துக்கக் கூடாது. மனசில எத்தனையோ தோணறது. வார்த்தையிலே வரமாட்டேங்கறது!''

அவள் மிக அழகாகச் சிரித்தாள்:

''ஓகே! நீங்க புறப்படணும்னு தீர்மானம் பண்ணியாச்சு. உங்களைத் தடுத்து நிறுத்த யாராலும் முடியாது.''

''ம்...''

''நான் உங்ககிட்டே நிறையப் பேசணும்னு இருந்தேன். பரவாயில்லே! பேசாமலேயே, உங்க மௌனத்தினாலேயே நான் புரிஞ்சுக்கும்படியாகச் செஞ்சிட்டீங்க!''

இவள் என்ன சொல்கிறாள் என்று திகைத்தான் அவன். தன்னிடம் பேச இவளுக்கென்ன இருக்க முடியும்? ஒருவேளை தன்னுடைய தொழிலைப் பற்றி......

''சிவராமன்கிட்டே நான் சொன்னேன். உங்க அப்பாகிட்டே ஜூனியரா சேர்றதைப் பத்தி அவருடைய சௌகரியத்தை அனுசரிச்சு எனக்குத் தெரியப்படுத்தச் சொல்லியிருக்கேன். ஆனா எங்க குடும்பம் இருக்கிற நிலைமையிலே நான் மெட்ராஸ்ல தொழில் ஆரம்பிக்க முடியுமான்னுதான் யோசனையா இருக்கு.''

''ம்... நீங்க எந்த ஊர்லே தொழில் செஞ்சாலும் பாபுலரா இருப்பீங்க.''

''தாக்ங்யூ ஃபார் யுவர் கான்ஃபிடன்ஸ் அண்ட் காம்ப்ளிமெண்ட்!''

''கிராமத்துக்குப் போனாலும், தொழிலை எங்கே ஆரம்பிச்சாலும் எங்க நினைவு இருக்கும்னு நினைக்கிறேன்.''

''ஷ்யூர்! சியாமளி! வாழ்க்கைங்கிறதே சந்தர்ப்பங்களோட துணையோட அமையறதுதான். சிவராமனைப் போல ஒரு நண்பன் எனக்கு இல்லாமலிருந்திருந்தா நிச்சயம் நான் தேர்ச்சியடையுமளவிற்குப் பரீட்சையை, இப்ப இருக்கிற சூழ்நிலையிலே எழுதியிருக்க முடியாது. சில சந்திப்புக்கள் குறைந்த கால அளவிலே ஏற்பட்டாலும், மனசில நிரந்தரமான ஒரு பதிவை ஏற்படுத்திடும். உங்களையெல்லாம் மீட் பண்ணியது அப்படித்தான்!''

''நீங்க ரொம்பத்தான் புகழறீங்க!''

''நோ! இது வெறும் புகழ்ச்சியில்லே. என் நிலைமை அப்படியிருந்தது. இங்கே இருக்கிற சூழ்நிலை என் வேலையைச் சுலபமா செஞ்சிட்டது. பை தி பை, சிவராமனும், ஸாரும் எங்கே?''

''அண்ணா கம்பெனிக்குப் போயிருக்கான். போர்ட் ஆஃப் டைரக்டர்ஸ் மீட்டிங் இருக்குன்னு சொன்னான். லஞ்சுக்குக்கூட அநேகமா வரமாட்டான்னு நினைக்கிறேன். அப்பா தன்னோட ஆபீஸுக்குப் போயிட்டார். சம்மர் வெகேஷனுக்கு முன்னால சில காரியங்களை முடிக்கணும்னு சொன்னார். நீங்க சாயந்திரம்தானே போகணும்?''

''மத்தியானமா போகலாம்னு பார்த்தேன். ராத்திரியே புறப்பட்டாப் போச்சு...''

''ஆமாம். அதுதான் சரின்னு படறது.''

''திண்டிவனத்துக்குப் போய் ஸ்டேஷன்லே தங்கணும். ராத்திரி எங்க கிராமத்துக்கு வண்டி கிடையாது!''

அவள் 'த்சொ' என்றாள்.

''உங்களுக்கு அசௌகரியமா இருக்காதோ?''

''நோ! பழக்கம்தான்...''

சிறிது மௌனம் நிலவியது.

வாலிபனான அவன், வாழ்க்கை அனுபவம் நிரம்பப் பெற்றவன் போன்ற முதிர்ச்சியுடன் சலனமேதுமின்றி இருப்பது போல் அவளுக்குத் தோன்றியது. அளவுக்கு அதிகமாகாத பேச்சு. கவனமான பேச்சு.

''என்ன சியாமளி? ஒய் யூ லுக் அட் மீ லைக் தட்?''

''ஒண்ணுமில்லே! நான் பரீட்சை நல்லா எழுதியிருக்கிறதா நினைச்சிண்டிருக்கேன். இன்னும் ரெண்டு பேப்பர் இருக்கு. அதுவும் முடிஞ்சிட்டா நல்லா இருக்கும்!''

''ஐ'ம் ஸாரி! நானே கேட்கணும்னு இருந்தேன். வெரி குட்! டூ இட் வெல். நிச்சயமா நீங்க ஜெயிச்சிடுவீங்க!''

தன்னை அவன் மரியாதையோடு விளித்ததுகூட அவளுக்கு என்னவோ போலிருந்தது. துருவ தேசங்களில் பனிப் பாறைகள் மௌன நிலையில் இருக்குமாம். அதைப் போன்று ஊடுருவிப் புக முடியாதவாறு இவனால் எப்படியிருக்க முடிகிறது? மென்மையான உணர்ச்சிகளே இல்லாத ஒரு மனோநிலை இந்த வாலிப வயதிலுங்கூட......

''தப்பா எடுத்துக்கக் கூடாது! உங்களால் எப்படி இப்படி மேட்டர் ஆஃப் ஃபாக்ட் ஆக இருக்க முடியறது!''

''என்ன சொல்றீங்க சியாமளி?''

''உங்க மனசில பரீட்சை, ரிஸல்ட், கேரியர் இவற்றைத் தவிர வேற எந்தவித எண்ணமுமே வராதா?''—கேட்டுவிட்டுக் குறும்பாகப் பார்த்தாள்.

''வெல்! நல்ல கேள்விதான். என்னோட ஹாஸ்டல் நண்பர்கள் பல முறை இதையே கேட்டதுண்டு. என் கோணத்திலிருந்து பார்க்கணும்னு சொல்றேன். ஐ'ம் நாட் ரிச். ஏழைன்னும் சொல்ல முடியாது. சாப்பாட்டுக்குச் சுமாரான வருமானம் இருக்கு. ஆனா என் மனசில ஒரு குறிக்கோள் இருக்கு. அது நிறைவேறணும். அதை நான் அடையணும்னா ரொம்ப பாடுபடணும். இந்த நிலையிலே நான் வசதியுள்ளவங்களைப் போல இருக்கணும்னு ஆசைப்பட்டா வழி தவறிடுவேனோன்னு தோணறது. மேலும் ஒரு குறிப்பிட்ட வருமானத்துக்குள்ளே தான் வாழ்ந்து தீர வேண்டிய கட்டாயம் இருக்கு. ஐ'ம் கமிடட் டு லைஃப். கமிடட் டு மை பிரின்ஸிபில்ஸ். அதனாலே நானே எனக்கு ஒரு சுய கட்டுப்பாட்டை ஏற்படுத்திண்டிருக்கேன். நீங்க கேக்கிற கேள்வியோட தாத்பர்யம் புரியறது. வித்தியாதரனும் இதையே வேற மாதிரி மாத்திக் கேட்டார். மத்த வாலிபர்களைப் போல சினிமா, கிளப், மற்றும்..'' சிறிது தயங்கினான். பிறகு சொன்னான்: ''லவ்..!இதெல்லாத்தையும் பத்தி நினைக்கவே எனக்குத் தோணல்லே. ஐ'ம் மோர் கன்ஸர்ன்ட் அபௌட் மை ஃப்யூச்சர், தட்ஸால்!''

''உங்க உணர்ச்சிகளை நான் புண்படுத்தியிருந்தா மன்னிக்கணும்.''

''நாட் அட் ஆல்! சாதாரணமா எல்லாருக்கும் ஏற்படக்கூடிய சந்தேகம் தான். மேலும் இந்த வயசுக்குள்ளே வாழ்க்கையினுடைய நிஜ ரூபத்தை நான் தரிசிக்கும்படியா சந்தர்ப்பங்கள் ஏற்பட்டுப் போச்சு. என் மனசு திசை மாறிப் போகும்படியான நிலைமைகள் உருவாக நான் அனுமதிக்கிறதில்லே!''

''ஹோ! ரொம்ப சீரியஸா பேசறீங்க!''

''இல்லே சியாமளி! உங்களோட முதன் முதல்லே தோட்டத்திலே பேசின பிறகு கொஞ்ச நேரம் நான் நானாக இல்லே. என் மேல அக்கறை காட்டக் கூடிய ஒரு பெண் இருக்காங்கிற எண்ணமே என்னை உற்சாகப்படுத்தியது. மேலும் மேலும் அந்த எண்ணம் தீவிரமடைஞ்சால் அதனாலே என்னென்ன விளைவுகள் ஏற்படக்கூடும்னு நினைச்சுப் பார்த்தேன். ஐ வான்டட் டு புட் ஆன் என்ட் டு தட் ஃபீலிங். ஏன்னா அது என்னைத் தவிர இன்னொருத்தரையும் பாதிக்கிற விஷயம். ஸோ......!''

''வெங்கட்!''.... அவள் அவனையே பார்த்தாள்.

''ப்ளீஸ் சியாமளி! என்னைச் சரியா புரிஞ்சிக்கணும்னு கேட்டுக்கிறேன். நான் நானா இருக்கவே விரும்பறேன். என்னை மற்றொருத்தர் ஆக்கிரமிக்கிறதை நான் விரும்பல்லே. லவ் இஸ் ஸச் எ திங். ஒரு முறை ஒருவன் மனசு அதிலே



''சாதாரணமாக இரண்டு மூன்று டேக்குகளுக்கு மேல் நான் எடுத்ததில்லை. பொதுவாக என்னுடைய முதல் டேக்தான் சிறப்பாக இருக்கும். ஒரே ஒரு முறை கிராமத்தில் படப்பிடிப்பு நடத்திய போது, அந்தக் காட்சியில் நடித்த ஒரு நாய் என்னை 11 டேக்குகள் எடுக்க வைத்து விட்டது. வங்காள மொழியில் படமெடுப்பதால் நான் சிக்கனமாக இருக்க வேண்டியிருக்கிறது. நல்ல வேளையாக என் படங்களுக்கு வெளிநாட்டில் ஏகக் கிராக்கி இருப்பதால் தப்பிக்கிறேன்..''

—சத்யஜித்ரே

ஈடுபட்டுட்டா ஹி கெட்ஸ் லாஸ்ட். விஞ்ஞானபூர்வமா அதை பயலாஜிகல் நெஸஸிடின்னு வியாக்யானம் பண்ணலாம். ஆனா உப்பும் காரமும் சாப்பாட்டுலே சேர்த்துக்கிற வரைக்கும், உணர்ச்சிகளின் எழுச்சி மனக் கடலில் பேரலைகளா எழுந்து வீசியடிக்கிற வரைக்கும் எவனாலும் அதை ஒதுக்கிட முடியாது.''

இப்பொழுது சியாமளி அவனைப் பார்த்துப் புன்னகைத்தாள்.

''யெஸ்!'' அவன் மேலும் தொடர்ந்தான். ''ஐ'ம் நாட் எ ஸெயின்ட். உணர்ச்சியற்ற ஜடம் இல்லே. ஆனா... வெல்.. ஒரு அழகான யுவதிகிட்டே நான் பிலாஸபி பேசக்கூடாது. உன்னுடைய அழகும் அறிவும் என்னைப் பிரமிக்க வச்சிடுத்து. அதிலேருந்து நான் மீளணும்னு மௌனம்தான் ஒரே வழின்னு தோணித்து. இப்ப நான் ஊருக்கு உடனே புறப்படறதுக்குக் காரணம்கூட அதுதான். யெஸ்! என்னைச் சரியா புரிஞ்சிக்கணும்!......''

அவளிடமிருந்து பெருமூச்சொன்று வெளிப்பட்டது. தன்னை அவன் நேசிக்க விரும்புகிறானென்பதையும், அவனுடைய பொருளாதார நிலைமை காரணமாகவே அதைத் தவிர்க்க முற்படுகிறானென்பதையும் புரிந்து கொண்டவளாகத் தனக்குள்ளே யோசித்துக் கொண்டிருந்தாள்.

''வெல் சியாமளி! ஐ'ம் ஸாரி! நான் சாதாரணமா உணர்ச்சிவசப்படறதில்லே. நான் பொருளாதார நிலைமைகளுக்கு ரொம்ப முக்கியத்துவம் தராப் போலத் தோணலாம். ஆனால் காலப் போக்கிலே நிதரிசனமான உண்மையா அதுதான் இருக்கும். என்னுடைய மன வேகத்துக்காக—இளமையின் கவர்ச்சிக்காக—ஒரு பெண்ணை, அவளுக்குத் தரப்பட வேண்டிய சுக சௌக்கியங்களைத் தியாகம் செய்யச் சொல்றது அர்த்தமில்லாததா படறது. அன்னிக்கு நீ துருவித் துருவி என் எதிர்காலத் திட்டம் பற்றிக் கேட்டப்பவே எனக்கு......இட் இஸ் ஆல்ரைட்! லீவ் இட் அட் தட்!''

''வெங்கட்! ஒருதலைப்பட்சமாவே தீர்மானிக்கிறது நல்லதா?''

''நோ!'' சிறிது தயங்கினான்: ''இன்னொரு விஷயம். மிஸ்டர் வித்தியாதரன் நான் அவருக்குப் போட்டியா வந்திருக்கிறதா நினைச்சு ரொம்ப சங்கடப்படறார். அவரைப் போல வசதியுள்ளவர் எதுக்காக இங்கே தங்கணும்? காரணம் தெளிவா புரியறது. ஏற்கெனவே நீங்க ரெண்டு பேரும் பழகினவங்க வேற. பழக்கம்னா அது 'லவ்'வாத்தான் இருக்கணும்னு நான் சொல்லல்லே. ஆனா அவர் என்னைக் கேட்ட கேள்விகளிலிருந்து யூகம் பண்ணிச் சொல்றேன். ஸோ! என்னுடைய திடும்பிரவேசம் இத்தோட முடியட்டும்!''

''நல்லாயிருக்கு! என் மனசைப் பத்தி யாருக்கும் அக்கறையில்லே போலிருக்கு. ஐ வான்ட் டு ரிமெய்ன் ஆஸ் ஐ ஆம்!''

வெங்கடேசன் அவளைப் புதிராகப் பார்த்தான்.

சிரித்தாள்.

''காலம்தான் எதையும் நிர்ணயிக்கணும். ஓகே! ஐ விஷ் யூ ஆல் தி பெஸ்ட்!''

அவன் வெளியேறினான்.

சியாமளியின் மனத்தில் ஒரு சிந்தனைப் புயலைக் கிளப்பிவிட்டுச் செல்கிறோம் என்ற பிரக்ஞையே இல்லாமல் சென்றுவிட்ட அவனையும், அவன் பேசியதையும் அவள் மனம் வெகு தீவிரமாகச் சிந்தித்துக் கொண்டிருந்தது.

(தொடரும்)

# வேர்கள்

கிருஷ்ணமணி

## 12

பேங்கர் சீனு தன்னெதிரில் நின்று கொண்டிருந்த சதீஷைப் பார்த்தார். தோளுக்கு மிஞ்சினல் தோழன் என்பார்கள். அவனே, அவருடைய தலையையும் மிஞ்சி விட்டான். நல்ல உயரம். அவனையே ஏற இறங்கப் பார்த்தார் சீனு. அவனுடைய தோற்றம் பழைமையென்ற பெயரில் உள்ள எதையுமே தூக்கியெறிந்து விடும் ஒரு புதுமை விரும்பியினுடையதைப் போலிருந்தது. குரு ஜிப்பாவும் பெல்ஸும், கழுத்தில் ருத்திராட்சமாலையும்...... சீனுவுக்குத் தன் மகனுக இருப்பவனு இப்படியிருக்கிருன் என்று எண்ண வைத்தது.

''ரிஸல்ட் வந்திருக்குப்பா. நான் பாஸ் பண்ணிட்டேன்!''

''சந்தோஷம்.''

''கடந்த நாலு மாசமா மெட்ராஸ்லேயே இடம் பார்த்திருக்கலாம். பிஸினஸ் ஸெட் அப் பண்றதுன்னு சொன்னு இடம்தான் முக்கியம். அங்கே நல்ல இடமா கிடைக்கிறது அவ்வளவு சுலபமல்ல.''

''ம்...நீதான் மாசம் ரெண்டு தடவையாவது போயிட்டு வந்தியே, பார்க்கிறது தானே?''

''நீங்க பிடி கொடுத்துப் பேசவேயில்லையே.''

''ஏண்டா சதீஷ்! உம் பிஸினஸை இங்கே ஆரம்பிச்சா என்ன?''

''இந்தச் சின்ன ஊர்லேயாப்பா?''

''சின்னதா ஆரம்பிச்சு அனுபவம் கிடைச்சப்புறம் பெரிசா விரிவுபடுத்தலாமே!''

''இந்த மாதிரி பிஸினஸ்லே, எலெக்டிரிகல் காண்டிராக்ட்லே நமக்கு சோஷியல் கான்டாக்ட்ஸ் ரொம்ப முக்கியம். பெரிய காண்டிராக்டா எடுத்துச் செய்யமுடியும். இங்கே என்னப்பா பெரிசா வியாபாரம் நடந்திடும்? வேணும்னு ஒரு எலெக்டிரிகல் மெடீரியல்ஸ் டிஸ்டிரிபியூஷன் ஷாப் ஆரம்பிக்கலாம். அதுக்கு நான் டிகிரியே வாங்கியிருக்க வேணும்.''

''பிஸினஸ்னு சொன்னு ஜாக்கிரதையா இருக்கணும். பதினஞ்சு அல்லது இருபது சதவீதம்தான் லாபம் எதிர்பார்க்கலாம். அதுவும் கண்லே எண்ணெயை ஊத்திண்டு பார்க்கணும். வேலைக்காரங்ககிட்டே கண்டிப்பாவும் உஷாராவும் இருக்கணும். முதலாளிங்கிறவன் கொள்ளையா லாபம் அடிச்சிண்டு போறவன்கிற ஒரு தப்பெண்ணம் எப்பவுமே அவங்ககிட்டே இருக்கு. லாபம் வந்தால் போனஸ் கேப்பான். நஷ்டம் வந்தாலும் அவனுடைய சம்பளத்தை நயாபைசா குறைக்காம ஸெட்டில் பண்ணியாகணும். போடற முதல் தேறணுமேன்னு கவலை உன்னைத் தவிர வேற யாருக்கும் இருக்கும்னு நீ எதிர்பார்க்கவே வேணும். பார்ட்டிகிட்டே கரெக்டா வசூல் பண்ணத் தெரியணும். ஆயிரம், லட்சம்னு பேசுவான். ஆனு உனக்குத் தரவேண்டிய பணத்துக்கு வாய்தா கேப்பான். நல்லா யோசனை பண்ணிச் செய்யவேண்டிய காரியம்...''

சதீஷுக்கு அவர் சொன்னதிலுள்ள உண்மை புரிந்தது. மனக் கஷ்டம்,

தூக்கம்... பணம் புரட்டுவதிலுள்ள ப்ரத்யட்ச சிரமங்கள்! பிஸினஸ்மேனாக இருப்பதில் நிம்மதியென்பதே இருக்காது. வெளிப் பார்வைக்குச் சகல சௌகரியங்களும் அடையப் பெற்றவர்களாகத் தோன்றும் பலரும் உள்ளுக்குள் எத்தனை வியாகூலங்களை அனுபவிக்கிறார்கள் என்பதை அப்பா தெளிவாகச் சொல்லிவிட்டார்.

''என்னுடைய ஆரம்ப காலம் ரொம்ப கஷ்டத்திலே ஆரம்பிச்சது. குருவி மணி சேர்க்கிறாப்லே ஏதோ என்னால் முடிஞ்சதைச் சேர்த்து வச்சிருக்கேன். பணக் கஷ்டம் வரும்போது கடன் வாங்க வர்றவங்க, வாங்கின கடனைத் திருப்பித் தரணும்னு வரும்போது கடன் கொடுத்தவனை ஒரு சாத்தானாக நினைக்கிறான். மனித சுபாவம் அது. நன்றியுணர்வுங்கிறது ஆயிரத்திலே ஒருத்தனுக்கு இருக்கிறது அபூர்வம்.''

''சரிப்பா! என்னதான் செய்யலாம்னு சொல்றேள்?''

''உன்னோட சுதந்திரமான வாழ்க்கைக்கு நான் குறுக்கே நிற்கிறேன்னு நினைக்காதே. உன் படிப்புக்கு ஒரு நல்ல வேலையா தேடிக்கோ. சமுதாயத்திலே நாலு பேர் மெச்சிக்க ஒரு டீஸன்டான வாழ்க்கையை அமைச்சிக்க முடியும். ஏதோ இருக்கிற நிலம், இன்வெஸ்ட்மென்ட்ஸ் இதிலே வர்ற வருமானமும் கூடவே இருக்கு. நிம்மதியா வாழலாம்.''

''ம்....''—சிறிது தயங்கினான். ''இன்னொருத்தர்கிட்டே போய் சம்பளத்துக்கு வேலை பார்க்கிறது நாளாவட்டத்திலே தன்னம்பிக்கையைக் குறைச்சிடும்ப்பா...''

சீனு மெல்லச் சிரித்தார்: ''நோ! நான் இதை ஒப்புக்க முடியாது. ஒரு துறையிலே நாம தனித்து இயங்கணும்னு சொன்னா முன் அனுபவம், காரியங்களைக் கொண்டு செலுத்தற அனுபவ சாத்திய உணர்வு இதெல்லாம் வேணும். ஒரு அப்ரெண்டிஸ்ஷிப் மாதிரின்னு வச்சிக்கோயேன். ஒரு அஞ்சாறு வருஷமாவது மத்த இடத்திலே போய்த் தெரிஞ்சிக்கிறதுதான்



நல்லதும்பேன். ரிஸ்க் எடுத்துக்கிறதுக்கு முன்னடி, எந்த மாதிரியான பிரச்னைகளெல்லாம் வரக்கூடும்னு தெரிஞ்சிக்க வேணுமா? ஏதோப்பா என்னுடைய முப்பத்திரண்டு வருஷ வியாபார அனுபவத்திலே சொல்றேன். நீ பிடிவாதமா சொந்த பிஸினஸ் தான் செய்வேன்னு சொன்னு நான் வேறென்ன செய்ய முடியும்?''

அப்பா சாமர்த்தியமாக மடக்கிவிட்டார். தன்னுடைய போக்கிற்குத் தடை விதிக்க விரும்பாதவர் போலவும் அதே நேரத்தில் கண்கூடான சிரமசாத்தியக் கூறுகளையும் எடுத்துச் சொல்லிவிட்டார். இனி அவரை மீறிக் கொண்டு செயல்படுவது முடியாத காரியம். ஒரு வியாபாரத்தைத் துவக்குவதற்கே இப்படிச் சொல்பவர் தனக்கும் அனுசூயாவிற்கும் ஏற்பட்டுள்ள நட்பைப் பற்றி அறிந்தால் என்ன சொல்லுவார்? அவளைத் தான் மணம் புரிந்து கொள்ள விரும்புவதைப் பற்றி என்ன சொல்லுவார்? அதை இன்னும் கொஞ்ச காலத்திற்குத் தள்ளிப் போட வேண்டியதுதான்.

''சதீஷ்! என்மேல உனக்கு வருத்தமாடா?''

''ம்..அப்படியெல்லாம் இல்லேப்பா!''

''ஜானுவுக்கு சீக்கிரமா கல்யாணம் பண்ணிடணும். விழுப்புரம் டாக்டர் துரைசாமியோட பிள்ளைக்குப் பார்க்கலாம்னு. அவர் ஆயுர்வேத டாக்டர் தான். அதிலேயே நிறைய சம்பாதிச்சிருக்கார். அவர் பிள்ளைகூட பி. ஈ., சிவில் பாஸ் பண்ணிட்டு ஹைவேஸ் டிபார்ட்மெண்ட்லே ஜூனியர் எஞ்சினீயரா இருக்கார். தெரிஞ்ச இடம். என்ன சொல்றே?''

''ம்...பாருங்கோ.''

'துரைசாமிக்கு ஒரு பெண் இருக்காளாம். பி. யூ. சி. பாஸ் பண்ணியிருக்கா.' அவர் சொல்வதா, வேண்டாமா என்று யோசிப்பதுபோல் பார்த்தார்.

சதீஷ் யூகித்து விட்டான். இந்த சமாசாரத்தில் விட்டுக் கொடுக்கக் கூடாது. அவனுக்குச் சற்று எரிச்சலாக வந்தது. மௌனமாக இருந்தான்.

அவனுடைய மௌனத்தைச் சாதகமாக்கிக் கொண்டு அவர் சொன்னர்: ''நீ சம்மதம் கொடுத்தா பரிவர்த்தனை பண்ணிக்கலாம். அது ஒரு சேஃப்டி










டிவைஸ். சீர் செனத்தி எல்லாம் சரிசமமா இருக்கும். நம்மாத்துப் பெண்ணும், வர்ற பெண்ணும் சௌகரியமா இருக்க வழியும் இருக்கு. லௌகீக காரியங்களிலே நாலு விதத்திலேயும் விஷயங்களைக் கவனிக்க வேண்டியிருக்கு. என்ன சொல்றே?''

''ம்...எனக்கு வேலைன்னு ஒண்ணு கிடைக்கட்டுமேப்பா! எனக்குன்னு ஒரு ஸ்டேடஸ் இல்லாம, கிரகஸ்தனா மாற நான் விரும்பல்லே.''

''அப்போ உனக்கு வேலை கிடைக்கும் படியா செய்யறது என் பொறுப்பு!''

அவனுக்கு வியர்த்து விட்டது. சிக்கலான ஒரு கணிதப் புதிரை விடுவிக்கப் பிரயோகிக்கப்படும் சூத்திரத்தை நன்கு கற்றவன் அதை உபயோகப்படுத்துவதைப் போன்று, வாழ்க்கையின் பிரச்னைகளைத் தீர்க்க அப்பா தயாராகச் சூத்திரங்களை வைத்திருப்பது போலத் தோன்றியது. அப்பாவின் பார்வையிலிருந்தும், ஆதிக்கத்திலிருந்தும் தான் விலகிக் கொள்ள வேண்டும் என்று எண்ணினான். அவருடைய ஆளுமையின் ஒளியில் தன் தனித்துவம் மங்கி விடவோ, அல்லது அதைப் பிரதிபலிக்கும் ஒரு சாயாகிரகம் போலவோ மாறிவிடக் கூடாது என்றும் தோன்றியது.

''நானே ஒரு திட்டம் வச்சிருக்கேம்ப்பா.''

''என்னடாது?''

''கல்ஃப் கன்ட்ரீஸ்லே எங்க தொழிலுக்கு ஏகக் கிராக்கி இருக்கு. மூணு வருஷம் ஒரு காண்டிராக்ட் பண்ணிண்டு போகலாம்னு பார்க்கிறேன். கை நிறையச் சம்பளம் வரும். செலவு பண்ணினது போக மிச்சத்தை எவ்வளவு வேணும்னாலும் தாய்நாட்டுக்கு அனுப்பலாம். கணிசமான ஒரு தொகை குறைஞ்சது ஒண்ணரை லட்சம் ரூவா வரைக்கும் மூணு வருஷத்திலே சேமிக்க முடியும். நீங்க சரின்னு சொன்னா...''

''யோசனை பண்ணுவோம்.'' மகனை மீண்டும் ஒரு முறை பார்த்தார். சதீஷ் பிறக்கும் தருவாயில் தனக்கு இருபத்தாறு வயதாக இருந்ததையும், அப்போது தான் சுயேச்சையாகச் சிறு கடன்கள் கொடுக்கல் வாங்கலில் ஈடுபட ஆரம்பித்ததும், இரவு நேரங்களில் தன்னுடைய எதிர்காலத்திலாவது சுயமாகத் தொழில் புரிய வேண்டுமென்று பல திட்டங்கள் தீட்டியதும் மனத்தில் நினைவாக ஓடியது. தன் மகன் தன்னைப் போலவே தான் இருக்கிறான். தந்தையைச் சார்ந்து

வாழ்வதுகூட அவனுக்குப் பிடிக்கவில்லை போலும். தனக்கு இல்லாதிருந்த சௌகரியங்கள் அவனுக்கு இருக்கின்றன. இருந்தாலும் அவன் சுயேச்சையாகவே வாழ விரும்புகிறன். மனத்தில் சற்றுப் பெருமையாகக்கூட இருந்தது அவருக்கு. ஆனல் அதை வெளிக் காட்டிக் கொள்ள விரும்பாதவர் போலப் பேசினர்: ''நீ எங்களுக்கு ஒரே பிள்ளை. தூர தேசம் போயாவது சம்பாதிக்கணும்கிற அவசியமோ, கட்டாயமோ இப்ப இல்லை. யோசித்துப் பார்த்துச் செய்வோம்.'' —அவர் எழுந்து விட்டார். மேற்கொண்டு அவர் பேச விரும்பவில்லை என்பதை உணர்ந்தவனக, சதீஷ் மாடியிலிருந்த தன் அறைக்குப் போனன்.

அவனுக்கு சிகரெட் பிடிக்க வேண்டும் போலிருந்தது. அது வரையிலும் தன் தந்தை மாடியறைக்கு விஜயம் செய்யாமலிருந்தது அவனுக்கு ஆறுதலாக இருந்தது. சிகரெட் ஒன்றைப் பற்றவைத்தான். தெற்குப்புற மூலையில் இரண்டு சுவர்கள் சந்திக்குமிடத்தில் கருநிறச் சிலந்தியொன்று வலை பின்னியிருந்தது. எத்தனை ஒட்டடையடித்தாலும் இந்தப் பூச்சிகள் வெளியேறுவதில்லை. அந்தச் சிலந்தியின் வலையில், பறந்து வந்த ஒரு ஈ மாட்டிக் கொண்டு விட்டது. அது தத்தளித்தது. சில விநாடிநேரங்கள்தாம். சிலந்தி வேகமாக அதனருகே வந்து தன் கால்களால் அதைப் பற்றிக்கொண்டது.. தன் கூரிய உறிஞ்சும் குழாயை மெல்ல மெல்ல ஈயின் தலையில் குத்தியது. ஓர் உயிரின் துடிப்பும், மற்ருேர் உயிரின் வாழ்வும் அங்கே ஒரே சமயத்தில்நிகழ்ந்து கொண்டிருந்தன.

அவனுக்கு ஏனே அனுசூயாவின்நினைவு மீண்டும் மீண்டும் வந்தது. கடைசியாகப் போன போது அவளை அவன் சந்திக்க முடியவில்லை. அவளிடத்தில் இந்தக் குறுகிய கால இடைவெளியில் பெரும் மாறுதல் ஏற்பட்டிருப்பதைப் போலத் தோன்றியது. தான் செலவு செய்து கொண்டு வந்தும் அவளைப் பார்க்க முடியாமற்போனதில் அவனுக்குவருத்தம் தான். அவளுக்கு நிறைய உறவினர்கள் என்று சொல்லுவாள். மாமன் மகன், அத்தை மகன் என்று பலமுறைப் பையன்களுண்டு என்று அவனுக்குத் தெரியும். சென்ற தடவை அவளைப் பார்த்த பொழுது பேசினதெல்லாம் இப்பவும் காதுகளில் ஒலிப்பது போலிருந்தது.

'அனுசூயா! நாம ரெண்டு பேரும் இப்படியே சந்திச்சிண்டிருந்தா போதுமா?'

'வாட் டு யூ மீன்? வேற என்ன செய்யணும்?'

# சீனத்துக் கொழுக்கட்டை!

சீன மக்களும் கொழுக்கட்டைப் பிரியர்களே! அவர்கள் தயாரிக்கும் கொழுக்கட்டை நம்ம ஊர் கொழுக்கட்டை போல் இருக்காது. கோதுமை மாவை நீர் விட்டு மெதுவான பதத்திற்குக் குழைத்தெடுத்த பின் ஒரு விரல் அளவு விட்டமுள்ள சிறு சிறு வட்டங்களாகப் பலகையில் உருட்டித் தட்டி எடுப்பர். பின், ஒவ்வொரு வட்டத்திற்குள்ளும் நன்கு கொத்திச் சிறிதாக்கப்பட்ட இறைச்சி, காய்கறியுடன் உப்பு, சோயாச் சாறு, நல்லெண்ணெய் சேர்த்துக் கலந்த உள்ளீட்டை வைத்து மூடுவர். பின், இச்சிறு கொழுக்கட்டைகளை ஆவியில் அவிக்காமல் கொதிக்கும் நீருக்குள் போட்டு, ஒன்றுகூடச் சிதைந்து போகாமல் மிக லாகவமாக எடுப்பர். இக் கொழுக்கட்டைகளைச் சோயாச் சாறு, வினிகர், பச்சை உள்ளிப்பூண்டு ஆகியவற்றுடன் சாப்பிடுவார்கள் சீன மக்கள். இச்சிறு கொழுக்கட்டைகள் வட சீன மக்களுக்கு மிகவும் பிடித்தமான, மிக முக்கியமான உணவு. விழாக் காலங்களிலும், விடுமுறை நாட்களிலும் குடும்பத்தினரும் உறவினரும் ஒன்றுகூடி ஒரு மேஜையைச் சுற்றி அமர்ந்து சிரித்துப் பேசிக்கொண்டே சிறு கொழுக்கட்டை செய்யும் முறையே ஓர் அழகு. புத்தாண்டுக்கு முதல் நாள் இரவு சீன மக்கள் ஒன்றுகூடி விடிய விடிய இக்கொழுக்கட்டைகளைச் செய்து உண்பர். குடும்பங்கள் ஒன்று சேரும் மகிழ்ச்சித் திருநாளைக் குறிக்கும் உணவாகவும், அதிர்ஷ்டத்தைக் கொண்டு வரும் உணவாகவும் இது கருதப்படுகிறது.

—ராணி ரத்னதேவி

'நான் உங்க அப்பாவை மீட் பண்ணி நம்ம விஷயமா சொல்லலாம்னு பார்க்கிறேன்.'

'எதுக்கு?'

'தெரியாத மாதிரி பேசாதே. உன்னை என் மனைவியாக்கிக்க.'

அவள் சிரித்தாள்.

'இந்த ஆண்களே இப்படித்தான். உரிமை, உடைமை இதுகளுக்காகவே வாழுறுப்ல எப்பவும் தங்களுடைய சௌகரியங்களை மட்டும் நினைச்சுப் பார்க்கிறது!'

'ஏன், உனக்கு சௌகரியத்துக்கு என்ன குறைச்சல்?'

'அப்பாவுக்கு பிஸினஸ் இப்போ சரியில்லே. மூணு படங்கள் தொடர்ச்சியா சரியா ஓடல்லே. இப்ப என் கல்யாணத்துக்கு என்ன செய்ய முடியும்?'

'வரதட்சிணை வேண்டாம். கல்யாணத்தை டீஸன்டா செய்து கொடுத்தா போதும். அதுகூட முடியாதா?'

அவள் சிறிது நேரம் ஒன்றும் பேசவில்லை.

'சதீஷ்! நாம நண்பர்களா இருக்கிறதிலே உங்களுக்கு என்ன அசௌகரியம் இருக்கு? மேலும், உங்களுக்குன்னு ஒரு உத்தியோகம் இல்லை. இந்த நிலையிலே நாம மேரேஜ் செய்துகிட்டா எனக்கும் சேர்த்து உங்க வீட்ல சாப்பாடு போடணும். உங்களுக்கு வசதியிருக்கு. ஆனா அது முறையா தெரியல்லே. ஸோ! நீங்க முதல்லே வேலை தேடிக்குங்க!'

நியாயமான பேச்சு.

அன்று அவள் அதற்குப் பிறகு சரியாகப் பேசவில்லை. அவன் அவளை உற்சாகப்படுத்தியும் அவள் ஒரு மாதிரியாகவே இருந்தாள்.

'அனு! ஏன் என்னவோ போலிருக்கே?'

'ஐ'ம் ஆல்ரைட்! அம்மாவுக்குத்தான் ரெண்டு நாளா உடம்பு சரியில்லே. வீட்லே சமையற்காரி இன்னிக்கு வரல்லே. நீங்க ஊரிலேருந்து வந்து என்னைப் பார்க்காம ஏமாந்து போயிடக் கூடாதேன்னு வந்தேன். நான் போகணும்.'

'ஐஸ்கிரீம் சாப்பிடலாமா?'

'நோ! தாங்க்ஸ். இப்ப வீட்டுக்குப் போனாப் போதும்!'

அவளை அப்படியே அள்ளியணைத்துச் சமாதானப்படுத்தி...

ஆனால் அவள் எழுந்து விட்டாள்.

'சதீஷ்! நான் புறப்படறேன்.'

'அனு! சரியா ஒரு மணி நேரம்கூட இன்னிக்கு நீ என்னோட இல்லே.'

'ஐ'ம் ஸாரி! நான்தான் சொன்னேனே!'

அவள் குழந்தையைப் போல எதிலும் பிடிவாதம் பிடிப்பவள். தான் நினைத்ததைச் சாதிக்க வேண்டுமென்று எண்ணுபவள். வேகமாக நடக்க ஆரம்பித்தாள்.

'டாக்ஸியிலே கொண்டு போய் விட்டுடட்டுமா?'

'ம்...வேணாம்!' பஸ் ஸ்டாப்பில் வந்து நின்ற பஸ்ஸில் ஏறிக் கொண்டு போய் விட்டாள்.

அவனால் தன்னைச் சமாதானப்படுத்திக் கொள்ளவே சிறிது நேரம் பிடித்தது. அவளுடன் பழக ஆரம்பித்து ஏறக்குறைய ஒரு வருடம் ஆகிறது. இந்தக் காலத்தில் அவளை மகிழ்விக்கவென்று நிறையவே செலவு செய்திருக்கிறான். அவனுடன் படிக்கும் ஹாஸ்டல் நண்பன் சங்கர்கூட சில தடவை இவனை எச்சரித்திருக்கிறான். சங்கர் தன்மேல் அசூயைப் பட்டு அப்படியெல்லாம் பேசுகிறான் என்று இவன் நினைத்ததுண்டு.

'சதீஷ்! அனுசூயா ஒரு பிறவி நடிகை. வசதியுள்ளவன் நீ என்பதால் உன்னுடன் நெருங்கிப் பழகி அவளுக்குத் தேவையானதை இலவசமாகப் பெறுகிறாள். வேறொருவனாக இருந்தால் அவளை இத்தனை நாள் சும்மா விட்டு வைத்திருக்க மாட்டான். பேசுவதில், குறிப்பாக அழகான பெண்களுடன் பேசிப் பொழுதைக் கழிப்பதில் சில ஆண்களுக்கு மன நிறைவு ஏற்பட்டு விடும். நீ அந்த ரகத்தைச் சேர்ந்தவன் என்பதை அவள் புரிந்து கொண்டு விட்டாள். உன்னால் தன்னுடைய பெண்மைக்கு எவ்விதமான ஆபத்தும் நேரிடாது என்பது அவளுக்குத் தெரியும். நீ அவளைத் திருமணம் செய்து கொள்கிறாயா என்று ஒருமுறை கேட்டுப் பார். உண்மை அப்போது விளங்கும்!' என்றான் சங்கர்.

'நிச்சயமாடா! ஐ நோ ஹர். நல்ல பெண். பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவ!'

சங்கர் கேலியாகச் சிரித்தான்: 'அவ தந்தை சாதாரண ஆள். உனக்கு உண்மை தெரிஞ்சா நீ அவகிட்டே பழகறதை நிறுத்திடுவே. அதனாலதான் அவ உன்னைத் தன் வீட்டுக்கு ஒரு முறைகூட



''உங்களுக்கு வயசு மட்டும் குறைவா இருந்தா நம்ப கம்பெனில மாசம் ஐந்நூறு ரூபாய் சம்பளத்தில ஒரு வேலை போட்டுக் கொடுத்திருப்பேன். ஆனா இப்ப உங்களுக்கு ரிடையர்மெண்ட் வயசாகிப் போச்சே!''

''பரவாயில்லீங்க! எதுனுச்சும் பென்ஷன் போட்டுக் கொடுத்துடுங்க!''

—இரா. ஆ. சதாசிவம்

*

அழைத்துப் போனதில்லே. சில பேரோட யுக்தி அது. இதுக்கு முன்னால அவ இதே மாதிரி சில பேர்கிட்டே பழகியிருக்கா. நல்ல புடவைகள் வாங்கிக் கொடுத்தா வாங்கிப்பா. சினிமா, பீச்னு கம்பெனி கொடுப்பா. ஆனா விரலால கூட தீண்ட விட மாட்டா.'

'ஐ நோ! யாரோ ஒருத்தன் அப்படித் தான் ஒரு முறை அவகிட்டே சிறிது முறை தவறி நடக்க முயற்சித்தானாம். சினிமா தியேட்டரிலேயே பளார்னு கன்னத்திலே அறைஞ்சிட்டு எழுந்து போயிட்டாளாம். தைரியசாலியான பெண்.'

'சரியான அசமந்தம்டா நீ! உன் பணத்தையும் நேரத்தையும் வீணாக்கறே. நிச்சயமா அவ உன்னை மேரேஜ் பண்ணிக்கமாட்டா. மொழிப் பிரச்னை இருக்கு. மேலும் உன் பேரண்ட்ஸ் சம்மதிக்கணும். அவளோட பேரண்ட்ஸூம் சம்மதிக்கணும். பீ பிராக்டிகல்.'

சங்கரின் வார்த்தைகள் எதிரொலித்தன.

அப்பா, அம்மா இவர்களிடம் சம்மதம் வாங்கிவிட்டால், பிறகு அவளை வழிக்குக் கொண்டு வந்து விடலாம் என்றுதான் இப்பொழுதும் அவன் நினைத்தான்.

''அண்ணா!''—ஜானு கூப்பிட்டாள்.

தலையை நிமிர்ந்தவன் முகத்துக்கு நேரே அவள் ஒரு கவரை நீட்டினாள்.

கவரை வாங்கிக் கிழித்துக் கடிதத்தை எடுத்துப் படித்தான். சங்கர்தான் போட்டிருந்தான்.

மை டியர் சதீஷ்! கோவை.

கங்கிராஜூலேஷன்ஸ். நானும் பாஸ் செய்துவிட்டேன். மேற்கொண்டு என்ன செய்யப் போவதாக உத்தேசம்? நான் கல்ஃப் கன்ட்ரீஸில் ஒன்றான சவூதியாவுக்குப் போகப் போகிறேன். மாதம் நாலாயிரம் டாலர் சம்பளம். மூன்று வருட ஒப்பந்தம்.

ஒரு சுவாரசியமான விஷயம். உன் கேர்ள் ஃபிரெண்ட் அனுசூயாவை நான் பம்பாய் போயிருந்தபோது சந்திக்க வாய்த்தது. இப்பொழுது அவள் மிஸஸ் சூரியநாராயணா. கல்கத்தாவில் அவள் புருஷனுக்கு வேலையாம். ஹனிமூனுக்காக பம்பாய் வந்ததாகச் சொன்னாள். விட்டுத் தள்ளு. நம் வாழ்க்கைதான் நமக்கு முக்கியம். 'பாஸிங் கிளவுட்ஸ்' போல சில நினைவுகளை ஒதுக்கிவிட்டுச் செல்வதுதான் விவேகம்.

இன்னும் இரண்டு வாரங்களில் நான் சவூதியா போகிறேன். பை!...பை!...'

அன்புடன், சங்கர்.

சதீஷுக்குச் சில நிமிட நேரம் அந்த அறையே தட்டாமாலை ஆடுவதுபோல் இருந்தது. மீண்டும் ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்றவைத்துக் கொண்டான். நிலையற்றதான வாழ்க்கையில் நிஜம் போலத் தோன்றி மறையும் சம்பவங்கள். நல்லவேளையாகத் தான் தன் பெற்றோரிடம் இந்த சமாசாரத்தைச் சொல்லவில்லை. எவ்வளவு அவமானமாகப் போயிருக்கும்.

'நம் வாழ்க்கைதான் நமக்கு முக்கியம்!' பொருள் மிகப் பொதிந்த சொற்கள். துயரம் மனத்தின் ஒரு மூலையில் தலையெடுத்து நின்ற போதிலும் சங்கரின் அவ்வரிகள் அவனுக்கு மீண்டும் தன் எதிர்காலத்தைப் பற்றி நினைக்கத் தூண்டியது.

சிகரெட் புகையினூடே தெற்கு மூலைக் கறுப்புச் சிலந்தி தெரிந்தது. சிக்கின ஈயை முழுமையாக உறிஞ்சிவிட்டு அடுத்த இலக்கிற்காக அது காத்திருப்பது போல் தோன்றியது.

(தொடரும்)



இப்பொழுது

**மதர்ஸ் ஸ்பெஷல்...**

உங்கள் குழந்தைக்கு,
அவன் விரும்பிய அளவு ஊட்டம்
தரும் தாய்ப்பாலை நீங்கள்
அளித்திட உதவி செய்கிறது.

# வேர்கள்

## கிருஷ்ணமணி

### 13

திருமண அழைப்பிதழ்!

கவரிலிருந்து வெளியே எடுத்தான் வெங்கடேசன்.

கிரிமினல் லாயர் முத்துசாமியின் மகன் சிவராமனுக்குக் கல்யாணம். மணப்பெண் பி. எஸ்ஸி., படித்திருப்பதாகத் தெரிய வந்தது. சிவராமனுக்கு மாமனாராகப் போகிறவர் பிஸினஸ் வட்டாரத்தில் பெரிய புள்ளியாக இருப்பார் போலும். அவன் தனக்குள் சிரித்துக் கொண்டான். இரண்டு தலைமுறைகளுக்குப் பிறகு அந்தக் குடும்பம் வியாபாரத் துறையில் செல்லத் தொடங்கிவிட்டது.

விளையாட்டுப் போல கிட்டத்தட்ட ஒரு வருடம் ஓடியே விட்டது. இந்த ஓராண்டிற்குள்தான் எத்தனை மாறுதல்கள்!

சுயமாக இப்போது அவன் தொழில் செய்கிறான். திண்டிவனத்தில் ஆபீஸ் வைத்திருக்கிறான். சிவில், கிரிமினல் என்று இரண்டு வகைகளிலுமே தன்னிடம் வரும் சிறு வழக்குகளுக்கு ஆஜராகிறான். மாதம் சுமாரான வரும்படி வந்து கொண்டிருக்கிறது. தினமும் கிராமத்திலிருந்து டவுனுக்கும், டவுனிலிருந்து கிராமத்துக்கும் போக ஒரு ஸ்கூட்டர் வைத்திருக்கிறான். மூன்றே மைல் தூரம் என்பதால் இரவு ஏழு, எட்டு மணி வரையிலும் காரியாலயத்திலேயே அவனால் இருக்க முடிகிறது. டைப்பிஸ்ட், குமாஸ்தா வேலைகளையும் அவனே செய்து கொள்கிறான். பிராக்டிஸ் இன்னும் கொஞ்சம் விரிவடைந்தால் தான் ஆள் போட முடியும்.

சில தினங்களில் அலுப்பு மிகுதியாக இருக்கும். சென்னைக்குச் சென்று தொழில் துவங்க முடியாமற் போனதில் சற்றே வருத்தம் இருந்தது. காலப் போக்கில் எல்லாம் சரியாகிவிடும். விழுப்புரம், கடலூர் என்று வெளியூர்களுக்குச் செல்ல வேண்டி வரும் நாட்களில் மனம் சற்றே உற்சாகமடையும். ஜில்லா அளவில் புகழ்பெற்ற வக்கீல்கள் அங்கே வருவார்கள். அவர்களுடைய வாதங்களைக் கேட்க வாய்ப்பு ஏற்படும். தொழில் முறையில் முன்னேற்றம் காண வேண்டும் என்ற அவன் மனத்திற்கு அது இதமளிக்கக்கூடியதாயிருந்தது. தொழிலில் வெற்றிகரமான வக்கீல் என்று பெயரெடுத்து விட்டால் வழக்குகள் தேடி வரும் என்பதை அவன் உணர்ந்து கொண்டான்.

சென்னைக்கு இந்தத் திருமணத்தையொட்டியாவது போக வேண்டியது தான். அடுத்து, அவன் நினைவில் சியாமளி தோன்றினாள். கடைசியாகத் தான் அவளிடம் பேசியது நினைவிற்கு வந்தது. அவளும்கூட இப்போது பயிற்சி முடிந்து சப்-கலெக்டராக இருப்பதாகக் கேள்வி. அந்த வித்தியாதரன் வடக்கே அதிகாரியாக இருக்கிறானாம். வாழ்க்கையென்பதே ஒரு விசித்திரமான அனுபவம்தான்.

பாட்டி கூப்பிட்டாள்: ''அம்பி! மைசூர்லேருந்து கடுதாசி ஏதானும் வந்திருக்கா?''

உள்ளே போனுன்: ''இல்லே பாட்டி!''

''வருஷாப்திகத்துக்கு வந்திட்டுப் போய் நாலு மாசமாறது. ஒரு கடுதாசு கூடப் போட முடியல்லியோ அவளுக்கு?''

பாட்டியின் சலிப்பு அவனுக்குப் புரிந்தது. அவனுடைய தமக்கையின் கணவர் இந்தத் தடவை வந்திருந்த போதுகூட ஜாடைமாடையாகப் பணம் கேட்டார். சொத்தில் தன் மனைவியின் பங்கைப் பிரித்துக் கொடுத்துவிடும்படி சற்று அழுத்தமாகவே கேட்டார்.

பாட்டி அப்போது சொன்னுள்: ''தென்னந்தோப்பு ரெண்டு ஏக்கர்னுதான் பேருக்கு இருக்கு. வருஷத்திலே அதிலே ஆயிரத்தைந்நூறுகூட வரமாட்டேங்குது. மூணு ஏக்கர் நஞ்சையிலே ரெண்டுபோகம்தான் பயிர் பண்ண முடியறது. பம்ப்ஸெட் போட்டிருக்கு. மண்வளம் இல்லே. சாப்பாட்டுக்கு அரிசி



வர்றது. மாடுகள் தீவனம், வேலைக்காரன் சம்பளம், எலெக்டிரிக் பீஸுன்னு சரியா இருக்கு. இந்தப் பிள்ளையாண்டானுக்கு இன்னும் வேலையிலே வருமானம் கூடி வரல்லே. அவனும் கார்த்தால எட்டரை மணிக்குப் போனு ராத்திரி ஒம்பதுக்குத்தான் வரான். மாடாட்டமா உழைக்கிருன். மாப்பிள்ளே! கொஞ்சம் பொறுத்துக்குங்க. உங்க பங்குக்கு உண்டானதைப் பணமா கொடுத்திடச் சொல்றேன். பூர்வீகமா வந்த இந்த ஜமீனை விக்க வேணும். வித்துட்டா திரும்ப வாங்க முடியாது...! நான் உசிரோட இருக்கிற வரைக்குமாவது கடையிலே அரிசி வாங்கிச் சாப்பிடற நிலைமை வர வேணும்னு பார்க்கிறேன்.''

மாப்பிள்ளை நாராயணசுவாமி பாட்டியின் ஸென்டிமென்டுக்கு மரியாதை கொடுக்க வேண்டியதாயிற்று. ஊரில்

மணியக்காரரிடம் பாட்டி தன் ஜீவிய பரியந்தம் மீதமிருக்கும் நிலத்தை யாரும் வாங்காமலிருக்கும்படி செய்யக் கேட்டுக் கொண்டிருந்தாள். நாராயணசுவாமி மணியக்காரரிடம் நியாயம் கேட்டுப் போனபொழுது கூட அவர் சொன்னதாகச் சொன்னார்கள்.

'மாப்பிள்ளே! அந்தக் கிழவி இந்த ஊருக்கே தாய் மாதிரி. அவ மனசை நோக அடிக்க யாரும் இங்கே தயாரா இல்லே. ஏரிக்கரை மூணு ஏக்கரை அசலூர்க்காரருக்கு அம்பி வித்ததுக்கே எல்லாரும் ரொம்ப ஃபீல் பண்ணினா. பேங்கர் சீனுங்கிறத்தினாலே சரியாப் போச்சு. வேற ஒருத்தர்னா வாங்க விட்டிருக்க மாட்டா. போகட்டும். எண்பது வயசு கிழவிக்கு! அவ காலம் இன்னும் கொஞ்ச நாள்தான். பொறுத்துக்குங்க!'

ஒரு ஏக்கர் தென்னந்தோப்பு, ஒண்ணரை ஏக்கர் நிலம் இவற்றுக்குக் குத்து மதிப்பாகப் பதினையாயிரம் ரூபாய் தந்து விட்டால் விடுதலைப் பத்திரம் எழுதித் தந்து விடுவதாக மாப்பிள்ளை வலியுறுத்திச் சொன்னபோது 'அத்திம்பேர்! ப்ளீஸ் கிவ் மீ ஸம் டைம். ஐ வில் ஸெட்டில் இட்!' என்று இவன் சொன்னது நினைவிலாடியது.

அந்தப் பதினையாயிரம் ரூபாயைச் சேர்க்க அவன் எவ்வளவு உழைக்க வேண்டியிருக்கிறது. இன்னும் ஓராண்டிற்குள் கொடுத்து விடலாம் என்று தோன்றியது. பணம் என்று வந்து விட்டால் உறவுகள் முறிந்து போவதை அவன் நீதிமன்றங்களில் பார்த்து விட்டான். முன் இரவு நேரங்களில் டவுனில் பெருமாள் கோயிலில் நடக்கும் இராமாயணப் பிரவசனங்களை ஏற்பாடு செய்திருக்கும் வேணுகோபால், தன் தம்பியுடன் உறவை முறித்துக் கொண்டது சொத்து விவகாரத்தில்தான் என்று இவனுக்குத் தெரிய வந்தபோது இவனுக்கு அதிர்ச்சியாக இருந்தது. தம்பிக்காக ஒரு சாம்ராஜ்யத்தையே துறந்து கானகம் சென்ற கருவிலே திருவுடையோனான ஸ்ரீ ராமனின் புண்ணிய கதையை இவர்கள் கேட்பது கூட ஒரு பொழுதுபோக்குக்காகத்தான் போலும்! தனக்கும் தன் தமக்கைக்கும் அம்மாதிரியான ஒரு நிலை என்றும் ஏற்பட்டு விடக்கூடாது என்றெண்ணினான்.

''என்னடா, யோசனை பலமா இருக்கு? மணியாகல்லியோ உனக்குப் புறப்பட?''

கூடத்தில் மாட்டப்பட்டிருந்த கடிகாரம் மணி பத்து என்று காட்டியது. அன்று அவனுக்கு கோர்ட்டில் வேலையில்லை. அம்மாதிரி நாட்களில் சற்று நிதானமாகக் கிளம்புவான். பத்து அல்லது பதினைந்து நிமிடங்களில் போய் விடலாம்.

''பாட்டி! மெட்ராஸ்லே நான் போய் தங்கியிருந்தேனே என் காலேஜ் ஃபிரெண்ட் சிவராமன்...''

''ஆமாம்......''

''அவனுக்குக் கல்யாணமாம்!''

''போயிட்டு வாடா! ஏதோ உன்னாலானதை பிரெஸன்ட் பண்ணிட்டு வா. ஹூம்! உனக்கும்தான் வயசு ஏறிண்டு போறது. சீனு பொண்ணைப் பண்ணிக்க மாட்டேன்னுட்டே. சீனு லேவாதேவியிலே கொடுக்கல் வாங்கல் பண்ற மாதிரி பொண் கொடுத்துப் பொண் எடுத்துட்டான்! ஈஸ்வர சித்தம்'' என்றாள் பாட்டி.

''நல்ல வேளையா ஞாயிற்றுக்கிழமையா பார்த்து முகூர்த்தம் வச்சிருக்கா.''

''அவனுக்கு ஒரு தங்கை உண்டோல்லியோ?''

''இருக்கா. சியாமளின்னு பேரு. இப்போ சப்-கலெக்டரா உத்தியோகம் பார்த்திண்டிருக்கா!''

''பேஷ்! ... இந்தக் காலத்திலே பொண்கள்லாம் ஆம்பிளையாட்டமா உத்தியோகம் பார்க்க வந்துடறா. ஏதோ டீச்சர், நர்ஸ், லேடி டாக்டர்னு சொன்னாக்கூடப் பரவாயில்லே. எதிலேயும் நாங்களும் வருவோம்னு வந்துடறா. ஆமாம்! அவளுக்குக் கல்யாணம் ஆகிட்டதோ?''

''இல்லே.''

''என்ன வயசிருக்கும்?''

''இருபத்தஞ்சுக்குக் குறைவுதான்.''

''அவளுக்குன்னு எவன், எங்கே பொறந்திருக்கானோ! இவளே சப்-கலெக்டரா இருந்தா, வர்றவன் இன்னும் பெரிய உத்தியோகம் பார்க்கிறவனா இருக்க வேணுமோ! என்னவோ இந்தக் காலத்துப் பொண்கள் தும்பை விட்டுட்டு வாலைப் பிடிக்க முயற்சி பண்றாப்ல யௌவனத்தையெல்லாம் போக அடிச்சிட்டு, சாவகாசமா கல்யாணம் பண்ணிக்கிறேங்கிறதுகள். அவளுக்கு உத்தியோகம்பார்க்கணும்னு நிர்ப்பந்தம் இருக்கோ?''

''இல்லே! பொழுதுபோக்கு. அவ காலிலேயே அவ நிக்கணும்னு ஒரு எண்ணம்.''

''நல்லாருக்கு போ! நல்லாப் படிச்ச பொண்ணு. காலா காலத்திலே கல்யாணம் பண்ணிண்டு பாங்கா குடும்பம் நடத்தமாட்டாளோ! உத்தியோகத்துக்குப் போனாத்தான் ஜீவனம்கிற மாதிரி சிலதுகளுக்கு வாழ்க்கை அமைஞ்சி போயிடறது. இந்த மாதிரி பெரிய எடத்துப் பொண்கள்லாம்...... காலம் ரொம்ப மாறிப் போயிட்டுதுடா!''

''அவ நல்லவதான் பாட்டி. ஏதோ அவ மனசில சுதந்திரமா, யாரையும் சார்ந்து வாழக்கூடாதுன்னு ஒரு எண்ணம். அதனால உத்தியோகம் பார்க்கிறா!''

''சார்ந்து வாழறதுன்னா என்னடா அம்பி? எனக்குப் புரியல்லே...... தாலிகட்டற புருஷனோட வாழறதா? அப்படிப் பார்த்தா இவ இருக்கிற உத்தியோகத்திலே மேலதிகாரியா இருக்கிற ஆம்பிளைக்கு இவ பதில் சொல்லும்படியா வராதோ? மனித வாழ்க்கையிலே எல்லாருமே

எதையானு சார்ந்துதாண்டா வாழ்ந்தாகணும். எல்லாத்தையும் துறந்துட்டு ஈஸ்வரனேட பாதமே துணேன்னு போருளே, இந்த மனித வாழ்க்கையை அல்பமா நினைச்சு உதறியெறிஞ்சிட்டு, சத்தியமானதைத் தேடிண்டு போருளே அவாளுக்குத்தாண்டா அந்தச் சுதந்திரம். நமக்கெல்லாம் இல்லே.''

பாட்டியின் வாயைக் கிளற வேண்டி மேலும் கேட்டான்:

''சாமியாராப் போனு சுதந்திரமா இருக்கலாம்கிறியா பாட்டி?''

''சாமியாரா போறவன்லாம் துறவியாடா? அந்த வேஷத்திலே உலாத்தருன்கள். காரு, பங்களான்னு கோஷ்டி சேர்த்துண்டு... உங்க தாத்தா கதையா சொல்வார்டா அம்பீ. எனக்குத் தெரிஞ்சு இன்னிக்கு ஒரு மகாத்மா நம்மோட இருக்கார்னு அவர் பெரியவர் தாண்டா. கைப் பிடி அவலும், குவளைத் தண்ணியும்தான் ஆகாரம். இருபது வருஷத்துக்கு முன்னே இங்கே வந்திருந்தார். அவர் கண்களிலே என்ன ஒளி தெரியுமாடா! காந்தம் மாதிரி இருக்கும். சாந்த ஸ்வரூபி! இப்பகூட கால் நடையா ஊர் ஊரா போயிண்டு இருக்காராமே! ராமசாமி அன்னிக்குப் படிச்சுச் சொன்னுன். லோகம் சௌக்கியமா இருக்கணும்னு ஈஸ்வரன்கிட்டே சதா காலமும் முறையிட்டுண்டு இருக்கா. அவாள மாதிரி புண்ணியாத்மாக்களால தான் நமக்கெல்லாம் இன்னிக்கும் காலம் போயிண்டிருக்கு.''

வெங்கடேசன் அதிர்ந்து போனுன். சுந்தரிப் பாட்டியின் உண்மையான வார்த்தைகள் அவன் மனத்தைத் தொட்டன. சத்தியத்தைத் தேடிக் கொண்டு போகும் ஓர் உன்னத நிலே தானே சுதந்திரமானதாக இருக்க முடியும்!

''என்னிக்கு மெட்ராஸ் போகப் போறே?''

''சனிக்கிழமை ராத்திரி ரயில்லே போகலாம்னு இருக்கேன். முகூர்த்தத்துக்கு இருந்திட்டு அன்னிக்கு மத்தியானம் புறப்பட்டு வந்துடணும். திங்கட்கிழமை ஒரு கேஸுக்கு அப்பியர் ஆகணும்.''

''சரி! அப்படியே பண்ணு.''

''நான் புறப்படறேன் பாட்டி.''

''நம்ப வீட்டு ஐயா மூணு நாளா ஊரிலே இல்லே போலிருக்குங்களே...!''

''உனக்கு எப்படியப்பா தெரியும்?''

''மூணு நாளா குழம்பு நல்லாவே இல்லீங்களே!''

— ஜி. சுப்பாராவ்




''சரிடா.''

''அம்மா! நான் வரேன்.''—சொல்லிக் கொண்டே அவன் வெளியே போனுன்.

டவுனிலிருந்த தன் காரியாலயத்திற்கு அவன் போய்ச் சேர்ந்த பொழுது இருவர் அவனுக்காகக் காத்திருந்தனர். அவர்களில் ஒருவர், அறிமுகக் கடிதம் கொண்டு வந்திருந்தார். கடலூரில் அவனுக்குத் தெரிந்த நண்பரொருவர் எழுதிய கடிதம் அது. கடிதத்தைப் படித்து முடித்து வந்தவர்களைப் பார்த்தான்.

ஒருவருக்குச் சுமார் நாற்பது வயதிருக்கும். மற்றவர் அவரைவிடச் சற்று இளையவராகக் காணப்பட்டார்.

அறைக் கதவைத் திறந்தான். மின் விசிறியைச் சுழல விட்டான். வந்திருப்பவர்களை நோட்டம் விட்டான்.

''உட்காருங்க ஸார்! சொல்லுங்க'' என்றுன்.

நாற்பது வயதுக்காரர்தான் பேசினுர்: ''இவர் ஊர் நாட்டாண்மை. பேரு நல்லமுத்து. என் பேரு தங்கராஜு.



''என்னங்க, பெண் வீட்டுக்காரங்க பிள்ளை வீட்டாருக்கு ஏதோ பெரிய மூட்டை தர்றுங்களே...?''

''கிழிஞ்ச துணி மூட்டை! அதை போட்டுத்தான் பிள்ளை வீட்டுக்காரங்க எவர்சில்வர் பாத்திரம் வாங்கிக்கணும்!''

— வி. பார்த்தசாரதி



நான் மளிகைக் கடை வச்சிருக்கேன். ஐயா கடுதாசிலே எழுதியிருப்பாரே!''

''ம்...... சொல்லுங்க தங்கராஜு!''

தங்கராஜு நெளிந்தார். அவர் பார்வையில், இவ்வளவு இளம் வயதினரான வக்கீலிடம் வழக்கை ஒப்படைப்பதா என்பது போன்ற அர்த்தம் தொனித்தது.

''எங்க ஊர்லே பொதுவான ஒரு குளம் இருக்குதுங்க. அங்கே தண்ணி எடுப்பாங்க ஊர் ஜனங்க. பொதுவா ஜாதி இந்துக்கள் மட்டும்தான் எடுக்கலாம்னு கட்டுப்பாடு. சேரி ஜனங்க வந்தா எட்ட நிக்கணும். யாராவது மொண்டு ஊத்துவாங்க. இன்னவரைக்கும் இல்லீங்க, நேத்து வரைக்கும் அதான் வழக்கம். சேரிக்காரங்களைக் கிட்டே வராதேன்னு நாங்க சொல்றது கிடையாது. ஆனா குளத்திலே தண்ணி எடுக்கக் கூடாதுங்க. நேத்து ஒருத்தன அந்தக் கட்டுப்பாட்டை மீறிட்டான். அங்கே நாட்டாண்மை அந்தச் சமயத்திலே போகும்படியா ஆயிடுச்சி. விசயம் தெரிஞ்சதும் அவனுக்கு அஞ்சு ரூவா அபராதம் போட்டுட்டாரு. கட்ட மாட்டேன்னுட்டான். அதுக்கும் மேல போயிட்டான். நேத்து ராவிலே பெரிய சண்டையாயிடுச்சி. கைகலப்பு ஏற்பட்டுப் போச்சு. தண்ணி எடுத்தவனுக்கு மண்டையிலே அடிபட்டுடுச்சுங்க. நாட்டாண்மைதான் அடிச்சுப் போட்டாருன்னு போலீஸுலே பிராது கொடுத்திட்டான். அப்ப இவர் அங்கே போகவே இல்லே. கேஸு தாக்கல் ஆயிடும் போல இருக்குதுங்க. இதான் விசயம்.''

''ம்......''

''என்னய்யா சொல்றீங்க?''

''சொல்றதுக்கு ஒண்ணுமில்லே. நான் இந்த கேஸுக்கு அப்பியர் ஆக முடியாது.''

''என்னங்க இது? சிபாரிசு செஞ்சவரு......''

''மன்னிக்கணும். அவர், வழக்கு என்னன்னு தெரிஞ்சுகிட்டுதான் கடுதாசி கொடுத்தனுப்பினரா?''

''ஆமாங்க!''

''ஆச்சரியமா இருக்கே!''

''இதிலே ஆச்சரியமென்னங்க? அவரு, நாங்க எல்லாரும் ஒரே ஜாதிதானுங்களே! எங்க கட்சித் தலைவராச்சுங்களே அவரு!''

வெங்கடேசன் சிரித்தான்:

''இதோ பாருங்க மிஸ்டர் தங்கராஜு! நீங்க என்ன சொன்னலும் நான் இந்த வழக்கை எடுத்துக்க முடியாது. காரணம், இந்திய அரசியல் சட்டப்படி இந்த நாட்டுலே பிறந்த ஒவ்வொருத்தனுக்கும் பொதுவான நீர்நிலை, நிலம், ரோடுகள் இதெல்லாத்தையும் உபயோகிக்க உரிமை இருக்கு. நாளைக்கு ஊர் பொட்டல்லே அவன் கூட்டம் போடக்கூடாதும்பீங்க. அது சரியா? ஜாதி என்னய்யா ஜாதி? எல்லாரும் மனித ஜாதி. அவனுங்க நிலத்திலே பாடுபடறதினலதானே நாம வெயில் படாம சோறு திங்க முடியுது. தாகத்துக்குத் தண்ணியெடுக்க வந்தா அது தப்புன்னு சொன்ன எப்படி? ம்... சட்டப்படி இவர் அவனுக்கு அபராதம் போட்டதே தப்பு. பேசாம திரும்பிப் போய் சமாதானமா போயிடுங்க. இல்லேன்னு விரோதம் காரணமா இவர் தான் அடிச்சாருன்னு சொல்லி தண்டனை கொடுத்திடுவாங்க. காலம் மாறிட

போயிருக்கய்யா. தண்ணியை எடுக்க விடாம தடுக்க உங்களுக்கென்ன அதிகாரம் இருக்கு? குறைஞ்சபட்சம் ரெண்டு வருஷம் ஜெயில்லே போட்டுடு வாங்க, போங்க.''

தங்கராஜுவுக்கும் நல்லமுத்துவுக்கும் முகம் ஜிவ்வென்று ஆகிவிட்டது.

''சாரு! எங்களுக்கும் தெரியும். தோ பாருங்க, கிராமாந்தரங்களிலே நாங்க வச்சதுதான் சட்டம். உங்களே ஆலோசனே கேக்க வந்தா, இப்பிடியா பேசுவீங்க. பீஸு நீங்க கேக்கறது தர்றோம்.''

''தயவுசெய்து போயிடுங்க!''

வந்தவர்கள் மிக வெறுப்புடன் அவனேப் பார்த்துவிட்டு எழுந்து போனுர்கள்.

அந்த நண்பர் தன்னேப் பற்றி என்ன நினைத்துக் கொண்டு இம்மாதிரியான ஒரு வழக்கைத் தன்னிடம் அனுப்பி வைத்துள்ளார் என்று எண்ணியது அவன் மனம். தொழிலில் இப்போதுதான் சற்றுச் சூடு பிடித்து வருகிறது. நியாயமான வழக்குகளேயே அவன் ஏற்றுக் கொண்டான். கடன் கொடுத்து ஏமாந்தவர்கள், செல்வந்தர்களின் பிடியில் சிக்கி மீள முடியாது தவிக்கும் ஏழை விவசாயிகள், சாதிப்பூசல் காரணமாகச் சமுதாயத்தில் நியாயம் மறுக்கப்பட்டவர்கள்— இப்படிப்பட்டவர்களின் வழக்கை எடுத்து விவாதித்து, சட்டத்தின் துணேயோடு வெற்றி பெற்று வருகிறுன். அவனுடைய தாத்தாவைத் தெரிந்தவர்கள் சிலர், தாமே வலிய வந்து சில வழக்குகளேத் தந்தனர்.

பணத்திற்காக மட்டுமே அவன் தொழில் செய்ய விரும்பவில்லே. ஆரம்ப காலத்தில் அது மாதிரி வழக்குகள் கை கொடுக்கலாம். ஆனல், காலப்போக்கில் கெட்ட பெயர் வந்துவிடும் என்று அவனுக்குத் தெரியும். சொத்து விவகாரங்களில் கூடிய மட்டும் 'ஆஃப் தி கோர்ட் ஸெட்டில்மென்ட்' செய்து வைக்கவே அவன் பெரிதும் விரும்பினுன். மனிதர்களிடத்திலிருந்த பலவீனங்களான பெருமை, தான் என்ற செருக்கு, பொருமை முதலிய குணக்கேடுகளேத் தன் வருமானத்திற்குப் பாசனக் கால்வாயாகப் பயன்படுத்திக் கொள்ள அவன் மனம் கூசினுன்.



''நம்ம ஊர்லே நடந்த ரயில் விபத்து சம்பந்தமா உங்களே ஏன் ஸார் போலீஸ்காரங்க விசாரிக்கிருங்க?''

''என் சைக்கிள் மோதித்தானே ரயில் கவுந்துடுச்சு...!''

— முத்து. தங்க. ஐயப்பன்



இந்த நாட்டில் சுதந்திரம் வந்து ஆண்டுகள் பலவாகியும் அரசியல்வாதிகள் தங்கள் அரசியல் லாபங்களுக்காகத் தூபமிட்டு வளர்த்து வரும் சாதிச் சண்டைகள், பிரிவுகள்—இவை அவனுக்கு மிகுந்த மனவேதனேயைத் தந்தன. மகாத்மாஜி போன்ற தியாக புருஷர்களின் தன்னலமற்ற சேவையினுல் பெற்ற சுதந்திரம் கொச்சைப்படுத்தப்படுவது அவனுக்கு எரிச்சலாக இருந்தது.

அவனுக்கு மனம் சோர்வாக இருந்தது. ஜாடியில் வேலேக்காரி கொண்டு வந்து வைத்திருந்த தண்ணீர் இருந்தது. அதை எடுத்துச் சிறிது பருகினுன். கைக் கடிகாரத்தைப் பார்த்தான். பதினேரு மணியாகியிருந்தது. ஒரு வழக்கில் மறுநாள் வாய்தா வாங்க வேண்டியிருந்தது. அதற்குண்டான குறிப்புக்களே எழுத வேண்டும்.

சனிக்கிழமை வருவதற்கு இன்னமும் இரண்டு நாட்கள் இருந்தன. சென்னேக்கு ஒரு நடை போய் வந்தால் ஒரு மாற்றம் கிடைக்கும். பழைய நண்பர்களேப் பார்க்கலாம். சிவராமனேப் பற்றியும் அவனுடைய குடும்பத்தாரைப் பற்றியும் மனம் நினேத்தது. மகிழ்ச்சி தரக்கூடிய அந்த ஞாயிற்றுக்கிழமையைப் பற்றி அவன் உள்ளம் நினேத்துக் கொண்டிருந்தது.

(தொடரும்)

கிருஷ்ணமணி

# 15

''ஆபீஸர்ஸ் டிரெயினிங் காலேஜ்லே லைஃப் எப்படி சியாமளி?''

''வேடிக்கைதான். பல மாநிலங்களிலிருந்து வந்தவா. ஆணும் பெண்ணுமா... அது ஒரு தனி சமுதாயம். சில பேருக்கு ஏதோ வாழ்க்கையிலே பெரிய சாதனையைச் செஞ்சிட்டதாக்கூட நினைப்பு இருந்தது. சில பேர் அங்கேயும் லவ் பண்ணினு; கல்யாணம் பண்ணிண்டா. அக்கப்போர், வம்பு எல்லாம் இருக்கும். எவ்வளவு படிச்சா என்ன, எந்த நிலையிலே இருந்தா என்ன, அடிப்படையிலே மனிதர்தானே! ஸ்னுபரி ஜாஸ்தி. யதார்த்தமா, எளிமையா இருந்தவாளும் இருந்தா. இட் வாஸ் எ குட் எக்ஸ்பீரியன்ஸ். பிரிட்டிஷ் ஸிஸ்டம் ஆஃப் கவர்னிங் இருக்கிறதினால பயிற்சி ஏறக்குறைய அதே மாதிரிதான். கீழே வேலை பார்க்கிறவாகிட்டே எப்படி நடந்துக்கணும்கிறது பாடமா சொல்லித் தரப்படறது. ஐ. ஏ. எஸ்—னு ஒரு புதிய சமுதாயம் அங்கே உருவாக்கப்படறது.''

''உன்னைத் தனிப்பட்ட முறையிலே அந்த வாழ்க்கை பாதிக்கலே போலிருக்கு. ஆமாம்! இவ்வளவு லட்சணமா இருக்கிற ஒருத்தியை......''

''கிண்டலா இருக்கா?''

''கிண்டல் இல்லே, உண்மைதான். நான் முன்னுடியே உன்கிட்டே சொல்லியிருக்கிறதா நினைவு. என் மனசைக் கட்டுப்படுத்திண்டு நான் பரீட்சைக்குப் படிக்கிறத்துக்குள்ளே போறும்னு ஆயிடுத்து. அதான் எப்படின்னு...''

அவளுக்குச் சற்றுப் பெருமையாகக் கூட இருந்தது. அந்த நேரத்தில் அவள் ஒரு பெண்ணாகவே இருந்தாள்.

''சதாசிவ் நர்வானேன்னு மகாராஷ்டிராவைச் சேர்ந்த ஒருத்தன் கடுதாசி எழுதிக் கொடுத்தான்.''

''வெரி இன்டெரெஸ்டிங்...!''

''அவனுக்கு நானில்லாத வாழ்க்கை சூனியமா இருக்கும்னு எழுதியிருந்தான்.''

''ப்ரேவோ...!''

''என்னை சினிமாவுக்கு இன்வைட் பண்ணியிருந்தான்.''

''போனியோ?''

''சினிமாவுக்குப் போனு காதலிக்கிறதா அர்த்தமா? பேத்தல்! பல பெண்களுக்குக் கூட அந்த மாதிரி ஒரு தவறான கருத்து இருக்கு. நளினி மாவ்லங்கர்னு ஒருத்தி. அவ அந்த சதாசிவ் நர்வானேவோட ரெண்டு தரம் சினிமாவுக்குப் போயிட்டு வந்தா. என்கிட்டே அதை இன்னொருத்தர் சொல்ல, நான் நளினிகிட்டே சாதாரணமா கேட்டேன். அவளுக்குக் கோபமே வந்திட்டது. ஸில்லி கேர்ள்!''

''சதாசிவ் நர்வானே விஷயத்துக்கு வா.''

''என்ன இருக்கு. நான் பதிலே சொல்லலல்லே. நம்ம வித்தியாதரன் வேற என்கிட்டே ரொம்ப ஸ்மார்ட்டா நடந்துக்க முயற்சி பண்ணினுர். ஐ ஃபீல் ஸாரி ஃபார் ஹிம். ஒரு நாள் கத்தித் திட்டிட்டேன். இவாளுக்கெல்லாம் நார்மலா திங்க் பண்ணவே தெரியாது போலிருக்கு!''

அவன் சிரித்தான்:

# வேர்கள்

''ஏன் சியாமளி! நீயோ ஒரு ஐ. ஏ. எஸ். சம அந்தஸ்துள்ள ஒருத்தரை வாழ்க்கைத் துணைவரா ஏத்துக்கிறதிலே உனக்கென்ன ஆட்சேபணை?''

அவள் கண்கள் அகன்று விரிந்தன.

''பதவியிலே, படிப்பிலே மட்டும் சம அந்தஸ்து இருந்தா போதும்னு நான் நினைக்கல்லே. வாழ்க்கையைப் பார்க்கிற மனப்பக்குவம், மனிதர்களோட உணர்ச்சிகளுக்கு மதிப்புத் தர்ற பக்குவம், எல்லாத்துக்கும் மேல இன்ஹிபிஷன்ஸ் இல்லாத ஓர் எளிய மனப்பாங்கு—இதுகளுக்குத்தான் நான் முக்கியத்துவம் தரேன்.''

''ஐஸீ......''

''போதும். பரிகாசம் பண்ண வேணும்... ஒரு லெட்டர், பழகினேம் கிறதுக்காகவாவது போடத் தெரிஞ்சுதா உங்களுக்கு?''

''ஐ'ம் ஸாரி. நீ படிக்கப் போயிருக்கிற இடத்திலே தொந்தரவு செய்யக்கூடா தேன்னுதான் போடலே. மேலும் எனக்கு அப்போ பலவித பிரச்னைகள். உத்தியோகம் சீரா அமையாத நிலே. சொல்லப் போனு நான் போராடிண்டிருந்தேன். ஆமாம், உன் மனசில எதை நினேச்சிண்டு நீ இப்படியெல்லாம் பேசறே?''

அவள் பதில் பேசவில்லே.

பார்வையை வேறுபுறமாகச் செலுத்திக் கொண்டிருந்தாள். தன் மனத்தில் ஆக்கிரமிப்பை ஏற்படுத்தி விட்ட அவனிடம் எப்படிச் சொல்வது என்று கூட நினைத்தாள். வித்தியா தரனுடன் முதன் முதலில் தங்கள் வீட்டுத் தோட்டத்தில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தபோதுகூட தான் இப்படி உணர்ந்து, செயலும் பேச்சும் இழந்து நிற்கவில்லே. மாருக, வெங்கடேசனிடம் மட்டும்......

''புரியறது சியாமளி! உம் மனசு எனக்குப் புரியறது. ஆனு நான் உன்னே அடையத் தகுதியுடையவன்தானுங்கிற சந்தேகம் கூடவே ஏற்படறது. இன்னும் தொழில்லே சரியானபடிக்குக் காலூன்றி நிற்காதவன் நான். மேலும், பூர்வீக சொத்துன்னு பெருமையா சொல்லிக்க அம்பதினுயிரம் ரூபா பெறுமானமுள்ளது தான் எனக்கு இருக்கு. வேற ஒண்ணும் கிடையாது. உங்க குடும்ப ஸ்டேட்டஸுக்கு அது உறை போடக் காணுது. நான் எதிர்காலத்திலே பெரிய ஆசாமியா வருவேனு, இல்லேயாங்கிறது கூட 'மியர் ஹைபொதெடிகல்



ஒபினியன்'. அப்படியிருக்கும்போது வெறும் உணர்ச்சிவசப்பட்டு நாம ரெண்டு பேரும் இணையறதுன்னு முடிவெடுத்துட்டா எதிர் காலத்திலே அதுக்காக நீ.........''

''ஸ்டாப் இட்! ப்ளீஸ், என்னைச் சித்திரவதை பண்ணாதீங்கோ! பணம், அந்தஸ்து இதுக்குத்தான் மதிப்புன்னு சொன்னா நான்......''

''நீ... என்ன சொல்ல வந்தே?''

''எம் மனசில உங்களுக்கு இடம் தரல்லே. எனக்கு உங்களைப் போலப் பேச வராது. ஐ லவ் யூ வெங்கட்......!''

அவனுக்குச் சில விநாடிகள் ஒன்றும் தோன்றவில்லை. சியாமளியைப் போன்ற ஒருத்தி......ம்...... அவன் அவளை மிக அன்புடன் பார்த்தான். மென்மையான அவளுடைய மேனி சிலிர்த்து நிற்பது போலத் தோன்றியது. ஒண்ணரையாண்டு



காலமாகத் தன்னுள் ஒரு போராட்டமாக இருந்துவந்த ஓர் உணர்வு அவளுள்ளும் ஓர் எண்ணப் புயலைக் கிளப்பியிருக்க வேண்டும். இத்தனை நாளும் அதை அடக்கிக் கொண்டு, கிடைத்த சந்தர்ப்பத்தில் அவள் வெளியே கொட்டிவிட்டாள். தன்னுடைய நிலைமையை அவன் எண்ணிப் பார்த்தான். தன்னிடம் அந்தத் துணிவு இல்லையோ...?

''சியாமளி!''

''ம்.........''

''எனக்கு என்ன சொல்றதுன்னே தெரியலே.''

''நீங்களா இப்படிப் பேசறீங்க? என்னோட வெங்கட் எந்தப் பிரச்னையையும் சமாளிக்கக்கூடிய மனத் திண்மையுள்ளவர்னு நான் நினைச்சிண்டிருக்கேன். ஐ நீட் யூ வெங்கட். கொச்சையான அர்த்தத்திலே இதை நான் சொல்லலே. உங்களுடைய கம்பீரமான ஆண்மையின் துணை எனக்குத் தேவைன்னு சொல்றேன். ஒரு பெண்ணுக்குச் சர்வ சுதந்திரமா இருக்கத் தேவையானதெல்லாம் எனக்குக் கடவுளருளாலே கிடைச்சிருக்கு. இருந்தாலும் என் மனசுக்குத் தோழமை வேண்டியிருக்கு. உடல் சுகத்துக்காக மட்டும் திருமணங்கிறது இல்லேங்கிறதை நான் புரிஞ்சுண்டுட்டேன். மனசாலேயும் வாழணும்னு நான் தெரிஞ்சிண்டு பேசறேன். ப்ளீஸ்...!''

''நான் உங்கப்பாகிட்டே இதைப் பத்திப் பேசணும்.''

''நல்லது!''

''வா, போகலாம். நான் இன்னும் சிவராமனை கங்கிராஜுலேட் பண்ணலே.''

அவள் அவனைப் பின்தொடர்ந்தாள்.

''எங்க பாட்டியை நீ ஒரு தடவை 'மீட்' பண்ணணும். கிராமத்துக்கு வந்திட்டுப் போ!''

''வரேன். நானே அடுத்த வாரத்திலேருந்து திண்டிவனத்திலேதான் உத்தியோகம் பார்க்கணும்......''

''யூ மீன், உனக்கு போஸ்டிங்ஸ்..?''

'ஆம்' என்ற பாவனையில் அவள் தலையசைத்தாள்.

மிகுந்த வியப்புடன் அவன் அவளை நோக்கியவாறே கல்யாணப் பந்தலை நோக்கி நடந்து கொண்டிருந்தான்.

பேங்கர் சீனு பிரத்யட்ச உலகின் உண்மையான சொரூபத்தை அறிந்தவர். தன் மகனுக்காகப் பார்க்க வேண்டியவர்களைப் பார்த்து, கொடுக்க வேண்டியதைக் கொடுத்து ஓர் அரசாங்க உத்தியோகத்தில் நியமனம் பெறச் செய்துவிட்டுத்தான் சாவகாசமாக உட்கார்ந்தார். 'குந்தித் தின்றால் குன்றும் கரையும்' என்ற அனுபவ மொழிக்கு அவர் முக்கியத்துவம் கொடுத்தார். மேலும், தன் சம்பந்திக்கு எவ்விதத்திலும் தான் குறைந்தவரல்ல என்பதை நிரூபணம் செய்வதில்தான் தன் மகனுக்கும் மகளுக்கும் அந்த வீட்டில் மதிப்பிருக்கும் என்பதையும் உணர்ந்தவர்.

விதை மண்ணில் ஊன்றிக் கொண்டு இளந்துளிர்ச் செடியாகக் கிளம்பும் தருணத்திலிருந்தே, அந்த மூல வித்தை அதன் பண்புகள் சிறிதும் குறையாமல் தன்னகத்தே பிரதிபலிக்க ஆரம்பித்து விடுகிறது. சதீஷ் தன் உத்தியோகம் ஜூனியர் எஞ்சினீயர் என்றாலும் அந்தச் சிறு பதவியின் விருத்தியால் கிடைக்கக்கூடிய இலாபங்களை எண்ணிப் பார்க்கத் தவறவில்லை. அவன் பொறுப்பேற்றிருந்த பகுதியில் இருந்த சினிமா தியேட்டர்கள், தொழிற்சாலைகள், நெல் குத்தும் ஆலைகள் முதலியவற்றைப் பார்த்து, அவற்றின் முதலாளிகளுடன் நேரடித் தொடர்பு கொள்ளத் தவறவில்லை. உபயோகிக்கும் மின்சாரத்துக்குண்டான கட்டணத்தைச் செலுத்தும் போது அதிகாரிகளின் கையில் ஈரம் இருக்கும்படி செய்யவேண்டிய அவசியம்தான் என்ன என்பது பாமரத்தனமான கேள்விதான். தொழிலகங்கள் சட்டப்படி நிறுவ வேண்டிய இயந்திரங்களைவிடக் கூடுதலான இயந்திரங்கள் அமைக்கப்படுவது, உபயோகப்படுத்தப்படவேண்டிய ஒரு ஸ்டாண்டர்டுக்குக் குறைவான மின் அமைப்புக்களை உபயோகப்படுத்துவது போன்ற குறைபாடுகளைக் கண்டும் காணாமலிருக்கச் செய்து கொள்ளும் ஏற்பாடுகள்தாம் இவை என்பது விஷயமறிந்தோருக்குப் புரியும்.

அன்று காலையிலிருந்தே சதீஷ் பரபரப்புடன் இருந்தான். அவன் வேலையில் சேர்ந்து ஓராண்டு காலத்துக்குமேல் ஆகிவிட்டிருந்தது. 'புரொபேஷனரி' என்ற கால கெடுவை அவன் தாண்டிவிட்டான். அன்று மேலதிகாரி ஒருவர் மேற்பார்வைக்காக வருகிறார் என செய்தியும், மிகவும் கறார் பேர்வழியா

அவர் எவருக்கும் அஞ்சாதவர் என்ற தகவலும் அவனைச் சற்றே நிலைகுலைய வைத்தன. தவறு செய்பவர்களை அவர் விட்டு வைப்பதே கிடையாது என்றும் சொல்லிக் கொண்டார்கள்.

லைன்மேன் சார்லஸ் பவ்யமாக நின்று கொண்டிருந்தான். அவன்தான் சதீஷின் அந்தரங்கமான ஆசாமி. லைன் இன்ஸ் பெக்டர்கள் எங்கெங்கே எவ்வளவு தொகை வசூலித்தார்கள் என்ற ரகசிய மும், அதில் தன் பங்கு தனக்கு ஒழுங் காக வந்து சேர்ந்ததா என்பதை மதிப் பிடவும் சதீஷ்,சார்லஸின் துணையையே நாடினான்.

''சார்லஸ்!''

''யெஸ் ஸார்!''

''ஏன்யா, அந்த முசுடுக்கு என்ன பிடிக்கும்? வெஜிடேரியனா, இல்லே மிலிடரியா? சாப்பாட்டுக்கு ஏற்பாடு பண்ணிடு. வெஜிடேரியன்னு சொன்னா ஸ்பெஷல் அயிட்டங்களைப் பீம விலாஸ் லேருந்து வாங்கிப் போடு. மிலிடரின்னா ராமலிங்க விலாஸ்(!)லேருந்து வாங்கிப் போடு!''

''ஸார்! அவர் கேம்ப் வந்தா தனியா, தானே போய்ச் சாப்பிடறதுதான் வழக் கம். பிளாஸ்கிலே காபிகூட கொண்டு வந்திடுவார். ரொம்ப ரோதனையான கேஸ் ஸார். ஹவுஸ் கனெக்ஷன்ஸ் கேஸ் தான் எடுப்பார் முதல்லே!''

''ஐயையோ! கூப்பிடுய்யா அந்த கிளார்க்கை!''

சார்லஸ் ஆபீஸினுள் நுழைந்தான். ஹவுஸ் கனெக்ஷன் செக்ஷன் கிளார்க் கேசவனைக் கூப்பிட்டான்.

கேசவன் தலை நிமிராமலேயே கேட் டான்: ''என்னய்யா, காலங்கார்த்தால வந்ததும் வராததுமா! என்ன வேணு மாம்? வந்து ரெண்டு வருஷம் சர்வீஸ் போடலல்லே, அதுக்குள்ளே பெரிய பந்தா!''

''எனக்குத் தெரியல்லே ஸார்... கூப்பிடச் சொன்னாரு.''

மிகுந்த அலுப்புடன் அவன் எழுந் தான். மாதக் கடைசி. ஸைட் இன்கம் காலணா வரவில்லை. ''இன்ஸ்பெக்ஷன் இல்லையென்று எவன் அழுதான்?''— சொல்லிக்கொண்டே அவன் ஜூனியர் எஞ்சினீயரின் தடுப்பறைக்குள் நுழைந் தான்.

''குட்மார்னிங் ஸார்!''

''மிஸ்டர் கேசவன்! ஹவுஸ் கனெக் ஷன் அப்ளிகேஷன்ஸ் எத்தனை இருக்கு?''

''ம்......வந்து ஸார் எக்ஸ்டென்ஷன் பகுதிதான் நிறைய இருக்கும்! ''

''நிறையன்னா எத்தனை இருக்கும்?''

''பார்த்துச் சொல்றேன் ஸார்.'' —கேசவன் புறப்பட்டான்.

தொழிற்சாலைகள் நிறுவப்பெறும் ஒவ்வொரு டவுனிலும் வயற்காடுகள் வீடுகளாக மாறி, எக்ஸ்டென்ஷன் பகுதி களாகப் பரிணமிப்பது நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்தாலும் விவசாயம் நசித்துப் போக வகை செய்கிறது. ஆனால் சில துறைகளுக்கு அதிக வருவாய் கிடைக்க ஏதுவாகிறது.

அந்தச் சிறிய டவுன் இப்போது பெரிய ஊராக மாறிக் கொண்டிருந்தது. கடந்த ஐந்தாண்டு காலத்திற்குள் ஆயிரத்துக்கும் மேற்பட்ட வீடுகள் வந்து விட்டன. மேலும், பல புதிய வீடுகள். வீட்டிற்கு கனெக்ஷன் கொடுப் பதில் பல முறைகள் அனுஷ்டிக்கப்பட் டன. எந்த அரசாங்கம் வந்தாலும் சில இலாகாக்களை அவற்றின் போக்கினின் றும் மரபினின்றும் மாற்ற முடியாது. மனித இயல்பு அத்தகையது போலும்!

கேசவன் எக்ஸ்டென்ஷன் ரிஜிஸ்தர் களைப் புரட்டினான். குத்து மதிப்பாக ஒரு பட்டியல் தயாரித்தான்.

| | |
|---|---|
| விண்ணப்பங்கள்: | 645 |
| பணம் செலுத்தியவர்கள்: | 585 |
| இணைப்புக் கொடுக்கப்பட்டவை: | 135 |
| கொடுக்கப்பட வேண்டியவை: | 450 |

தன் முன்னாலிருந்த ரிஜிஸ்தரையும் புள்ளி விவரங்களையும் பார்த்த சதீஷுக்கு வயிற்றைக் கலக்கியது. பணம் செலுத் தியவர்கள் இரண்டு மூன்று மாதங்க ளாவது காத்திருக்க வேண்டியிருந்தது. புத்திசாலிகளான ஒரு சிலருக்கு மட்டும் இரண்டு வாரங்களில் இணைப்புக் கொடுக் கப்பட்டிருந்தது.

''ஏன்யா, இவ்வளவு பேருக்கா இன்னும் கனெக்ஷன் தரல்லே?''

''மெடீரியல்ஸ் இல்லே ஸார்.''

''மெடீரியல்ஸ் கிளார்க்கைக் கூப்பிடு! சரியான இதுய்யா நீங்கள்லாம். பணம் கட்டினவங்க சும்மா இருப்பாங் களாய்யா? எவனோ பெட்டிஷன் எழுதிப்



''நாங்க ஒ. டெ. பா. சங்கத்திலேருந்து வந்திருக்கோம்...!''

''அதென்ன..?''

''ஒசி டெலிவிஷன் பார்ப்பவர்கள் சங்கத்திலிருந்து, ஒசியில பார்ப்பவங்களை நல்ல முறையில் நடத்துறீங்களான்னு சர்ப்ரைஸா செக் பண்ணுவோம்!''

—எம். பூங்கோதை

போட்டிருக்கான். இல்லேன்னு ஏன் இந்த திடீர் இன்ஸ்பெக்ஷன்?''

மெடீரியல்ஸ் சப்ளை செய்யும் குமாஸ்தா அபிபுல்லா வந்தார். வயது ஐம்பதை நெருங்கிக் கொண்டிருந்தது. தீவிரமான மதவாதி. வெள்ளிக்கிழமைகளில் மசூதிக்குத் தொழுகைக்குச் செல்லாமல் இருக்கவே மாட்டார்.

''ஸார், கூப்பிட்டீங்களா?''

''ஆமாம் பாய்! எத்தனை கனெக்ஷனுக்கு மெடீரியல்ஸ் சப்ளை பண்ணி இருக்கீங்க? ஸ்டாக் இருக்கிற அயிட்டங்கள் எத்தனை? என்னென்ன அயிட்டங்கள் நாம இண்டெண்ட் போட்டும் நமக்கு சப்ளை இன்னும் வரல்லே? இதுக்கெல்லாம் சீக்கிரமா விவரம் வேணும்.''

''சரி ஸார்!''

சதீஷ் எழுந்து அறையினின்றும் வெளியே வந்தான். சிகரெட் ஒன்றை எடுத்துப் பற்றவைத்துக் கொண்டான்.

லைன் இன்ஸ்பெக்டர் அமிர்தராஜ் தன் வெள்ளைப் பற்கள் மின்னும்படி சிரித்துக் கொண்டே வந்தான்.

''குட்மார்னிங் ஸார்!''

''ம்......அமிர்தம்! எங்கேயும் போயிடாதீங்க!''

''கேள்விப்பட்டேன் ஸார் ஸர்ப்ரைஸ் இன்ஸ்பெக்ஷன்னு. ஜீப், வேன் லாக் புக்லேதான் முதல்லே கை வைப்பாரு. சரியான சிடுமூஞ்சி ஸார். ரிடையராகறதுக்கு இன்னும் ஒண்ணரை வருஷம்தானிருக்கு. ரொம்ப ஸ்டிரிக்ட். இல்லேன்னு இவருக்கான சர்வீசுக்கு டெபுடி சீஃப் எஞ்சினீயரா வந்திருக்கணும். எக்ஸிகியூடிவ் எஞ்சினீயரா பிரமோஷன் மூணு வருஷத்துக்கு முன்னேதான் கிடைச்சது. மேலேயும் நல்ல பெயர் கிடையாது. நீக்கு போக்குத் தெரியாத ஆசாமி!''

''டிரைவர்களை உஷார் பண்ணுப்பா அமிர்தம்.''

சொல்லிவிட்டானே தவிர உள்ளூர உதைப்பாக இருந்தது. ஜீப்பை தினமும் தன் வீட்டிற்கும் ஆபீஸுக்குமிடையே இருந்த ஆறு மைல் தூரத்துக்கு ஓட்டியதை எந்தக் கணக்கில் எழுதி வைத்திருக்கிறானோ டிரைவர். சினிமா பார்க்க, கடை கண்ணிக்குப் போக, புதிய மனைவியின் ஊர்கள் பார்க்கும் ஆசையைப் பூர்த்தி செய்யவென்று...ம்... இதெல்லாம் அனைவரும் செய்வதுதான். இல்லாவிட்டால் பி. ஈ. படித்து எஞ்சினீயராக இருப்பதில் அர்த்தமென்ன? அந்தக் கிழம்!......

ஜீப் ஒன்று வந்து ஆபீஸ்முன் நின்றது.

ஜீப்பினின்றும் எக்ஸிகியூடிவ் எஞ்சினீயர் பஞ்சாபகேசன் இறங்கினார். ஒல்லியான உருவம், அகன்ற நெற்றி. தீட்சண்யமான பார்வை. தீர்க்கமான நாசி, நுனியில் சற்றே வளைந்திருந்தது. சுமாரான உயரம்.

எந்தவிதமான ஆடம்பரமும் இல்லை.

நேராக உள்ளே நுழைந்து ஆபீஸை நோக்கி வந்து கொண்டிருந்தார்.

சதீஷ் சிகரெட்டைக் கீழே போட்டுக் காலால் மிதித்தான்.

''மிஸ்டர் சதீஷ்ங்கறது......''

''நான்தான் ஸார். குட்மார்னிங் ஸார்.''

''குட்மார்னிங்! ஐ'ம் பஞ்சாபகேசன். வெல் மிஸ்டர் சதீஷ், உங்க ஆபீஸை இன்ஸ்பெக்ட் பண்ணலாம்னு வந்திருக்கேன்.''

(தொடரும்)

# வேர்கள்

கிருஷ்ணமணி

## 16

பஞ்சாபகேசனின் கேம்ப் கிளார்க், கையில் ஒரு ஷார்ட் ஹாண்ட் நோட்டுப் புத்தகத்துடன் வந்து கொண்டிருந்தார்.

''ரிக்கார்ட்ஸை யெல்லாம் பார்க்கலாமா ஸார்?''—சதீஷ் முந்திக் கொண்டான்.

''ம்...'' பஞ்சாபகேசன் அதைக் காதில் போட்டுக் கொண்டதாகவே தெரியவில்லை.

அவர் நேராக மெட்டீரியல்ஸ் வைக்கப்பட்டிருக்கும் ஷெட்டை நோக்கிப் போனார். அதன் கதவு பூட்டப்பட்டிருந்தது.

''இதைக் கொஞ்சம் திறக்கச் சொல்றீங்களா?''

சிறிது நேரத்தில் ஷெட் திறக்கப்பட்டது.

மீட்டர்கள், கேபிள்கள், நீண்ட கல்வனைஸ்ட் பைப்புகள், சுவிட்சுகள், வாழைத்தண்டு விளக்குகள், பல்புகள் என்று ரகம் வாரியாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. கண்ணாலேயே நோட்டம் விட்டார். வெளியே வந்தார்.

சற்றுத் தொலைவில் நீண்ட சிமெண்ட் தூண்கள் பெரிய தண்ணீர்த் தொட்டியொன்றில் ஊறவைக்கப்பட்டிருந்தன. சில ஆட்கள் கான்க்ரீட் கலவை போட்டு இரும்புக் கம்பிகள் ஒருசேரப் பிணைத்துக் கட்டப்பட்டிருந்த புதிய தூண்களைச் செய்து கொண்டிருந்தார்கள்.

''காலியான சிமெண்ட் கோணிகளையெல்லாம் எங்கே வைக்கறீங்க? லெட் மீ ஸீ யுவர் சிமெண்ட் அக்கவுண்ட்!'' என்றார் பஞ்சாபகேசன்.

''ஸார், இதோ கொண்டு வரச் சொல்றேன் ஸார். சார்லஸ்! மூணு கப் காபி வாங்கிண்டு வா!''

பஞ்சாபகேசன், பர்ஸை எடுக்கப் போன சதீஷைக் கையமர்த்தினார். தம் ஜேபியிலிருந்து இரண்டு ரூபாய் நோட் ஒன்றை எடுத்துக் கொடுத்தார்.

''சார்லஸ்! நல்ல காபியா வாங்கி வா. நாலு கப். நீயும் ஒரு கப் குடிச்சிடு.'' — பஞ்சாபகேசன் சொன்னார்.

ஜீப் டிரைவர் வண்டியினின்றும் கீழிறங்கி வந்தான். போர்ட்டபிள் டைப்ரைட்டர் மெஷின் ஒன்றை எடுத்து வந்து கொண்டிருந்தான்.

''சிமெண்ட் கணக்கு மிஸ்டர் சதீஷ்!''

இதைப் பற்றி எவரும் தன்னை எச்சரிக்கவில்லையே இதுவரையிலும்... ''இதோ கொண்டு வரேன் ஸார். ஆபீஸ் உள்ளே வந்து...''

''நோ ...... ஸ்டாஃபை டிஸ்டர்ப் பண்ணக்கூடாது. நீங்க அந்த ரெஜிஸ்டரை மட்டும் கொண்டு வாங்க போதும்.''

''ஸார்! அந்த கிளார்க் பத்து நாளா லீவு.''

''பரவாயில்லே. போன மாசம் கடைசி தேதிவரைக்கும் ரெஸீட் அண்ட் டிஸ்டிரிபியூஷன் கணக்கு இருந்தா போதும் இன்னிக்குத் தேதி இருபத்தஞ்சு. இந்த இருபத்தஞ்சு நாள் கணக்கும் எழுதாம இருந்தாலும் பரவாயில்லே......''

சதீஷுக்கு வெலவெலத்தது. ஆசாமி பொல்லாதவர். சரிக்கட்ட முடியுமா என்று பார்க்கலாம்.

''ஸார்! கொஞ்சம் அந்தப் பக்கமா போயிட்டு......''

''எங்கேயும் வேணும். இங்கே நல்ல நிழல் இருக்கு.''

சதீஷ் லைன் இன்ஸ்பெக்டர் அமிர்தராஜைப் பார்த்துச் சொன்னான்: ''சிமெண்ட் ரெஸீட் அண்ட் டிஸ்டிரிபியூஷன் புஸ்தகம் கொண்டு வாங்க!''

''கணக்கெல்லாம் கரெக்டாத் தானிருக்கும் ஸார். வாரத்திலே ஒரு நாள் ஸ்டாக் எடுக்கறுங்க. வொர்க்கர்ஸ் நல்லவங்க!''

''யார் இல்லேன்னு? எனக்கு அரசாங்கத்திலே கொடுக்கிற சம்பளத்துக்கு நான் ஏதாவது செக் பண்ண வேண்டாமாய்யா?''

''ஸார், மத்தியானம்......''

''இப்போ நடக்க வேண்டியதைப் பார்ப்போம்.''

'சரியான கிழம்...' சதீஷுக்குப் புத்தி ஸ்தம்பித்து விட்டது போலிருந்தது.

''கான்க்ரீட் தூண்களின் அமைப்புக்காகப் போடப்படும்கலவையைப் பார்க்கலாமா?''-சொல்லிக் கொண்டே அந்தப் பக்கம் போனார் பஞ்சாபகேசன்.

''என்ன பிரபோர்ஷன்பா போடறீங்க?''

''ஒன்னுக்கு நாலரைங்க......''

''டேய், நீ சும்மா இருடா. ஒன்னுக்கு மூனுங்க......''

அவர் மெல்லச் சிரித்தார்.

கணக்கு நோட்டு வந்தது.

ஒரு குறிப்பிட்ட வாரத்தை ஒவ்வொரு தேதியாகப் பார்த்தார். கூட்டினார். வகுத்தார். பெருக்கினார். புருவங்களைச் சுளித்தார்.

சார்லஸ் காபி கொண்டு வந்தான். எல்லோருக்கும் தந்தான்.

காபியை வாங்கிக் குடித்துவிட்டுப் பஞ்சாபகேசன் சொன்னார்:

''மிஸ்டர் சதீஷ்! ஐ'ம் ஸாரி. யூ ஆர் யங்...... இன்னும் எத்தனையோ சர்வீஸ் இருக்கு......''



''ஸார்...... வந்து......''

அவனைத் தனியாகக் கூப்பிட்டார்.

''நீங்க செஞ்சிருக்கிறது நல்லாயிருக்கா? நூத்தியேழு தூண்களுக்கு சிமெண்ட் கொடுத்திருக்கு. ஆனா நாற்பத்தேழு தூண்தான் செஞ்சிருக்காங்க. மேலும் அறுபது தூண்கள் செஞ்ச மாதிரி கணக்குக் காட்டியிருக்கு. அது எங்கே? அந்த அறுபது தூண்கள் இருந்தா பதினைஞ்சு தெருக்களுக்கு எக்ஸ்டென்ஷன் பகுதியிலே மின் இணைப்புக் கிடைச்சிருக்கும். ஆனா இன்னும் கிடைக்கல்லே. அவங்க பணம் கட்டி மாசம் ஆறாகப் போகிறது. புவர் பீபிள்.''

''ஸார், நடந்தது என்னன்னா...''

''இதோ இருக்கு, ஜாயின்ட் பெடிஷன். டிவிஷனல் எஞ்ஜினீயர், சப்-கலெக்டர் இவங்களுக்கு காப்பி போட்டிருக்காங்க. ஒரு லேடி சப்-கலெக்டர் புதிசா வந்திருக்காங்க. அவங்க போன் பண்ணி என்கொயரி நடத்தச் சொல்லியிருக்காங்க. டிவிஷனல் எஞ்ஜினீயர் எவ்வளவோ சொல்லிப் பார்த்தார். நடக்கல்லே. சிமெண்ட் மூட்டைகள் கள்ள மார்க்கெட்லே விற்கப்பட்டிருக்குன்னு எழுதியிருக்காங்க. உங்களைக் காப்பாத்திக்கக் கணக்கும் சரியா இல்லே.''

''ஸ்டெனோகிராபர்...!''— பஞ்சாபகேசன் கூப்பிட்டார்.

டிவிஷனல் எஞ்ஜினீயர் வீட்டிற்குப் பத்து மூட்டை சிமெண்ட் அனுப்பிய தைச் சொல்ல





''காசி யாத்திரைக்கு மாப்பிள்ளைதான் பரதேசி கோலத்துலே போரூர், சரி! அவருக்கு முன்னாலே நிஜமாகவே ஒரு பரதேசி போரூரே, அவர் யார் ?''

''கல்யாணப் பெண்ணோட அப்பா!''

—வெ. சீதாராமன்



முடியாது. ஒரு வேளை டி.ஈ. தன்னைக் காப்பாற்ற முன் வரலாம். அவரைப் போய்ப் பார்க்க வேண்டும்.

பஞ்சாபகேசன் ஸ்டெனோகிராபரைக் கூப்பிட்டு எழுதிக் கொள்ளச் சொன்னார். அவர் எழுதிக் கொண்டு அதைச் சிறிது நேரத்தில் டைப் செய்து கொண்டு வந்து கொடுத்தார். படித்துப் பார்த்து பஞ்சாபகேசன் கையெழுத்திட்டுக் கொடுத்தார்.

சதீஷுக்கு மெமோவைக் கையில் வாங்கிக் கொண்டதும் தலையைச் சுற்றியது.

''மிஸ்டர் சதீஷ்! சிமெண்ட் ஷெட் எங்கே இருக்கு?''

''அதுதான் சார்!... எலெக்டிரிக் மெட்டீரியல்ஸ் ஷெட் பக்கத்திலேயே தான்.''

''வெல். உங்க எக்ஸ்பிளனேஷனை அனுப்புங்க.''—பஞ்சாபகேசன் வந்த வேகத்தில் கிளம்பிப் போய் விட்டார்.

தனக்கும் சார்லஸுக்கும் மட்டுமே தெரிந்த இந்த விஷயம் எப்படி வெளியே போயிற்று? சிமெண்ட் மூட்டை ஒன்றுக்குப் பத்து ரூபாய் வீதம் தனக்கு ஐந்நூறு ரூபாய் கிடைத்ததை, அதைத் தன் மனைவிக்கு என்று தான் தனியாக எடுத்து வைத்து...... சிந்தனை யோட்டம் தடைப்பட்டது.

''ஸார்! மெமோவிலே என்ன கேட்டிருக்கார்?''

மெமோவைப் படித்தான்: 'திண்டிவனம் சப்-டிவிஷன் நெ:...எலெக்டிரிகல் டெப்போ............'

குறைந்த இருப்புக்குத் தக்க காரணங்கள் காட்ட வேண்டுமென்றும், இல்லையேல் அவனைத் தாற்காலிகமாக வேலை நீக்கம் ஏன் செய்யக்கூடாது என்றும் கேட்கப்பட்டிருந்தது. முழுமையாக இரண்டு ஆண்டுகள்கூட ஆகவில்லை. அதற்குள்ளாக சஸ்பென்ஷன் என்றால்..!

சிகரெட் ஒன்றை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டான். அப்பாவிடம் சென்றுதான் யோசனை கேட்க வேண்டும். அவருக்கு எந்தவிதமான சிக்கலாக இருந்தாலும் அதனின்றும் மீள வழி தெரியும். டி. ஈ-யைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்லலாம் என்றால் அவர் சென்னை சென்றிருக்கிறார். அவன் மனம் சலிப்புற்றது. மாறாகத் தான் செய்த காரியம் மிகத் தவறானது என்பது பற்றி அவன் நினைக்க முற்படவேயில்லை.

சப்-கலெக்டர் பங்களா வசதியாகத் தானிருந்தது. ஸெவன்த் ஹெவன் போன்று அளவில் பெரியதாக இல்லா விட்டாலும் நவீன வசதிகளுக்குக் குறைவில்லை.

சியாமளியுடன் செல்லையா தம்பதியினரும் வந்திருந்தனர். சமையலுக்கு ஆள் அமர்த்தியிருந்தாள் சியாமளி. அவளுக்கே நன்றாகக் கார் ஓட்டத் தெரியுமென்றாலும் டிரைவர் வைத்திருந்தாள். பங்களா பியூன் என்று அரசாங்க சம்பளத்தில் வேறு ஒருவன் வீட்டோடு இருந்தான்.

அவளுக்கு இந்தத் திடீர் மாற்றம் முதலில் ஒரு மாதிரியாகத்தான் இருந்தது. இருப்பினும், அவளுடைய மனத்துக்கினியவர் அண்மையில் இருக்கிறார் என்ற ஓர் எண்ணம் அவளை மகிழ்ச்சியடையச் செய்தது. வெங்கடேசன், வக்கீல், மங்களபுரம். ஆபீஸ் அட்... அவனுடைய விஸிட்டிங்

கார்டை ஒரு முறை எடுத்துப் பார்த்தாள்.

அன்று ஞாயிற்றுக்கிழமை. அவன் வீட்டில்தான் இருப்பான். உடனே போய் அவனைப் பார்க்க வேண்டும் போலிருந்தது.

"செல்லையா......!"

"ம்...வரேன்மா!..."

செல்லையா வந்தான்.

"செல்லையா! நாம இப்போ மங்களபுரம் போறோம். மெட்ராஸ்ல நம்ம வீட்டுக்கு வந்திருந்தாரே ஒரு ஐயா!"

"ஆமாங்க. வக்கீல் படிப்புக்கு, நல்ல உசரமா......"

"ஆங்! அவர் இங்கேதான் மூணு மைல் தூரத்திலே கிராமத்திலே இருக்காரு. புறப்படலாமா?"

"போலாங்க. அம்மாவைப் பார்க்கணும்னு தாசில்தார் ஐயா ஒருத்தரு காத்திருக்காரு."

ரெவின்யூ இலாகாவிலே ஓய்வு என்பதே கிடையாது. சப்-கலெக்டர் என்றால் சில தினங்களில் தூங்குவதற்குக்கூட நேரம் கிடைக்காது. போலீஸ் அதிகாரிகள், விவசாய இலாகா அதிகாரிகள், ரெவின்யூ அதிகாரிகள் என்று எவராவது வந்த வண்ணமிருப்பார்கள். மெஜிஸ்டீரியல் அதிகாரங்களும் இருந்ததால் போலீஸ் நடமாட்டம் சற்று அதிகமாகவே இருக்கும்.

அவள் குளித்துவிட்டு வெளிர் நீல வண்ணத்தில் ஒரு புடவையும் அதற்கேற்ற ப்ளவுசும் அணிந்திருந்தாள். மனம் இன்பமான எண்ணங்களில் நீந்திக்கொண்டிருந்தது. தாசில்தார் வந்திருக்கிறாராம். என்னவென்று கேட்க வேண்டும். ஹாலுக்கு வந்தாள்.

"குட்மார்னிங் மேடம்!"

"குட்மார்னிங்!" அவரை உட்காரும்படி சைகை செய்தாள். அவர் நின்றுகொண்டேயிருந்தார்.

"ப்ளீஸ் பீ சீட்டட்."

உட்கார்ந்தார்.

"என்ன சமாசாரம்?"

"லேண்ட் அக்விசிஷன்லே ஒரு சின்ன தகராறு. பனையப்பட்டி கிராமத்திலே ஒரு சின்ன ரோடு வர்ற இடத்திலே ஒரு ஊர் மாரியம்மன் கோவில் இருக்கு.

ஜனங்க கோவிலே ஒண்ணும் செய்யக் கூடாதுங்கறுங்க. அந்த இடத்தை விட்டுட்டுப் பத்தடி தள்ளிப் போடுங்கன்னு சொல்றுங்க. அப்படிச் செய்தா கர்வ் வருது. அந்த இடத்திலே கர்வ் வந்தா விபத்துகள் ஏற்படலாம்னு ஹைவேஸ் டிபார்ட்மெண்ட்லே சொல்றுங்க. ரெண்டு பக்கமும் பெரிய மரங்கள் வேற இருக்குதுங்க!''

''ஒரு சின்ன வளைவினலே விபத்து ஏற்படும்னு சொன்ன அது சரியான்னு பார்க்கணும்.''

''சின்ன வளைவு இல்லே மேடம். ஹேர் பின் கர்வ் வருது!''

''ம்... ஜனங்ககிட்டே விஷயத்தை நாசூக்கா எடுத்துச் சொல்லி, கோவிலைக் கொஞ்சம் தள்ளி..... ஆமா, அந்தக் கோவில் கட்டடமா இருக்கா? இல்லே.....!''

''கட்டடம் ஒண்ணுமில்லீங்க. குறி சொல்ற ஒரு பூசாரி குறி மேடை ஒண்ணு வச்சிருக்காரு. கூரைதான் போட்டிருக்காரு.''

''ஐ ஸீ. அது அவர் சொந்த நிலமா?''

''நத்தம் புறம்போக்கு!''

''பிராப்ளமே இல்லையே. இத பாருங்க, இந்த மாதிரி விஷயத்திலே நாமதான் பொறுமையா ஜனங்களுக்கு விஷயங்களை எடுத்துச் சொல்லணும். எந்தக் கிராமம்?''

''ராமாபுரம் பனையப்பட்டி ரெவின்யூ நேம். மங்களபுரத்துக்கு முன்னடி கிராமம். ராமாபுரத்துக்கு ரோடு இல்லேன்னு பெட்டிஷன் போட்டாங்க. அதனுல எம்.எல்.ஏ.... பொலிடிகல் பிரஷர் கொடுத்து மெயின் ரோடை அத்தோட இணைச்சு நாலு பர்லாங்குக்கு ரோடு வரும்படியா ஐடியா கொடுத்திருக்காரு. மெயின் ரோடு மேல போற பஸ்ஸெல்லாம் ராமாபுரத்தை டச் பண்ணணும்னு இந்த ஏற்பாடு.''

''ஐ ஸீ...வாங்க. நானும் இப்போ அந்த வழியாத்தான் போறேன். ஸ்பாட்டைப் பார்க்கலாம்.''

தாசில்தார் எழுந்து கொண்டார்.

டிரைவர் சல்யூட் அடித்தான்.

''டிரைவர்! நீங்க வீட்டுக்குப் போங்க. காரை நானே எடுத்துக்கிட்டுப் போறேன்!''



''என்ன சார் அது.. கையிலே அவ்வளவு பெரிய பொட்டலம் எடுத்துகிட்டு போறீங்க?.. பார்சலா..?''

''இல்லே.. உங்க ஹோட்டல் சாப்பாட்டிலே கிடந்த கல்!''

''யெஸ் மேடம்!''

செல்லையா காரின் கதவைத் திறக்க வந்தான்.

''செல்லையா! பின் சீட்லே உட்காரச் சொல்லு தாசில்தாரை. நீ என் பக்கத்திலே உட்காரு.''

''போங்கம்மா! நானும் பின்னலேயே உக்காந்துக்கிடறேன்.''

''யூ ஆர் மை காட் ஃபாதர்.''—சிரித்துக் கொண்டே சொன்னுள்.

''இங்கிலீசு புரியல்லே தாயே! மனசுக்கு எம்மாம் சந்தோசமா இருக்குது! எங்க குளந்தை இன்னிக்கு கலெகட்ரு!''—மெல்லிய குரலில் சொன்னுன்.

செல்லையாவும் தாசில்தாரும் பின் சீட்டில் உட்கார்ந்தனர்.

பாக்கியம் விடுவிடென்று காம்பவுண்டு வரை சென்று நோட்டம் விட்டு வந்தாள். அவள் இதை வழக்கமாக வைத்திருந்தாள்.

''பொறப்படும்மா!''—அவள் குரலில் பாசம் தொனித்தது.

கார் புறப்பட்டது. காம்பவுண்டு சுவர் அருகே நின்று கொண்டிருந்த போலீஸ் ஆர்டர்லி ஸல்யூட் கொடுத்தான்.

(தொடரும்)

# வேர்கள்

## கிருஷ்ணமணி

## 20

அந்த ஆங்கிலப் பத்திரிகை ஊர்ஜித மான செய்திகளைத்தான் வெளியிடுவது வழக்கம். இரண்டு நாள் கழித்தே அதில் செய்தி வந்தது.

அன்று காலைப் பத்திரிகையைப் புரட் டிய வெங்கடேசன் புருவங்களை உயர்த் தினன். 'ப்ரேவோ' என்று அவன் வாய் முணுமுணுத்தது. சியாமளியின் தைரிய மான செயல் எத்தகைய எதிர்விளைவு களை உண்டாக்குமென்று அவன் நினைத் துப் பார்த்தான். நேர்மையுடன் செயல் படும் எந்தவொரு நிர்வாக அதிகாரியும் சில அரசியல்வாதிகளின் அதிருப்திக்கு ஆளாக வேண்டி வரும் என்பதை அவன் அறிவான்.

சியாமளியைப் பார்க்க வேண்டும், பாராட்டவேண்டும் என்று தோன்றியது. இரண்டு நாட்களாக அவளைப் பார்க்கா தது என்னவோ போலிருந்தது. சீக்கிர மாகப் புறப்பட அவன் தீர்மானித்தான்.

உடையணிந்து கொண்டு, தன் ஜேம்ஸ் பாண்ட் பெட்டி சகிதம் கீழிறங்கி வந்தான். சுந்தரிப் பாட்டி அவனுக்காகக் காத்திருந்தவள் போல பேசினள்: ''ஏண்டா அம்பி! இன்னிக்கும் ஒண்ணும் சாப்பிடப் போறதில்லையா?''

''ஆமாம் பாட்டி. சியாமளியோட ப்ரெக்ஃபாஸ்ட்.''

''என்னடாது! நீங்க ரெண்டு பேரும் பழகறதைப் பார்த்தால் அவதான் இந்த வீட்டு மாட்டுப்பொண்ணு வரப் போறுளோங்கற சந்தேகம் வர்றதுடா?''

''ஏன் பாட்டி, உனக்கு ஆட்சேபணை இருக்கா?''

''என் ஆட்சேபணையைக் கேக்கற வனைப் பாரு. அந்தப் பொண்ணு இங்கே வந்திருந்த அன்னிக்கே, வைச்ச கண் வாங்காம உன்னையேதான் பார்த்திண் டிருந்தா. நல்ல படிப்பு இருக்கு. குணம் இருக்கு. மனுஷாளும் தெரிஞ்சவாளா போயிட்டது. எல்லாம் நல்லபடியா நடந்தேறிஞ சரிதான்.''

''அவ அப்பா, அம்மா சம்மதம் தரணும்.''

''முத்துசாமியோட அப்பா உங்க தாத்தா உயிரோடு இருக்கறச்சே ரெண்டு, மூணு தடவை வந்திருக்கார். இன்னிக்குக் கால வித்தியாசத்திலே நம்ம நிலைமை கொஞ்சம் சரியாயில்லே. நாளைக்கே உனக்கு பிராக்டிஸ் பிக்கப் ஆகாதா, என்ன? அவாளுக்கு உனக்குப் பொண் கொடுக்கிறதிலே வேற எந்தக் காரணத்துக்கும் தயக்கமேற்பட வழி யில்லே. சியாமளியோ சுயம்வரம் நடத் திண்டிருக்கா. உன் பக்கம் கேஸ் ஸ்டிராங் காத்தாண்டா இருக்கு அம்பி!''— பாட்டி தன் பொக்கை தெரிய சிரித்தாள்.

''நான் வரேன் பாட்டி!''

''மரகதம்!..'' — பாட்டி கூப்பிட் டாள்.

மரகதம்மாள் கூடத்துக்கு வந்தாள்.

''உன் பிள்ளையாண்டானை சாப்பிடச் சொல்லமாட்டியோ. அவன் புறப்பட் டுட்டானே!''—குறும்பாகக் கேட்டாள் பாட்டி.

மரகதம் சிரித்தாள்: ''அவன் திண்டி வனத்திலே அந்தப் பொண் வீட்டிலே

சாப்பிடப் போறதா நேத்தே சொல்லிட்டான்.''

''ஓஹோ! நீயும் உடந்தையா பிள்ளேக்கு. நான்தான் அசமந்தமாட்டமா விஷயம் தெரியாம இருக்கேன் போலிருக்கு, பேஷ்!'' என்ருள் பாட்டி.

''பாட்டி! என்கிட்டே ஒளிவு மறைவு கிடையாது. அம்மாவுக்கும் உனக்கும் ஆட்சேபணே இருக்கக்கூடா துன்னுட்டுத்தான் அவளே நம்ம வீட்டுக்கு இன்வைட் பண்ணினேன்.''

''அன்னிக்கு இலே போட்டுச் சாதம் போட்டப்போவே என் மனசில தோணித்து, நம்ம அம்பிக்கும் அந்தப் பொண்ணுக்கும் ஜோடிப் பொருத்தம் சரியா இருக்குன்னு!'' —மரகதம் சொன்ஞள்.



''பேஷ்! வேற என்னடா! உன்னேப் பெத்தவ பச்சைக் கொடி காட்டிட்டா. முத்துசாமி வந்து வரன் பேசிஞ, முடிஞ்ச மாதிரிதான். மரகதம், அவ படிச்ச பொண்ணு. காரியங்களேயெல்லாம் நீதான் செய்யும்படியா இருக்கும்.''

''இல்லேம்மா! அன்னிக்கே சாப்பிட்ட இலேயை அவதான் எடுத்தா. நான் சொல்லியும் கேட்கல்லே.''

''ஓஹோ! என்ன இருந்தாலும் நீ அம்பியோட அம்மாவாச்சே! யார் கண்டா? கல்யாணத்துக்கப்புறமா எல்லாத்துக்கும் 'ஆள் அமர்த்திடுவான் அம்பி. சமையல்கட்டிலே சப்-கலெக்டர் உத்தியோகம் பார்க்கிறவ வளேய வர முடியுமான்னு கேக்கறேன்.''

''பாட்டி! உனக்குப் பொழுது போகல்லே போலிருக்கு. சாயந்திரமா வந்து சாவகாசமா உனக்குப் பதில் சொல்றேன்.''

''டேய் அம்பி! என்னதான் நீங்க ரெண்டு பேரும் ஒருத்தரையொருத்தர் நேசிச்சாலும் எல்லாம் கல்யாணம் ஆகிற வரையிலும் ஒரு எல்லேக்குள்ளேதாண்டா இருக்கணும். ரெண்டு பேரும் சங்கல்பம் பண்ணிக்கணும். பஞ்சும் நெருப்பும் பக்கத்திலே இருந்தா பத்திண்டெரிய எத்தனே நேரமாகும்? சோஷலா பழகறது, அது இதுன்னு. ஏன்ஞ நீயும் ஆண்பிள்ளே தானே? புருஷாளுக்கே

இருக்கிற அவசரம் உனக்கும் இருக்காதுன்னு என்ன நிச்சயம்? ஜாக்கிரதையா நடந்துக்கணும்டா. என்னடா இது, பாட்டி தொண தொணக்கிருளேன்னு நினேச்சுக் காதே. அந்தப் பொண்ணுக்கு.. வேண்டாம்டா, நான் மேல எதுவும் சொல்லல்லே. நீ புரிஞ் சிண்டிருப்பே, போயிட்டு வா'' என்ருள்.

வெங்கடேசனின் சிந்தனைப் பொட்டில் சுந்தரிப் பாட்டியின் சொற்கள் படீரென்று பட்டுத் தெறித்தது போலிருந்தது. தான் ஏற்கெனவே அவளிடம் எல்லே மீறி நடந்து கொண்டு விட்டதைப் போல தோன் றியது. தன் பேரன் என்பத ஞல் மட்டுமே பாட்டி தன்னே நம்பத் தயாரா யில்லே. மனிதர்களின் பலவீனம் இயற்கையானது தான். அனுபவ சாத்திய மாகப் பாட்டி சொல்லி யிருக்கிருள். தான் இனி சியாமளியிடம் ஓர் எல்லேக் குட்பட்டே பழக வேண்டும்.

அவன் சியாமளியின் பங்களாவை அடைந்தபோது அவள் கார் புலப்பட வில்லே. ஒருவேளே அவள் சிதம்பரத்தி னின்றும் திரும்பவில்லேயோ என்று தோன்றியது. ஸ்கூட்டரை நிறுத்திவிட்டு




''50 பர்செண்ட் ரிடக்ஷன் ஸேல்னு போட்டிருந்தபோது எங்க துணிக் கடை தீப் பிடிச்சு எரிஞ்சு போச்சு.. அதனுலே நஷ்டம் கம்மிதான்..!''



உள்ளே போனவனைச் செல்லையா எதிர்கொண்டு வரவேற்ருன்:

''அம்மாவுக்கு போன் வந்ததுங்க. உடனே போயிட்டாங்க. நீங்க வந்தா டிபன் சாப்பிட்டுட்டுப் போகச் சொன்னுங்க. இந்தக் கடுதாசியைக் கொடுக்கச் சொன்னுங்க!''—சொல்லிக் கொண்டே ஒரு துண்டுக் காகிதத்தைக் கொடுத்தான். ஆங்கிலத்தில் அவசரமாக ஒரு குறிப்பு எழுதியிருந்தாள்:

டார்லிங்,

மன்னிக்கவும். வேலையின் அவசரம். வெளியே போக வேண்டிய நிர்ப்பந்தம். டிபன் கட்டாயம் சாப்பிட்டுவிட்டுப் போகவும். மாலையில் சந்திப்போம்.

அன்புடன்,
சியாமளி.

அவனுக்கு ஏமாற்றமாகப் போய் விட்டது. தங்களுடைய வாழ்க்கையின் எதிர்காலம் எப்படியிருக்கும் என்று மனம் சிந்தித்தது.

அன்று கோர்ட்டுக்குப் போன பிறகு தான் அவனுக்கு விஷயம் தெரிந்தது. பொதுவாக, வழக்கறிஞர்கள் தம் தொழிலுக்கு அடுத்தபடியாக முக்கியத்துவம் தருவது அரசியலுக்குத்தான். இயற்கையாகவே பலரிடம் இந்த குணத்தைப் பார்த்திருக்கிருன். சுதந்திரப் போராட்ட காலத்திலுங்கூடப் பெரும்பான்மையான அரசியல்வாதிகள் சட்டத் துறையிலிருந்தே வந்தவர்கள் என்பது நினைவிற்கு வந்தது.

அட்வொகேட்டுகள் தங்கும் அறை சிறியதாகத்தான் இருந்தது. இரண்டு பேர் பேசிக் கொண்டிருந்தது அவன் காதில் விழுந்தது:

'புதுசா வந்திருக்கிற லேடி சப்-கலெக்டர் ரொம்ப தைரியமா வளைச்சுப் பிடிச்சுட்டா. எம். எல். ஏ-வோட பாச்சா அவகிட்டே பலிக்கல்லே. பேப்பர் நியூஸை நிறுத்தணும்னு பார்த்திருக்காங்க, அதுவும் முடியல்லே.'

'மேலிடத்திலே இந்த அம்மாவுக்கு சப்போர்ட் இருக்கும் போலிருக்கு!'

'நோ! கலெக்டர் அப்ரிஷியேட் பண்ணியிருக்கார். ஆனு ரெவின்யூ மினிஸ்டர் அதிருப்தியா பேசியிருக்கார். அதனுலே இன்னிக்கு கலெக்டர் ஆபீஸிலே என்கொயரி நடக்கப் போறது. மினிஸ்டர் அதைத் தடுத்து நிறுத்த முடியல்லே. நம்ம கட்சிக்காரங்க கலெக்டருக்கும், சப்-கலெக்டருக்கும் ஆதரவா இருக்காங்க. எம். எல். ஏ. - ஸோ அண்ட் ஸோ இந்த அம்மாளை உடனடியா இங்கேயிருந்து மாத்திடணும்னு காபினெட் லெவல்லே பிரஷர் கொடுக்க மெட்ராஸ் போயிருக்கார். ஏன்யா, கவர்ன்மெண்ட் நடத்தருன்களா இல்லே, கட்சியை வளர்க்கிருன்களா இவனுங்க? ராஜாஜி சீஃப் மினிஸ்டரா இருந்தா இந்தப் பொண்ணைப்பத்தி ஸ்பெஷலா கமெண்டபிள் ரிமார்க்ஸ் எழுதுவாரு. நாணயம், நேர்மை இதுகள் ரெண்டும் இப்போ தேவையில்லே. ஆமாஞ்சாமி போடறவன்களுக்குத்தான் காலம் இப்போ!'

'இந்தப் பொண்ணு யார் தெரியுமா? முத்துசாமி -அதான்யா வழுதாவூர் ஜமீன் மர்டர் கேஸ்லே ஃபுல் பெஞ்ச் உட்கார்ந்தப்போ டிரெமண்டெஸா கேஸை பிரஸன்ட் பண்ணி, ரிமார்க்கபிளா ஜெயிச்சாரே கிரிமினல் லா எக்ஸ்பர்ட் — அவரோட டாட்டர். புலிக்குப் பொறந்தது பூனை யாகுமா?'

'ஃபேமிலி பேக்ரவுண்ட் இருக்கு இந்த உத்தியோகம் இல்லேன்னு

என்ன? அவங்க பிழைக்க முடியாதா? இந்த மாதிரி திறமையும் நேர்மையும் தைரியமும் உள்ளவங்க பத்து பேர் நிர்வாகத்திலே இருந்தா ஊழல் குறையும். இந்த எம்.எல்.ஏ. தற்குறி. இவன் போய் ஐ.ஏ.எஸ். ஆபீஸர் அந்த அம்மா அவங்களை மிரட்டியிருக்கான். டேடுடே கவர்ன்மெண்ட் வொர்க்லே பொலிடீஷியன்ஸ் தலையிட்டா நிர்வாக இயந்திரம் உருப்படுமா? பாரேன், வேடிக்கை இனிமேதான். இது ஒரு பெரிய ஸ்காண்டலா மாறினு ஆச்சரியமில்லே!'

வெங்கடேசனுக்குப் புரிந்து விட்டது. அத்தனை அவசரத்திலும் அவள் தனக்காகக் குறிப்பு எழுதி வைக்கத் தவறவில்லை. ஒருவரின் குணநலன்கள் தக்க தருணத்தில்தான் வெளிப்படும் போலும். அவனுடைய மனத்தில் சியாமளியின் மதிப்பு உயர்ந்து கொண்டே போனது. திருமணம் புரிந்து கொண்டு அவளுடன் வாழ்வு நடத்தும்போதுகூட, அவளுடைய பதவியின் காரணமாக இருவருக்குமிடையே ஏற்பட வேண்டிய ஒரு அநுசரணை, புரிந்து கொள்ளும் தன்மை இவற்றைப் பற்றி அவன் மனம் யோசித்தது.

வக்கீல்களில் ஒருவர் சொன்னதுபோல அவளைத் திண்டிவனத்தினின்றும் வேற்றூருக்கு மாற்றி விட்டால்...? நிர்வாகியாக இருக்கும் ஒருவரின் வாழ்க்கையில் இது போல பல பிரச்னைகள் வந்து கொண்டுதான் இருக்கும். தொழில் தங்களுடைய தனிப்பட்ட வாழ்க்கையைப் பாதிக்காத அளவிற்கு இருந்தால் பரவாயில்லை என்றுகூடத் தோன்றியது. அன்று மாலை அவளிடம் பேச வேண்டும். சென்னைக்கு அவள் மாற்றல் வாங்கிக் கொண்டால்கூடப் பரவாயில்லை. ஏதாவது ஒரு இலாகாவில் உயர் அதிகாரியாக, சப்-கலெக்டர் பதவிக்கு இணையானதாக உள்ள ஓரிடத்தில் அவள் உட்கார்ந்தால் போதுமானது. இம்மாதிரியான பதவிகளில் சிலருக்குப் பல துன்பங்கள் ஏற்படுவதுண்டு. அதிலும் பெண்ணாக இருந்து விட்டால் ஆபத்து அதிகம்தான். சியாமளியை உஷார்ப்படுத்த வேண்டும். கள்ளக் கடத்தல் ஆசாமிகள் நினைத்தால் சில சமயங்களில் ஆளையே தீர்த்துக் கட்டி விடுவார்கள் என்று சொல்கிறார்கள். அவன் சிறிது கலங்கிப் போனான்.

அன்று மாலை அவனுக்குத் தன் காரியாலயத்தில் வேலை சீக்கிரமே முடிந்து விட்டது. ஹோட்டலுக்குப் போகும் வழக்கம் இப்போது வந்திருந்தது. தலையை இலேசாக வலிப்பது போலிருந்தது. கோர்ட்டுக்கு அருகாமையிலிருந்த ஓட்டலுக்குப் போய் சூடாக ஒரு ராகிமால்ட் சாப்பிட்டான். ஸ்கூட்டரில் சியாமளியைப் பார்க்கப் போனான்.

மாலை நேரத்துச் சூரியனின் வண்ண ஜாலங்கள் மேற்குத் திசையை மாடர்ன் ஆர்ட்டாக மாற்றிக் கொண்டிருந்தன. அவன் சென்றபோது அவள் முன்புறத் தோட்டத்தில் புல்வெளியில் வட்டமான நாற்காலியில் அமர்ந்திருந்தாள். ஸ்கூட்டர் சத்தம் கேட்டதும் தானாக அவள் தலை திரும்பியது.

''குட் ஈவினிங்!''

''ம்.. எப்ப வந்தே?''

''ஜஸ்ட் ஒரு கால் மணி இருக்கும். நல்ல அலைச்சல் ரெண்டு நாளா. காலையிலே சரியாவே சாப்பிடல்லியாமே?''

''ம்.... மூட் இல்லே....''

அவள் சிரித்தாள்: ''கலெக்டர் போன பண்ணினர். இன்னிக்கு லோகல் பிரெஸ பீபிளைப் பார்க்கும்படியா ஆகிவிட்டது. நான்தான் பிரெஸ்மென் கேள்விக்குப் பதில் சொல்லும்படியா இருந்தது. கலெக்டர் அரிசி நிலைமையிலே இனிமே அபிவிருத்தி இருக்கும்னு ஒரு நம்பிக்கை ஜனங்களுக்கு உருவாகணும்னுதான் இதை ஏற்பாடு பண்ணியிருந்தார்.''

''இந்த மாதிரி பிரெஸ் மீட்டிங் வச்சுக்கலாமோ?''

''வொய் நாட்? பிரெஸ் பீபிள லோகலா இருக்கிற நிலைமையைப் பத்திக் கேட்டாங்க. சொல்ல வேண்டியது எங்கள் கடமை. மெட்ராஸ்லேருந்து இதைப் பாராட்டியும் கண்டித்தும் விதவிதமா வந்திருக்கு. ரெவின்யூ மினிஸ்டருக்கு அதிருப்தின்னு தெரிஞ்சிண்டேன். அநேகமா என்னை மாத்திடலாம்!''

அவன் மௌனமாக இருந்தான்.

அவளே தொடர்ந்தாள்: ''நல்ல வேளையா கலெக்டர் முழு மனசா என்னை ஆதரிக்கிறார். இந்தக் கடத்தல் பிஸினஸை ஒழிச்சுக் கட்டணும்னு அவரும் முயற்சி பண்றார். அவரையும் மாத்திடுவா போலிருக்கு!''

''பேஷ்! நல்ல நியாயம்'' என்றான் வெங்கடேசன்.



''எங்க மானேஜருக்குக் கோபம் வந்து எங்களைத் திட்டினால், அதுக்காக யாருமே வருத்தப்படமாட்டோம்..''

''ஏன்..?''

''அவர் ஹிந்தியிலேதான் திட்டுவார். அது யாருக்குப் புரியும்?''



''அது போகட்டும். ரெண்டு நாளா எப்படி?''

''எப்படின்னு.....? போரடிச்சுது. உனக்கென்ன த்ரில்லிங் லைஃப். எனக்கு வாய்தா கேஸ். சியாமளி, இன்னிக்குப் பாட்டி கேட்டுட்டா.''

''என்ன கேட்டா?''

''என்னடா து? தினமும் அவ வீட்டுக்கு போய் சாப்பிடறே, என்ன விஷயம்னு?''

''என்ன சொன்னீங்க?''

''என்ன நடந்ததோ அதை!''

''வெங்கட்!''—அவள் குரலில் சிறிது பதட்டம்.

அவன் சிரித்தான்.

வாடாமல்லிகை வண்ணச் சேலை அவளுடைய மேனியழகை அதிகரித்துக் காட்டியது. அவன் கண்களில் தெரிந்த பார்வை அவளை அப்படியே விழுங்கியது.

''என்ன, பார்வை ஒரு தினுசா இருக்கு?''

''ம்........''—அவன் பெருமூச்செறிந்தான்.

''எதுக்குப் பெருமூச்சு?''

அவன் பேச்சை மாற்றினான்.

''உன்னுடைய செய்கை ஒரு மாற்றத்தையே ஏற்படுத்திடும்.''

''என்னால முடிஞ்சதைச் செய்தேன். நம்மால வித்தின் அவர் ரீச் எதெல்லாம் இருக்கோ, அதைச் செய்யாம இருக்க முடியுமா? இதனால என்ன நேர்ந்தாலும் சரின்னுட்டுத்தான் செய்தேன்!''

''என்னால அப்படியிருக்க முடியல்லே!''

''வாட் டு யூ மீன்?''

குறும்பாகச் சிரித்துவிட்டுச் சொன்னான்: ''இப்போ நீ வித்தின் மை ரீச்தான். மனசு கெடந்து அடிச்சிக்குது. அப்படியே அள்ளியெடுத்து... முடியறதோ... நோ... எதுக்கும் கொடுப்பினை வேணும்!''

இருவரும் சிரித்தனர்.

அவன் சொன்னான்: ''சியாமளி, நம்ம மேரேஜ் பத்தி பாட்டி கேட்டா. நாம ஜாக்கிரதையா பழகணுங்கிறு.''

''உண்மையான பேச்சு. அதுவும் உங்களுக்கு ரொம்ப அவசரம், ஆத்திரம்.''

''தெரியும் நீ இப்படிப் பேசுவேன்னு. நான் கொஞ்ச நேரம் நிறுத்தினேன். வெங்கட், ப்ளீஸ்னு நீ சொல்லல்லே?''

''வெங்கட்! டோன்ட் பி ஸில்லி!''

''ஆல்ரைட்! இப்ப கேக்கறேன். நான் மெட்ராஸ் போய் உங்க அப்பாவைப் பார்த்து விஷயத்தைச் சொல்லிக் கேக்கட்டுமா?''

''ம்! அவசரம் கூடாது வெங்கட். நாம ஒருத்தரையொருத்தர் எவ்வளவு தூரம் புரிஞ்சிண்டிருக்கோம்னு....''

''இனிமேதான் புரிஞ்சிண்டிருக்கிறது எது வரைக்கும்னு சைகோ அனலிஸஸ் பண்ணணுமா?''

''சீரியஸா பேசறேன். எந்த நிமிஷத்திலேயும் நான் டிரான்ஸ்ஃபர் ஆகலாம். என்னுடைய உத்தியோகம் நம்ம குடும்ப வாழ்க்கையைப் பாதிக்கும் போல இருந்தா..''

''வேலை முக்கியமா, வாழ்க்கை முக்கியமாங்கிற பிரச்னை வரும். தீர்மானிக்க வேண்டியது நீதானே?''

''என்னைப் பொறுத்தவரை ரெண்டுமே முக்கியம்தான்.''

''தட்டுலே பணியாரமும் காலியாகக் கூடாது, வயிறும் ரொம்பணும்னு அது

என்னுடைய 'ஈகோ'வுக்கு ஒவ்வொருத்தரையா பலியாடாக்கிறேன்கிற மாதிரி சொன்னீங்களே, அது நியாயமா?''

''சியாமளி! இதுக்குத்தான் என்னே வரச் சொன்னியா?''

''உடம்பால, அதனேட உறவால ஏற்படற பந்தம் மட்டுமே ரெண்டு பேரை ரொம்ப நாளைக்கு ஒண்ணப் பிணைக்காது. உள்ளத்தால, உணர்ச்சியால, புரிஞ்சிக்கிற தன்மையிஞலதான் நெருங்கி வர முடியும். இதை நீங்க புரிஞ்சுக்கணும்கிறதுதான் என்னேட ஆசை.''

''நீ மரியாதைக் குறைவா பேசலாமோ?''

''ரெண்டு பேருக்கும் பொதுவானதுதான் மரியாதைங்கிறதும். பெண் என்கிறவளும் மனுஷ ஜென்மம்தான். அவளுக்கும் உணர்ச்சிகள் இருக்கு. உடம்போட அவஸ்தையைத் தீர்த்துக்கற











சாதனம் மட்டும் இல்லே அவ என்கிறதையும் புரிஞ்சுக்கணும்.''

''ரொம்பவும் அதிகப்படியா பேசறே சியாமளி!''

''இதோ பாருங்க! மனசில இருக்கிறதைக் கொட்டிடறது நல்லது. பல திருமணங்கள் முறிஞ்சி போறதுக்குக் காரணமே தம்பதிகள் ரெண்டு பேரும் தங்களுக்குள்ளே திரை போட்டுக்கிறதுதான். நான் உங்ககிட்டே எதை எதிர்பார்க்கிறேன், நீங்க என்கிட்டே என்ன எதிர்பார்க்கிறீங்க அப்படிங்கறதைத் தெளிவா புரிஞ்சுக்கணும்கிறதுதான் என் விருப்பம்.''

''உனக்கு உன் உத்தியோகம் பெரிசுங்கிறுப்பல பேசினியே, அது சரியோ?''

''கரெக்ட்! ஏன், அது பெரிசுதான். பொறுப்பான ஒரு பதவியிலே இருக்கேன் நான். என்னுடைய முயற்சியினுல, உழைப்பால, படிப்பால அதை நான் அடைஞ்சிருக்கேன். என் வாழ்க்கையில் நான் நானுத்தான் இருக்க விரும்பறேன். என்னைத் துணையாக்கிக்கணும்னு நினைக்கிற உங்களுக்கு நான் ஒரு சுமையா இருக்க விரும்பல்லே!''

''நீ இப்படிப் பேசறதுதான் சரியில்லே. மனைவிங்கிறவ புருஷனுக்குச் சுமைன்னு சொன்னு அதிலே அர்த்தமே இல்லே!''

''நீங்க நான் சொன்னதைச் சரியானபடி புரிஞ்சுக்கலேன்னு நினைக்கிறேன். கணவனுடைய வருவாய்லேதான் குடும்பம் நடக்கணும்கிற நிர்ப்பந்தம் வரும்போது மனைவி அவனுக்கு ஒரு சுமைதான். ஆனுல் அந்தச் சுமையை ஏத்துக்கிறதிலே ஆணுக்கு ஒரு சந்தோஷம் இருக்கு, பெருமை இருக்கு. என்னைப் போல இருக்கிற பெண்களுக்குத் தங்களோட புருஷனின் சுமையைக் குறைக்கிறதிலே, குடும்ப பாரத்தைப் பங்கு போட்டுக்கறதிலே ஒரு சந்தோஷம் ஏற்படறது. இதைப் போய் அகங்காரம்னு சொன்னு என்னுல ஒப்புக்க முடியலே! மாறிட்டு வர்ற சமுதாய அமைப்பிலே கணவன் மனைவி ரெண்டு பேருமே சம்பாதிக்கிறதுதான் வாழ்க்கையோட்டத்துக்கு நல்லதுன்னு இருக்கிறப்போ அந்த உண்மையை ஏத்துக்க ஏன் தயங்கணும்?''

''எனக்கு வக்கீல் உத்தியோகம் பார்க்கணும்கிற கட்டாயம் இருக்கு. இருக்கிற நிலத்திலே விளைஞ்சா போச்சு, இல்லேன்னு கஷ்டம்தான். உன்பாடு

அப்படியில்லேயே. உங்க் மன்னி வேலேக்குப் போருளா?''

அவள் மெல்ல சிரித்தாள். அவன் அருகே வந்தாள். மிக உன்னிப்பாக அவனேயே பார்த்தாள். என்ன தோன்றியதோ, அவன் முகத்தைத் தன் இரு உள்ளங்கைகளிலும் ஏந்திஞள். மௌனமாக நின்ருள். அவள் விழிக்கடையில் கண்ணீர் முத்துக்கள் அரும்பின.

''சியாமளி! ஏன் அழறே? நான்.. நான்.. தப்பா எதுவும் கேட்கலியே!''

'இல்லே'யென்ற பாவனேயில் தலே அசைத்தாள்.

''நீங்க ஒவ்வொரு தடவையும் உங்க கஷ்டத்தைச் சொல்லும்போதும் எம் மனசு எவ்வளவு வருத்தப்படறது தெரியுமா? நான் வெறும் எமோஷனலா இப்படிப் பேசல்லே. நீங்க் மெட்ராஸ்ல இருந்து புறப்படற அன்னிக்குச் சொன்ன வார்த்தைகளே நான் மறக்கல்லே. அன்னிலேருந்து இது நிமிஷம் வரைக்கும் என் மனத்தில் உங்களேத் தவிர வேற யாருக்கும் இடம் தரலே. மன்னிக்கு வேலேக்குப் போக வேண்டிய கட்டாயமில்லே.''

''உனக்கு மட்டும் இருக்காப்ல பேசறியே?''

''யெஸ்! இருக்கு. நம்ம ரெண்டு பேருக்கும் வாழ்க்கைப் பிணேப்பு ஏற்பட்ட பிறகு என் புருஷன், என் அண்ணனுக்கோ, அல்லது என் உறவினர்களுக்கோ எந்த விதத்திலேயும் குறைஞ்சவரில்லேன்னு அவங்களுக்குத் தெரியணும். நம்ம குடும்ப கௌரவம்தான் எனக்குப் பெரிசா இருக்கும். எங்க அப்பா வீட்லேருந்து நான் எது கொண்டு வந்தாலும் அது.. ..போகட்டும். என் பங்கு ஆஸ்தி வரும் வரைக்கும், நான் எந்த ஒரு விஷயத்துக்கும் அவங்களேச் சார்ந்து இருக்கப் பிரியப்படலே. நான் பேதப் படுத்தல்லே. ஆஞ என் கணவர் எப்படிப்பட்டவர்னு எனக்குத் தெரியும். அவருடைய மனத்திலே ஒரு சிறு குறையும் ஏற்படக்கூடாதுன்னு நினேக்கிறேன். அதுக்காகவாவது உங்களுக்குத் தொழில் ரீதியா வருமானம் போதுமான அளவுக்கு வர்ற வரையிலுமாவது நான் வேலே பார்க்கிறதுன்னு இருக்கேன்!''

''சியாமளீ!''— அவன் அவளே அப்படியே அணேத்துக் கொண்டான்.

அவள் மறுதளிக்கவில்லே. மாருக, அவன் அகன்ற மார்பில் முகம் புதைத்தாள். சூடான அவள் கண்ணீர் அவன் மேனியைத் தொட்டது. சில விநாடி நேரம் அவள் உடம்பு குலுங்கியது.

''சியாமா! ப்ளீஸ்..ப்ளீஸ்..அழாதே சியாமா... நான் உன்னேப் புரிஞ்சிக்கிட்டேன். இங்கே பார்.''—அவள் மோவாயைத் தொட்டுத் தலேயை நிமிர்த்திஞன். அவனேயுமறியாமல் அவன் மேனி சிலிர்த்தது.

தூய அன்பின் சின்னமாக, தன் மனத்தில் நாயகனுக ஏற்றுக் கொண்டுவிட்டவனின் அன்புக்காக எதையுமே செய்யும் நல்லிதயம் பெற்ற ஓர் ஆன்மாவை அவன் தரிசித்தான். நிஷ்களங்கமான முகம், நிர்மலமான அவள் மனத்தைப் பிரதிபலிப்பது போல இருந்தது. குனிந்து அவள் முகத்தில் முத்தமிட்டான். அவனுடைய முழங்கால்களுக்கிடையே தன் முகத்தை இப்போது அவள் வைத்துக் கொண்டாள்.

''என் ஈகோ இதுதான். உங்க தாத்தா காலத்திலே குடும்பம் எப்படியிருந்ததுன்னு அப்பா ஒரு நாள் சொன்ஞர். ஆலமரத்தோட விழுது பூமியைத் தொடற வரைக்கும் அதுக்குத் தாய் மரத்தோட துணே தேவை. பூமியைத் தொட்டுட்டா விழுதே வேருன்றி மரமாகிடும். பாரம்பரியமா, நல்ல பண்பாட்டிலே வந்த குடும்பம். செல்வ பலத்திஞல சமுதாயத்துக்கு நல்லது செய்யணும்னு நினேச்சவங்களோட வாரிசு நீங்க. அப்படிப்பட்டவருடைய குழந்தைகளுக்குத்தான் தாயாக நான் விரும்பறேன். என்னேப் புரிஞ்சுக்கிட்டு எனக்கு அந்தப் பாத்யதையைக் கொடுப்பீங்களா? பணக்கார வீட்டுப் பெண், பதவியாசை பிடிச்சவள்னு ஒதுக்கிட்டுப் போயிடுவீங்களா?'' - கண்களில் நீர் மல்க அவள் கேட்டாள்.

அவன் கண்களில் ஆனந்தம் பொங்கியது.

அவள் வலது உள்ளங்கையை எடுத்துத் தன் உள்ளங்கையுடன் பிணேத்துக் கொண்டான். அதன் பொருளே அவள் புரிந்து கொண்டு விட்டாள்.

''சியாமளி!..'' அவனுல் வேறென்றும் பேச முடியவில்லே.

அவன் மனக்கண்ணில் தாத்தா வெங்கடேஸ்வரன் புன்னகை பூத்த முகத்துடன் நின்று பார்ப்பது போல பிரமை தட்டியது.

மீண்டும் அவளே வாரியெடுத்து அணேத்துக் கொண்டான்.

(தொடரும்)




அரக்கோணம் நகர மக்களின் தீராத பிரச்னையாகவும் தலைவலியாகவும் இருப்பது ரெட்டைக்கண் வாராவதி என்ற ஒரு இருட்டுப் பாலம் தான். அரக்கோணம் நகரிலிருந்து காஞ்சிபுரம் செல்லும் பாதையில் உள்ள ரயில்வே சுரங்கப் பாதையின் வழியாகத்தான் நகரின் மற்றொரு பக்கத்தில் இருக்கும் பழனிப்பேட்டையை அடையலாம்.

நூறு ஆண்டுகளுக்கு முன்னர் கட்டப்பட்ட இந்தச் சுரங்கப் பாதையின் இன்றைய நிலை—மக்களாகவே போவதற்காக ஒரு வழியை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். இன்னொரு வழியில் லாரி, பஸ் போன்ற வாகனங்களின் போக்குவரத்து. இந்தப் பாலத்திற்குள் நுழைந்து விட்டால் விட்டலாச்சாரியா படத்தில் வரும் மாயாஜாலக் குகையைப் போல, பகலிலேயே பயங்கர இருட்டு; சரியான விளக்கு வசதி இல்லாத இரவு நேரங்களில் கேட்கவே வேண்டாம். இந்தப் பாலத்தினுள் நுழைந்து வெளியே வரவேண்டுமானால் ஸ்விம்மிங் டிரஸ்தான் லாயக்கு! ஏனென்றால் முழங்கால் அளவு ஓர் ஆறு ஓடுகிறது. புனிதமான ஆறாக இருந்தால் சகித்துக் கொள்ளலாம். ஆனால், இதுவோ ரயில்வே பிளாட்பாரம், ரயில்வே காலனியிலிருந்து வரும் அசுத்தமான கழிவு நீர்தான் சாக்கடை ஆறாகப் பாலத்தில் பாய்ந்து கொண்டிருக்கிறது. ஒரு 'போட் சர்வீஸ்' விடுமளவுக்குத் தேங்கியிருக்கும் இந்த ஆற்றில், மக்கள் வேஷ்டியைத் தூக்கிப் பிடித்தும், தாண்டித் தாண்டியும் சங்கடத்தோடு நடப்பதைப் பார்த்தால் வேதனையாக இருக்கிறது.

இந்தப் பாலம் குறுகலாகவும் – அதே சமயம் தாழ்வாகவும் இருப்பதால் கொஞ்சம் அகலமான லாரிகளோ, சூப்பர் டீலக்ஸ் வண்டிகளோ செல்ல முடியாது. சென்றால் டாப் கழன்றுவிடும். இந்த இருட்டுப் பால போக்குவரத்தில் பல விபத்துகள் நடந்திருக்கின்றன.

அரக்கோணம் வரும்போதெல்லாம் இந்தப் பாலத்தைக் கடந்து தான், அமைச்சர் விஜயசாரதி தன் வீட்டிற்குப் போகிறாராம். சென்ற தேர்தலின்போது இதை விரிவுபடுத்துவதாக வாக்குறுதி கொடுத்தாராம். அது இப்போது எங்கே பறந்து கொண்டிருக்கிறதோ தெரியவில்லை. மாநில அரசு நிதி அளித்தால் பாலத்தை விரிவுபடுத்தலாம் என்று ரயில்வே நிர்வாகம் பதில் அளித்திருக்கிறது. 'நீயா, நானா' என்று போட்டி போடாமல் விரைவிலேயே இந்த ரெட்டைக்கண் பாலத்தை விரிவுபடுத்தினால் அரக்கோணம் மக்கள் கோடி நமஸ்காரம் செய்யத் தயாராய் இருக்கிறார்கள். நமஸ்காரத்தை யார் ஏற்றுக் கொள்ளப் போகிறார்கள்?

—கண்ணகி

# 21

அன்று காலையில் எழுந்ததும் வெங்கடேசனுக்கு அசதியாக இருந்தது. முந்தைய இரவு அவன் தூங்கவில்லை. மனத்தில் பற்பல எண்ணங்கள் எழுந்து அவனை அலைக்கழித்தன.

தான் சியாமளியிடம் பேசியது நியாயமா என்ற கேள்வி மீண்டும் மீண்டும் ஒலித்தது. தன்னையுமறியாமல் தனக்குள் ஒரு தாழ்வு மனப்பான்மை ஏற்பட்டு விட்டதோ? அவளுடைய தொழிலின் காரணமாக அவளுக்குச் சமுதாயத்தில் ஏற்பட்டுக் கொண்டிருக்கும் மதிப்பு, நிரந்தரமான வருவாய் கிடைக்கும் வாய்ப்பு, ஏற்கெனவே அவள் பங்குக்குக் கிடைக்கவிருக்கும் ஆஸ்தியின் மதிப்பு இவற்றையெல்லாம் ஒருசேர நினைத்துப் பார்க்கும் போது, தனக்கும் அவளுக்கும் இடையே பெரிய வித்தியாசம் ஏற்பட்டிருப்பது போல் தோன்றியது. மீண்டும் மீண்டும் தன் சிந்தனையில் பொருளாதார அடிப்படையிலான ஓர் அந்தஸ்திற்கே முக்கியத்துவம் தரக்கூடிய விதத்தில் எண்ணங்கள் தோன்றுவதேன்? சியாமளி எவ்வளவு சொன்ன போதிலும், கண்கூடாக இருக்கும் உண்மை நிலை அதுதானே!

அவளை மணம் புரிந்து கொள்வதில் தனக்கு இருக்கும் ஆர்வம் அவளிடத்தில் இல்லாதிருப்பதேன்? தான் அவளை மெய் தீண்டி, அரவணைத்து.... அதைக்கூட இப்பொழுது அவள் பெரிதாகப் பொருட்படுத்தவில்லை போல் தோன்றியது. கற்பு நெறியைப் பற்றித் தற்காலப் பெண்களிடையே மாறுபட்ட கருத்துக்கள் தோன்றியுள்ளன. பொருளாதாரச் சார்பு நிலை நீங்கி விட்ட காரணமே இதற்கு அடிப்படை போலும்.

''பரஸ்பரம் புரிந்து கொண்டு'' என்று சொன்னாளே, அதன் கருத்து என்ன? அவள் வேலை நிமித்தம் பல ஆடவர்களுடன் பழக வேண்டிய வாய்ப்பு ஏற்படுகிறது. சென்ற தலைமுறையில் ஆணைப் பற்றி பெண் மனத்தில் குடியிருந்த கருத்துக்கள் இப்போது மாறித்தான் போய்விட்டன. கணவன் என்பவன் மற்றோர் ஆண். உடலின் சுகாநுபவங்களுக்காக, சமுதாய ரீதியில் குடும்பம் என்ற ஓர் அமைப்புக்காக ஏற்படுத்திக் கொள்ளும் ஓர் உறவினால் பெண்ணிடம் உரிமை கொண்டாடும் ஒரு வாழ்க்கை பாகஸ்தன். திருமணம் என்பது புனிதப் பிணைப்பு என்ற கருத்தோற்றம் மாறி விட்டது. அது ஒரு சமுதாய ரீதியான வாழ்க்கை ஒப்பந்தம் என்ற நிலைக்குத் தள்ளப்பட்டு விட்டது போலும்!

அவனுக்கு எரிச்சலாக இருந்தது.

அவளைத் தான் சந்திக்காமலேயே இருந்திருக்கலாம். இல்லை, சென்னையிலிருந்த மூன்று வாரங்களில் அந்நியப் படுத்திக் கொண்டு வாழ்ந்ததைப் போன்று இருந்திருக்கலாம். அவளைப் பாட்டிக்கும், அம்மாவிற்கும் அறிமுகம் செய்து வைத்தது பெரிய தவறு. பாட்டியிடம் சியாமளியைத் தான் மணம் புரிந்து கொள்ளப் போவதாக வேறு சொல்லியாகி விட்டது. அவசரம்தான்.

இனி அவளைப் போய் பார்க்கக் கூடாது. ஒரு நாள், இரண்டு நாளல்ல. ஒரு வாரம், ஒரு மாதம் என்று நாளைக் கடத்தி விட வேண்டும். முதலில் துன்பமாக இருக்கலாம். பிறகு பழகிவிடும். எத்தனை அகம்பாவம் அவளுக்கு? 'எழுந்து வெளியே போ' என்று கழுத்தைப் பிடித்துத் தள்ளாத குறையாக...

# வேர்கள்

கிருஷ்ணமணி



''நீங்க சரித்திர நாவலாசிரியரா இருக்கலாம் மாப்பிள்ளே... அதுக்குன்னு தலே தீபாவளிக்கு இரண்டு புரவிகள் வாங்கித் தரணும்னு சொன்ன எப்படி.?!''

தன்னால், தானாக இருக்க முடியவில்லையே என்று சங்கடப்பட்டான். ஒவ்வொரு விநாடியும் அவளைப் பற்றிய எண்ணமே மனத்தில் மேலோங்கி நின்றது. தன்வயமிழந்து, அவளுடைய நினைவுகளில் தான் அடிமைப்பட்டுப் போனது போல் தோன்றியது.

''ஏண்டா அம்பி, இன்னிக்கும் சியாமளியோடதான் ப்ரெக்ஃபாஸ்டா?''—அம்மா கேட்டாள்.

அவனுக்குத் துணுக்குற்றது.

சுந்தரிப் பாட்டி சொன்னாள்: ''அவன் சொன்னாலொழிய அவனுக்காக நீ டிபன் பண்ணாதே.''

எத்தகைய ஒரு பாதிப்பு ஏற்பட்டுவிட்டது! இவர்களிடம் தனக்கும் அவளுக்குமிடையே ஒரு பேதம் ஏற்பட்டு விட்டது என்று எப்படிச் சொல்ல முடியும்?

எதிலும் சுவாரஸ்யமில்லாதவன் போல இயந்திர கதியில் காரியங்களைச் செய்தான். எட்டு மணிக்கு வழக்கம் போல் புறப்பட்டான்.

வீட்டில் தன் நிலைமையைச் சொல்ல வெட்கமாகக்கூட இருந்தது. வெறும் வயிற்றுடன் புறப்பட்டான். அவளைப் பற்றிய கோபம் தணியவில்லை. திண்டிவனம் போக அவன் ஸ்கூட்டரைக் கிளப்பினான்.

மணியக்காரர் சுப்ரமணியம் அவசரம் அவசரமாக வந்தார்:

''அம்பி! நானும் திண்டிவனம் போகணும்.''

''சரி! பின்னால ஏறிக்குங்க. நடுவிலே நான் திருப்பும்போது ஸ்டெடியா உட்காருங்கோ. பின்னால இருக்கிற கம்பியைப் பிடிச்சிக்குங்க.''

ஸ்கூட்டர் புறப்பட்டது.

வழி நெடுகிலும் மணியக்காரர் பேசிக்கொண்டே வந்தார். எதிரில் ஓவர்லோடு ஏற்றிக் கொண்டு ஒரு லாரி வந்தது. ஸ்கூட்டருக்கு முன்னால் பெட்ரோல் லாரி ஒன்று மெதுவாகப் போய்க் கொண்டிருந்தது. அதை ஓவர்டேக் செய்ய விரும்பினான் அவன். வேகத்தை அதிகரித்தான்.

''அம்பி! மெதுவாத்தான் போயேன்!''

பெட்ரோல் லாரியை ஓவர்டேக் செய்யும் போது எதிரில் வந்த லாரிக்காகச் சற்று வளைத்துத் திருப்பினான்.

''எனக்குப் பயமாப் போயிட்டது அம்பி! ஏன் இப்படி ஓட்டறே?'' மணியக்காரர் கேட்டார். அவனுக்கே சற்று அச்சமேற்பட்டிருந்தது. சிறிது இடைவெளியில் ஒரு விபத்தைத் தவிர்க்க முடிந்தது. தன் உள்மனப் போராட்டம் வெளிச் செய்கைகளையும் ஆக்கிரமித்துக் கொள்வதை அவன் விரும்பவில்லை. மனத்தை நிதானப்படுத்திக் கொண்டான்.

**அ**வன் ஆபீஸ் இருக்கும் தெருவிற்குள் வண்டி நுழைந்தது.

அந்த வீட்டின் முன் இரண்டொருவர் நின்று கொண்டிருந்தனர். மணியக்காரர் கேட்டார்: ''உன் கிளையண்ட்ஸ் போல இருக்கு!''

அவன் அருகே வந்ததும் பார்த்தான். முற்றிலும் புதியவர்கள்.

அவர்கள் இவனுக்கு வணக்கம் செலுத்தினர்.

ஆபீஸ் முன் இருந்த அறையில் அவர்களை உட்காரச் சொன்னான். வியர்த்

திருந்தது. மின்விசிறியைச் சுழல விட்டான். வேலைக்காரி ஊதுவத்தி ஏற்றி வைத்திருந்தாள். அதன் நறுமணம் சுகமாக இருந்தது. பசி வயிற்றைப் புரட்டியது.

மணியக்காரர் சொன்னுர்: ''உனக்கு விஷயம் தெரியுமோ? பேங்கர் சீனுவோட பிள்ளை, வேலையிலே ஏதோ கோளாறு பண்ணிட்டானும். அவனை மஞ்சக் குப்பம் மாத்திட்டாளாம். எச்சரிக்கை பண்ணி விட்டுட்டாளாம். சப்-கலெக்டர் அம்மா தயவினுலதான் இது நடந்திருக் குன்னு சீனுவே சொன்னுர்..''

சியாமளி முதலில் மறுத்து விட்டு, பிறகு ஏன் உதவி செய்ய வேண்டும்? தான் சிபாரிசு செய்யாமற் போனது நினைவுக்கு வந்தது.

''சரி! நான் போயிட்டு வரேன். இன் னிக்கு சப்-கலெக்டர் ஆபீஸுக்குத்தான் போறேன்.''— சொல்லிவிட்டு மணியக் காரர் புறப்பட்டார்.

புதிதாக வந்தவர்களை உள்ளே அழைத்தான்.

அவர்களிடம் என்ன சமாசாரம் என்று கேட்டுத் தெரிந்து கொண்டான். வழக்கு சிவில் சைட்தான். பள்ளிக் கூடம் ஒன்றிற்கு விளையாட்டு மைதானத் துக்கென ஒதுக்கப்பட்ட ஒண்ணரை ஏக்கர் புறம்போக்கில் ஊர் பெரிய மனிதர் ஒருவர் ஒரு பாகத்தை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறுர். அவருக்கு நோட்டீஸ் அனுப்ப வேண்டும். மேலும் அந்த நிலம் அரசாங்கத்தினரால் இன்னமும் அலி நேஷன் செய்யப்படவில்லை. சப் - கலெக் டரிடம் அதற்கான கோப்பு இருக்கிறது. வெங்கடேசன் மூலம் சென்றுல் விஷயம் சுலபமாக முடியும் என்று தெரிந்து வந்திருக்கிறுர்கள்.

இந்த நாட்டில் யார், யாருக்கு வேண்டியவர்கள் என்பதை எப்படியோ தெரிந்து கொண்டு விடுகிறுர்கள். இப் போது, தான் சியாமளியிடம் செல்ல வேண்டிய கட்டாயம் ஏற்படப் போகிறது. நோட்டீஸ் அனுப்ப வேறு வக்கீலிடம் போகச் சொல்லி விடலாம். ஆனுல் ஆரம்ப காலத்தில் கிடைக்கும் சிறு வழக்குகளைக்கூட உதாசீனம் செய்வது புத்திசாலித்தனமல்ல. 'கிளை யண்ட்ஸ்' அதிகரிக்க வேண்டுமென்றுல், பலருக்கும் வழக்கறிஞனின் பெயர் தெரிந்திருக்க வேண்டும்.

''நோட்டீஸ் நான் டிராஃப்ட் பண் ணிக் கொடுத்திடறேன். ரெஜிஸ்டர்ட் போஸ்டுல அனுப்பிச்சிடுங்க. இந்த நிலத்தை ஸ்கூலுக்கென மாற்றம் செய் யற விஷயமா சப்-கலெக்டரை நீங்களே போய் பாருங்க!''

''இல்லே ஸார்! அந்த ஆள் சவால் விட்டிருக்கான். நாங்க பொதுஜனங்க கிட்ட நன்கொடை வசூல் செய்து அந்தப் பள்ளிக்கூடத்தை நிறுவியிருக்கோம். அஞ்சு வருஷமா நடந்துகிட்டு வருது. இப்போ ஹைஸ்கூலா மாத்தணும்னு பிரயாசைப்படறேம். அந்த ஆளை கமிட்டியிலே போடல்லே. ஊ ழல் மன்னன். தாசில்தார் ஆபீஸ்லே ஓகே ஆயிட்டது. ஆனு அஃபீஷியலா சப் - கலெக்டர் உத்தரவு போடணும். அந்த பேப்பர் மூணு நாலு வாரமா இங்கே இருக்குது. இதைத் தடுத்து நிறுத்த அவர் திட்டம் போடறுரு. சப்- கலெக்டர் உத்தரவு கிடைச்சிட்டால் அந்த ஆளை வெளியேத்தறது சுலபமா போயிடும்.''— ஒருவர் விளக்கினுர்.

''ம்......''

''எங்க ஊரிலே ஒரு கோயில் இருக்கு ஸார். அம்பது வருஷத்துக்கு முன்னுல கட்டினது. மானியமா அதுக்கு ஆறேழு

''அப்பா...! ப்ளீஸ்! அவரைக் குளிக்கணும்னு மட்டும் கம்ப்பல் பண்ணுதீங்க... கோவிச்சுக்கிட்டு ஊருக்குக் கிளம்பிடுவார்!''



ஏக்கர் நெலமிருக்கு. அந்த ஆள்தான் டிரஸ்டி. தன் சொந்தக் கோயில் போல அந்த நெலத்திலே விளைஞ்சு வர்றதை அனுபவிச்சிக்கிட்டிருக்காரு. ரோடு மேல பத்து கடை கட்டி, பங்காரு நாயுடுங்கிறவரு அதுகளோட வாடகைப் பணம் கோயிலுக்குச் சேரணும்னு உயிலெழுதி வச்சிட்டுப் போயிட்டாரு. மாசம் இருநூறு ரூவா வருது. அதையும் அந்த ஆளுதான் சாப்பிடறுரு. ஊரிலே ஒரு கமிட்டி அமைச்சிருக்கோம். அவர் பேரிலே கேஸ் போட்டு, பொதுவான ஒரு தர்மகர்த்தா கமிட்டி வைக்கணும்னு இருக்கோம். இந்த பிளே கிரவுண்டு விஷயம் முடிஞ்ச கையோட அந்த ஏற்பாட்டைக் கவனிக்கணும். ஸார்தான் அதையும் எடுத்து ஜெயிச்சுத் தரணும்.'' —இன்னொருவர் சொன்னர்.

இவர்களைத் திருப்பியனுப்பக் கூடாது. அவளைச் சென்று பார்க்க வேண்டியிருக்கும். தனக்காக அல்ல, பொதுக் காரியம். நியாயம் கோரி வந்திருக்கும், நல்லவர்களுக்காகச் செய்யப்பட வேண்டிய காரியம்.

''ஓகே! நான் அக்ஸெப்ட் பண்ணிக்கிறேன்!''

''ரொம்ப சந்தோஷம் ஸார். சப்—கலெக்டர் இன்னிக்கு ஊரிலே இருக்காங்க. நாளைக்கு மெட்ராஸ் போகப் போறுங்களாம். தகவல் விசாரிச்சு வந்தோம். சிரமம் பார்க்காமல்....''

மெட்ராஸ் போகப் போகிறுளா? நம்மிடம் சொல்லவேயில்லையே! சொல்ல நினைத்திருக்கலாம். அதற்குள் சண்டை பிடித்துக் கொண்டு வந்து விட்டோம். இப்பொழுது போனல் என்ன நினைப்பாள்? சே! சியாமளி என்ற பெண் வேறு, அதிகாரி வேறு என்ற பாகுபாடு அவளுக்கு உண்டு. கட்சிக்காரர்களின் சார்பில் போகும் வழக்கறிஞனைத்தானே நாம் இப்போது அவளிடம் போகப் போகிறோம்! அதையும்தான் பார்த்து விடலாம்.

''நான் இன்னும் டிபன் சாப்பிடல்லே. நீங்க வெளியே ஜோலியிருந்தா போயிட்டு வாங்க. அதுக்குள்ள நானும் சாப்பிட்டுட்டு வந்திடறேன்'' என்றுன். வக்கீல்கள் என்றல் கட்சிக்காரர்களின் செலவில் டிபன் சாப்பிடுகிறவர்கள் என்பதைத் தன் வரையிலுமாவது மாற்ற வேண்டுமென்று எண்ணினன் அவன். சென்னையில் ஹைகோர்ட்டுக்கு எதிரே இருக்கும் ஓட்டல்களில் இடைவேளையின் போது கறுப்புக் கோட்டுகளும், கட்சிக்காரர்களுமாகக் காட்சியளிக்கும் ஒரு தோற்றம் மனக் கண்ணில் வந்தது. பெரிய வக்கீல்கள் அம்மாதிரி வருவதில்லை.

''நல்லா இருக்குது ஸார். வாங்க, மூணு பேருமா சேர்ந்து டிபன் சாப்பிடுவோம்!''

''இல்லே, நீங்க போயிட்டு வாங்க!''

''ஸார் வாங்க! நீங்க எங்க கேஸை எடுத்துக்கறதா சொன்னவுடனேயே ஜெயிப்பு எங்களுக்குத்தான்னு தீர்மானம் ஆயிட்டது. இதுவரையிலும் கடந்த ஒண்ணரை வருஷத்திலே நீங்க ஒரு தடவைகூட தோக்கல்லியாமே! பெரிய விஷயம் ஸார் இது. நாங்ககூட வயசில இளையவரா இருக்கீங்களேன்னு முதல்லே அச்சப்பட்டோம். இவர் உடனே கரிகால் அரசனேட கதையை நினைவுபடுத்தினரு. உங்க தாத்தா வெங்கடேசன் அந்தக் காலத்திலே சிங்கம் மாதிரி இருந்தார்னு சொல்லிக்கிட்டாங்க. அவர் பேரை நீங்க நிச்சயம் எடுப்பீங்க ஸார்!''

அவனல் மறுதளிக்க முடியவில்லை. மனிதர்களின், குறிப்பாகத் தொழில் முறைப் படிப்பில் தேறியவர்களின் வெற்றிக்குக் குடும்பப் பின்னணியும் ஒரு ப்ளஸ் பாயிண்டாக இருப்பதை உணர்ந்தான்.

சிற்றுண்டி முடித்து வந்ததும் அந்தப் பெரிய மனிதருக்கு நோட்டீஸ் எழுதினன். சப் - கலெக்டருக்கு மனு எழுதினன். தன் கறுப்புக் கோட்டையும், கஞ்சி போட்ட வெள்ளைக் காலரையும் எடுத்துக் கொண்டான். கண்ணுடியில் பார்த்துத் தலையை வாரிக் கொண்டான்.

''புறப்படலாமா?''

''ம்....நாங்க குதிரை வண்டியிலே வந்திடறேம் ஸார்!''

''சீக்கிரமா வந்து சேருங்க.....''

சப் - கலெக்டரைப் பார்த்துப் பேச வென்று நிறைய பேர் காத்திருந்தனர். சேம்பருக்கு வெளியேயிருந்த அகலமான வராந்தாவில் நீளமான பெஞ்சுகள் போடப்பட்டிருந்தன. பழைய காலக் கட்டடம். வெயிலே தெரியாதவாறு மரங்கள் நிழல் பரப்பிக் கொண்டிருந்தன.

நல்ல உயரமும், ஆகிருதியும் உடைய டபேதார், மதுரை வீரன் சிலையிலிருக்கும்

மீசையைப் போன்ற தன் கறுப்பு மீசையைத் தடவி விட்டுக் கொண்டிருந் தான். உள்ளேயிருந்து வெளியே ஒருவர் வந்ததும், பார்வைக்கு வந்திருந்தவர் களில் ஒருவரைக் கிரமமாக உள்ளே அனுப்பினுன் டபேதார். அங்கே அமைதி நிலவியது.

வெளியே வந்த ஒரு கிழவரின் முகம் மலர்ந்து காணப்பட்டது. ''மூணு வருசமா நடையா நடந்தேன். புண்ணிய வதி! இந்த அம்மா வந்த பொறவுதான் எனக்கு நெலம் கெடைச்சுது. நல்லாருக் கோணும்!''—வாயார, மனதார அவர் வாழ்த்திச் சென்ருர்.

காத்திருந்தவர்களில் ஒருவர் கிசுகிசுத் தார்: ''இப்போ சப் - கலெக்டராபீஸே மாறிப் போயிருக்குது. இந்த அம்மா வுக்கு இளம் வயசுதானும். ஆனுல் ஃபைல்களை ரொம்ப சீக்கிரமா டிஸ்போஸ் பண்ருங்களாம். நல்ல பேரு.''

வெங்கடேசன் கீழுதட்டைக் கடித் துக் கொண்டான். வந்து பதினைந்து நிமிடங்களாகி விட்டன. தன்னைக் கண்ட மாத்திரத்தில் எவள் ஓடோடி வந்து வரவேற்றுப் பேசுவாளோ, அவளுடைய பார்வைக்காகத் தான் காத்திருக்க வேண்டியிருக்கிறது. தன்னையுமறியாமல் தன் மனத்தில் இனம் புரியாத ஓர் உணர்ச்சி பரவுவதை அவன் உணர்ந் தான்.

''வக்கீல் ஸார்! அடுத்தது நாமதான்.''

அவன் நினைவு திரும்பியது.

''நீங்க முதல்லே உள்ளே போங்க. அவசியம்னு நான் வரேன்!''

''ஸார்..ஸார்..நீங்க வாங்க ஸார்.. ப்ளீஸ்!''

டபேதார் சமிக்ஞை செய்தான்.

வெளியே ஒருவர் வரவும், வெங்கடேசன் உள்ளே நுழைந்தான்.

விசாலமான அறை. பெரிய அளவி லான மேசையும், நாற்காலியும் சப்-கலெக்டருக்குப் போடப்பட்டிருந்தன. உத்தரம் இருபது அடி உயரமிருந்தது. ஜன்னல்களை வெட்டிவேர்ந் தட்டிகள் மறைத்துக் கொண்டிருந்தன. சியாமளி எழுதிக் கொண்டிருந்தாள். நீண்ட இணைப்புக் குழாயில் தொங்கிக் கொண் டிருந்த மின்விசிறி மெல்லச் சுழன்று கொண்டிருந்தது.




''மிஸ்டர் ஜோஸப்! இஷ்யூ ஆர்டர்ஸ் டு டே இட்ஸெல்ஃப்.''

''யெஸ் மேடம்!''

''நெக்ஸ்ட்!'' — சொல்லி விட்டுத் தலை நிமிர்ந்தாள்.

ஒரு விநாடி அவள் பார்வை நிலைகுத்தி நின்றது. நாவினுல் கீழுதட்டை மெல்ல தடவிக் கொண்டாள். வெங்கடேசனை

முதன்முதலாக வக்கீல் உடையில் இப்போதுதான் அவள் பார்க்கிருள். எதிரில் போடப்பட்டிருந்த நாற்காலி களைக் காட்டினுள்.

வெங்கடேசன் அமர்ந்தான்.

''வெல்! என்ன விஷயம்?''

சப்-கலெக்டரின் தோரணை. அவனைத் தெரிந்து கொண்டதாகவே அவள் காட்டிக் கொள்ளவில்லை போலிருந்தது.

''மேடம்!....'' அவன் தயங்கினுன்.

இப்பொழுது அவள் நேராக அவனைப் பார்த்தாள். மிக அமைதியாக, சலன மேதுமின்றி, ஒரு நிர்வாக அதிகாரி யாகப் பார்த்தாள்.

''சொல்லுங்கோ ஸார்!''

அவன் தட்டுத் தடுமாறி விஷயத்தை விளக்கினுன். தன்னுடைய தடுமாற்றம் அவனுக்கே வியப்பாக இருந்தது.

''ம்.. எந்த ஊர்னு சொன்னீங்க?''

''விக்கிரவாண்டி.''

''நீங்க இவங்களுடைய -லீகல் கான்ஸலா....?''

''யெஸ் மேடம்!''

பஸ்ஸரை அழுத்தினுள்.

டபேதார் வந்தான். ''லேண்ட் அலிநேஷன் செக்ஷன் ஹெட்கிளார்க்கை கூப்பிடுங்க!''

சிறிது நேரத்தில் அவர் வந்தார்.

''மிஸ்டர் எபினேஸர்!''

''யெஸ் மேடம்.''

''விக்கிரவாண்டியிலே ஒரு ஸ்கூலுக் காக ஒண்ணரை ஏக்கர் புறம்போக்கு அலிநேஷன் ஆகிட்டதா?''

''இல்லே மேடம்! அங்கே பஸ் ஸ்டாண்டு கட்டணும்னு அந்த ஊர் பஞ்சாயத்துத் தலைவர் சொல்லி, அப்ஜெக்ஷன் பெடிஷன் போட் டிருக்காரு.''

''ஸ்கூலுக்குப் பக்கத்திலே பஸ் ஸ்டாண்டா?''

''வேணுமின்னே அந்த ஆள் பெடிஷன் போட்டிருக்காருங்க. அவரை ஸ்கூல் கமிட்டியிலே நாங்க சேர்க்கலே. பஸ் ஸ்டாண்டுக்கு இடம் ஒரு பர்லாங் தூரத்திலே பெரிய பொட்டல் இருக்கு துங்க. அதை அலாட் பண்ணிஞ சௌ கரியமா இருக்குமுங்க!''—வெங்கடேச னுடன் வந்தவர் விளக்கினுர்.

''ஐஸீ! நல்லது. நான் ஃபைலைப் பார்க்கிறேன். ஊருக்குள்ளே எந்தக் கலவரமும் இல்லாம காரியங்கள் நடக்கணும். ஸ்கூலுக்குப் பக்கத்திலே பிளே கிரவுண்ட் இருக்கணும்கிறது நியாயம்தான். அவர் எந்தக் காரணத் துக்காக இதை எதிர்க்கிருர்னு தெரிய ணும். பஞ்சாயத்துத் தலைவர் என்கிற முறையிலே அவர் சொல்றதிலே நியாயம் இருக்குதான்னு பார்க்க வேண்டாமா? போங்க. நான் நிலைமையை விசாரிக்க ஏற்பாடு பண்றேன்.''

''மேடம்! நீங்க மனசு வச்சா....''

''ஓகே! நான்தான் பார்க்கிறேன்னு சொல்லியிருக்கேனே!''

வெங்கடேசன் பெடிஷனைக் கொடுத்து விட்டுச் சொன்னுன்: ''அவர் அதிகார பூர்வமா இல்லாம அரசு நிலத்தை ஆக்கிரமிச்சிருக்காரு. இதையும் நீங்க விசாரிக்கணும்!''

''ஓகே! எபினேஸர், ப்ளீஸ் கிவ் மீ தி டீடெய்ல் ஆஃப் திஸ் கேஸ்!...''

இன்டர்வியூ முடிந்து விட்டது என்பது போல் அவள் பார்வையை வேறுபுறம் செலுத்தினுள்.

வெங்கடேசனும் அவனுடைய கட்சிக் காரரும் எழுந்து கொண்டனர். எபி னேஸர் வெளியே போனுர். வெங்கடே சனையே சிறிது நேரம் பார்த்தாள். அவன் வாயிற்படியண்டை போகும் தருணத் தில், ''ஜஸ்ட் எ மினிட், அட்வொகேட் ஸார்!'' என்ற குரல் கேட்டுத் திரும்பி னுன். அருகே வரும்படி சமிக்ஞை செய் தாள். அவன் அவளருகே சென்று வினக்குறியாகப் பார்த்தான்.

''ஏன் கார்த்தால டிபன் சாப்பிட வரல்லே!''

அவனுக்குக் குப்பென்று உஷ்ணம் பரவியதைப் போல இருந்தது.

''சாயந்திரம் வாங்க, பேசணும்.''

மௌனமாக இருந்தான்.

''ப்ளீஸ் டூ கம் பாஸிடிவ்லி.'' —புன்னகையுடன் சொன்னுள்.

சில விநாடி நேரம் அவனையே பார்த்து விட்டு அவன் புறப்பட்டான்.

அவள் பஸ்ஸரை அழுத்தியது தெரிந்தது.

(தொடரும்)


கண்ணைக்கவர்வது
மென்மையான இழையுடன்
கூடிய பரியா டெரின்*
புடவைகள்— எழில்மிகு
பூக்களின் டிசைன்—
ஒவ்வொருவரின் மனதையும்
கொள்ளைகொள்ளும்
வண்ணம்.
*டெரின்—CAFI—இன்
ரிஜிஸ்டர்டு ட்ரேடு மார்க்
தாவண்கெரே
.பாஷன் துணி ரகங்கள
பெங்களூர் 560 009.
ஹுப்ளி 580 020
தாவண்கெரே 577 002
தி தாவண்கெரே காட்டன்
மில்ஸ் லிமிடெட்
ஹனுமந்தப்பா கட்டிடம்,
துர்கா ரோடு,
தாவண்கெரே-577 002.
TA/DCM/C/1/TAM

# வேர்கள்

## கிருஷ்ணமணி

## 22

புல் தரையில் கூடை நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. ஸ்கூட்டரை விட்டிறங்கிய வெங்கடேசனை எழுந்து நின்று வரவேற்றாள் சியாமளி.

''குட் ஈவினிங் ஸார்!''

''ம்..!''

சில நிமிடங்களில் டீபாய் ஒன்றைக் கொண்டு வந்து போட்டான் பங்களா பியூன். செல்லையா இரண்டு தட்டுகளில் இனிப்புகளையும் வறுத்த முந்திரிப்பருப்பு களையும் கொண்டு வந்து வைத்தான். அழகாகத் துண்டம் போடப்பட்ட மாம்பழம் வந்தது.

வெங்கடேசனுக்கு ஒன்றும் புரிய வில்லை.

''உக்காருங்கோ, சாப்பிடலாம்!''

அவன் சந்தேகத்தோடு பார்த்தான். செல்லையா அவனருகே வந்து மெல்லிய குரலில் சொன்னான்: ''வக்கிலய்யா, நீங்க சாப்பிடுங்க. அம்மா காலையிலிருந்தே ஒண்ணும் சாப்பிடல்லே!''

அவர்களிருவரும் தனித்து விடப் பட்டனர்.

மௌனமாக அவன் அவளைப் பார்த் தான்.

''ஐ'ம் ஸாரி ஸார்! வேலைக்காரங் களுக்கெல்லாம்கூடத் தெரிஞ்சு போச்சு!''

அவன் மெதுவாகச் சாப்பிட ஆரம்பித் தான். செல்லையா மீண்டும் இரண்டு தம்ளர்களில் அன்னாசிப் பழரசம் கொண்டு வந்து வைத்தான். பேசாம லேயே இருவரும் சாப்பிட்டு முடித்தனர். பழரசத்தைப் பருகிவிட்டு அவன் தன் உதடுகளைத் துடைத்துக் கொண்டான்.

''ஏன் காலையிலிருந்தே நீ ஒண்ணும் சாப்பிடல்லே?''

''நீங்க ஏன் காலையிலே வரல்லே?''

''நீதான் கெட் அவுட்னு சொன் னியே.''

''சொன்னா.. தவறுதான். கோபத் திலே பேசிட்டேன்.''

''யார்கிட்டே பேசறோம்கிறதுகூட மறந்து போயிடுமோ?''

''அதையேதான் நானும் கேக்க ஆசைப்படறேன்.''

''நான் ஒண்ணும் அப்படியெல்லாம் பேசல்லே!''

''வேணும்! இப்ப எதுக்குப் போன கதையெல்லாம். நீங்க இல்லாம சாப்பிடப் பிடிக்கல்லே, சாப்பிடல்லே!''

''ஐஸீ..!''

''அதான் பார்த்திண்டிருக்கேளே!''

அவனையுமறியாமல் சிரித்து விட் டான்.

''நல்லவேளை! சிரிப்புக்குக்கூடப் பஞ்ச மோன்னு நினைச்சேன்.''

''என்னை எதுக்கு வரச் சொன்னே?''

''காரணம் தெரிஞ்சே ஆகணுமோ?''

''யெஸ்! எனக்கு வேலை இருக்கு!''

''அப்படீன்னா நீங்க தாராளமா போகலாம்.''

''யூ மீன் இட்!'' சொல்லிவிட்டு அவன் தயங்கினான்.

"பின்னே என்ன சொல்றது? நீங்க போகணும்னு முடிவு பண்ணின பிறகு நான் தடுத்து நிறுத்த முடியுமா?''

''ம்..''

''என்ன.. ம்.... புலியாட்டமா உறுமிண்டு..''— அவள் கண்களில் குறும்பு மிதந்தது.

காலையில் மிக அமைதியான கம்பீரத்தோடு காரியாலயத்தில் பொதுமக்களின் குறைகளைக் கேட்டு, கீழ் உத்தியோகஸ்தர்களுக்கு உத்தரவு போட்ட அவளா இவள்! மிக இயல்பான உரிமையுடன், எளிமையோடு, தன் தோழமைக்காக, அன்புக்காக, இனிய சொற்களுக்காக இங்கே இப்படி உட்கார்ந்திருக்கிறாள்.

''சியாமளி! ஐ'ம் ஸாரி.. எனக்காக நீ நாள் பூரா சாப்பிடாம இருந்தேங்கிறது..''

''நான் பேசினதுக்காகவும்தான். நான் கெட் அவுட்னு சொன்னா நீங்க போயிடறதா? 'முடியாது, இது என் வீடு'ன்னு உங்களுக்கு ஏன் சொல்லத் தோணலே? இன்னமும் நீங்க அந்நியப்பட்டுப் போய் தூரவே நிக்கறீங்க. அதனாலேதான் நான் சொன்னேன். பரஸ்பரம் நல்லாப் புரிஞ்சுக்கிட்ட பிறகு எங்கம்மா, அப்பாகிட்டே சொல்லுவோம்னு. புரியறதா?''

''நீ வேணும்னே பாயிண்டை டுவிஸ்ட் பண்றே!''

''நான் எதுவும் பண்ணலே. 'முதல்லே வித்யாதரன், இப்போ நான்' அப்படீன்னு சொன்னீங்களே, அதுக்கு என்ன அர்த்தம்? சில்லறை சுகானுபவங்களை அனுபவிக்கிறதுன்னு சொன்னீங்களே, அதென்ன அது? அதுக்கு அர்த்தம் வேற இருக்காப்பல இருக்கு. ஸாரி! என்னடா இவ இப்படிப் பேசறாளேன்னு நீங்க நினைச்சாலும் சரி. இன்னிக்குப் பேசித் தீர்த்திடலாம்னுதான் பார்க்கிறேன்! இதிலே வேற 'இனிமே நான் மிஸஸ் வெங்கடேசனாகத்தானிருக்க முடியும்'னு நான் சொன்னதைக் கேலி பண்ணீங்க இல்லே. ஏன் உங்களுக்கு அதிலே நம்பிக்கை இல்லையா? எனக்கிருக்கு. ஒரு நாள் இல்லே, சில நிமிஷ நேரங்கள் தான் உங்க உடம்போடு உடம்பா என்னை நீங்க ஒரு சேர அணைச்சிக்கிட்டீங்களே, அது பொய்யா? 'சியாமளி, ஐ லவ்யூ டார்லிங்'னு சொன்னீங்களே, அது போலியான வார்த்தையா? என் மேனி முழுமையும் உங்க உஷ்ண மூச்சோடு, உதட்டால ஸ்பரிசிச்சீங்களே, அது பொய்யா? இதிலே எது நிஜம், எது பொய்னு எனக்குத் தெரியலே. சில நிமிஷங்களிலே எழுச்சி பெற்று, சில நிமிஷங்களிலே அடங்கிப் போகிற மிருக வெறியா அது? இல்லே, மனசால சத்தியமா உணர்ந்து சொல்லப்பட்ட வார்த்தைகளா? சொல்லுங்க..!''

அவள் கண்கள் படபடத்தன. உதடுகள் துடித்தன. மெல்லிய குரலில்தான் பேசினாள் என்றாலும் வார்த்தைகள் தீர்க்கமாக வெளி வந்தன. அவள் பேசிய தோரணையில் நீதி கேட்டுப் புலம்பின கண்ணகியின் சாயல் அவனுக்குத் தெரிந்தது. மிக நுண்ணிய உணர்வுகளைத் தன் மனத்தின் கருவறைக்குள் பூட்டி வைத்து வெளியுலகம் அறியாதவாறு பாதுகாக்கக் கூடிய திடம் பொருந்தியவள் என்பது அவனுக்குப் புரிந்தது.

''உங்களை நான் இனிமே பேர் சொல்லிக் கூப்பிடப் போறதில்லே. நம்ம குடும்பங்களிலே அப்படிப் பழக்கமில்லே. அதனால்தான் காலையிலேகூட 'அட்வொகேட் ஸார்'னு ஆபீஸ்லே கூப்பிட்டேன். என் மனத்தில் உங்களுக்கு எத்தகைய இடம் இருக்குன்னு நான் சொல்லித்தான் நீங்க புரிஞ்சுக்கணும்னா, எனக்கு அது வேதனையா இருக்கு. ஏன் பேசாம இருக்கீங்க?''

''எனக்கு என்ன சொல்றதுன்னே புரியல்லே.''

அவள் எழுந்தாள்.



''எதிர் வீட்டிலிருந்து போன் பண்றாங்க.... நீ கஷ்டப்பட்டு தாலாட்டு பாட வேண்டாமாம்... குழந்தை அழுதா அவங்களுக்குப் பரவாயில்லையாம்!''

''வாங்க, உள்ளே போகலாம்!''

பேசாமல் அவன் அவளைத் தொடர்ந்தான். செல்லையா எதிர்ப்பட்டான்.

''செல்லையா! நானும் ஐயாவும் என் ரூமுக்குப் போறோம். இன்னிக்குக் கோயிலுக்கு நான் வரலே. நீயும், பாக்கியத்தம்மாவும் மட்டும் போயிட்டு வந்திடுங்க. சமையற்கார அம்மாவை அவங்க வீட்டுக்குப் போகச் சொல்லிடு.''

''சரிம்மா!''

''வரும்போது மாம்பழம் ரெண்டு கூடை வாங்கிட்டு வா. மெட்ராஸுக்கு ஒண்ணு எடுத்துப் போகணும்; இன்னொண்ணு ஐயாவோட வீட்டுக்கு, கிராமத்துக்குப் போய்ச் சேரணும்!''

''சரிம்மா...!''

மாடியில் இருந்த அவள் அறைக்குச் சென்றார்கள் இருவரும். அறை நவீன மோஸ்தரில் இருந்தது. படிக்கும் பகுதி, படுக்கையறை, குளிக்கும் அறை, டாய்லெட் எல்லாம் ஒருசேர, மிக நேர்த்தியாய்க் கட்டப்பட்டிருந்தது.

அவன் கேட்டான்:''எல்லாரையும் அனுப்பிச்சிட்டியே!''

''ஆர்டர்லி இருக்கார். பங்களா பியூன் இருக்கார். கீழே செல்லையா தாழ்ப்பாள் போட்டுண்டு போயிடுவான். ஏன்? நாம ரெண்டு பேரும் தனியா இருக்கோமேன்னு..'' அவள் சிரித்தாள்: ''கவலைப்படாதீங்க. செல்லையா தம்பதிக்கு என்னைப் பத்தி நல்லாவே தெரியும்.''

அவனுக்கு என்னவோ போலாகிவிட்டது.

''நான் முஸ்ஸௌரிக்கு டிரெயினிங் போனப்பகூட எங்கப்பா என்ன தெரியுமா சொல்லி அனுப்பினர்? 'சியாமளி, அப்படியே ஸ்ரீநகர், ஹரித்வார், பத்ரிநாத் எல்லாம் போக முடிஞ்சா போயிட்டு வா' அப்படின்னுதான் சொன்னர். வேற ஒண்ணும் சொல்லலே. பேஸிக்கா நம்பிக்கை வேணும்.''

''நீ வார்த்தையால சித்திரவதை பண்ணாதே சியாமளி!''

''இல்லே ஸார்! உங்களைச் சித்திரவதை பண்றதினால எனக்கென்ன லாபம்? என்மேல உங்களுக்குப் பரிபூரண நம்பிக்கை இருந்திருந்தா அந்த வார்த்தை சொல்லியிருப்பீங்களா? வித்யாதரனோட நான் ஒரே ஒரு நாள் சினிமா போயிட்டு வந்தது வாஸ்தவம்தான். அவரோட பங்களா தோட்டத்திலே தனியா பேசிட்டிருந்தப்போ என் கைகளை அவர் பிடிச்சுண்டு என்னென்னவோ பேசினர். அதனால நான் அவரோட தொடர்பு வச்சுக்கிட்டேன்னு அர்த்தமா?



என்னுடைய 'ஈகோ'வுக்கு ஒவ்வொருத் தரையா பலியாடாக்கிறேன்கிற மாதிரி சொன்னீங்களே, அது நியாயமா?''

''சியாமளி! இதுக்குத்தான் என்னே வரச் சொன்னியா?''

''உடம்பால, அதனேட உறவால ஏற்படற பந்தம் மட்டுமே ரெண்டு பேரை ரொம்ப நாளைக்கு ஒண்ணுப் பிணைக்காது. உள்ளத்தால, உணர்ச்சியால, புரிஞ்சிக்கிற தன்மையினுலதான் நெருங்கி வர முடியும். இதை நீங்க புரிஞ்சுக்கணும்கிறதுதான் என்னேட ஆசை.''

''நீ மரியாதைக் குறைவா பேசலாமோ?''

''ரெண்டு பேருக்கும் பொதுவானதுதான் மரியாதைங்கிறதும். பெண் என்கிறவளும் மனுஷ ஜென்மம்தான். அவளுக்கும் உணர்ச்சிகள் இருக்கு. உடம்போட அவஸ்தையைத் தீர்த்துக்கற











சாதனம் மட்டும் இல்லே அவ என்கிறதையும் புரிஞ்சுக்கணும்.''

''ரொம்பவும் அதிகப்படியா பேசறே சியாமளி!''

''இதோ பாருங்க! மனசில இருக்கிறதைக் கொட்டிடறது நல்லது. பல திருமணங்கள் முறிஞ்சி போறதுக்குக் காரணமே தம்பதிகள் ரெண்டு பேரும் தங்களுக்குள்ளே திரை போட்டுக்கிறது தான். நான் உங்ககிட்டே எதை எதிர்பார்க்கிறேன், நீங்க என்கிட்டே என்ன எதிர்பார்க்கிறீங்க அப்படிங்கறதைத் தெளிவா புரிஞ்சுக்கணும்கிறதுதான் என் விருப்பம்.''

''உனக்கு உன் உத்தியோகம் பெரிசுங்கிறுப்பல பேசினியே, அது சரியோ?''

''கரெக்ட்! ஏன், அது பெரிசுதான். பொறுப்பான ஒரு பதவியிலே இருக்கேன் நான். என்னுடைய முயற்சியினலை, உழைப்பால, படிப்பால அதை நான் அடைஞ்சிருக்கேன். என் வாழ்க்கையில் நான் நானுத்தான் இருக்க விரும்பறேன். என்னைத் துணைவியாக்கிக்கணும்னு நினைக்கிற உங்களுக்கு நான் ஒரு சுமையா இருக்க விரும்பல்லே!''

''நீ இப்படிப் பேசறதுதான் சரியில்லே. மனைவிங்கிறவ புருஷனுக்குச் சுமைன்னு சொன்னு அதிலே அர்த்தமே இல்லே!''

''நீங்க நான் சொன்னதைச் சரியான படி புரிஞ்சுக்கலேன்னு நினைக்கிறேன். கணவனுடைய வருவாய்லேதான் குடும்பம் நடக்கணும்கிற நிர்ப்பந்தம் வரும் போது மனைவி அவனுக்கு ஒரு சுமை தான். ஆனல் அந்தச் சுமையை ஏத்துக்கிறதிலே ஆணுக்கு ஒரு சந்தோஷம் இருக்கு, பெருமை இருக்கு. என்னைப் போல இருக்கிற பெண்களுக்குத் தங்களோட புருஷனின் சுமையைக் குறைக்கிறதிலே, குடும்ப பாரத்தைப் பங்கு போட்டுக்கறதிலே ஒரு சந்தோஷம் ஏற்படறது. இதைப் போய் அகங்காரம்னு சொன்னு என்னல ஒப்புக்க முடியலே! மாறிட்டு வர்ற சமுதாய அமைப்பிலே கணவன் மனைவி ரெண்டு பேருமே சம்பாதிக்கிறது தான் வாழ்க்கையோட்டத்துக்கு நல்லதுன்னு இருக்கிறப்போ அந்த உண்மையை ஏத்துக்க ஏன் தயங்கணும்?''

''எனக்கு வக்கீல் உத்தியோகம் பார்க்கணும்கிற கட்டாயம் இருக்கு. இருக்கிற நிலத்திலே விளைஞ்சா போச்சு, இல்லேன்னு கஷ்டம்தான். உன்பாடு

அப்படியில்லையே. உங்க மன்னி வேலைக்குப் போறாளா?''

அவள் மெல்ல சிரித்தாள். அவன் அருகே வந்தாள். மிக உன்னிப்பாக அவனையே பார்த்தாள். என்ன தோன்றியதோ, அவன் முகத்தைத் தன் இரு உள்ளங்கைகளிலும் ஏந்தினாள். மௌனமாக நின்றாள். அவள் விழிக்கடையில் கண்ணீர் முத்துக்கள் அரும்பின.

''சியாமளி! ஏன் அழறே? நான்.. நான்.. தப்பா எதுவும் கேட்கலியே!''

'இல்லை'யென்ற பாவனையில் தலை அசைத்தாள்.

''நீங்க ஒவ்வொரு தடவையும் உங்க கஷ்டத்தைச் சொல்லும்போதும் எம் மனசு எவ்வளவு வருத்தப்படறது தெரியுமா? நான் வெறும் எமோஷனலா இப்படிப் பேசல்லே. நீங்க மெட்ராஸ்ல இருந்து புறப்படற அன்னிக்குச் சொன்ன வார்த்தைகளை நான் மறக்கல்லே. அன்னிலேருந்து இது நிமிஷம் வரைக்கும் என் மனத்தில் உங்களைத் தவிர வேற யாருக்கும் இடம் தரலே. மன்னிக்கு வேலைக்குப் போக வேண்டிய கட்டாயமில்லே.''

''உனக்கு மட்டும் இருக்காப்ல பேசறியே?''

''யெஸ்! இருக்கு. நம்ம ரெண்டு பேருக்கும் வாழ்க்கைப் பிணைப்பு ஏற்பட்ட பிறகு என் புருஷன், என் அண்ணனுக்கோ, அல்லது என் உறவினர்களுக்கோ எந்த விதத்திலேயும் குறைஞ்சவரில்லேன்னு அவங்களுக்குத் தெரியணும். நம்ம குடும்ப கௌரவம்தான் எனக்குப் பெரிசா இருக்கும். எங்க அப்பா வீட்லேருந்து நான் எது கொண்டு வந்தாலும் அது.. ..போகட்டும். என் பங்கு ஆஸ்தி வரும் வரைக்கும், நான் எந்த ஒரு விஷயத்துக்கும் அவங்களைச் சார்ந்து இருக்கப் பிரியப்படலே. நான் பேதப்படுத்தல்லே. ஆனா என் கணவர் எப்படிப்பட்டவர்னு எனக்குத் தெரியும். அவருடைய மனத்திலே ஒரு சிறு குறையும் ஏற்படக்கூடாதுன்னு நினைக்கிறேன். அதுக்காகவாவது உங்களுக்குத் தொழில் ரீதியா வருமானம் போதுமான அளவுக்கு வர்ற வரையிலுமாவது நான் வேலை பார்க்கிறதுன்னு இருக்கேன்!''

''சியாமளீ!''— அவன் அவளை அப்படியே அணைத்துக் கொண்டான்.

அவள் மறுதளிக்கவில்லை. மாறாக, அவன் அகன்ற மார்பில் முகம் புதைத்தாள். சூடான அவள் கண்ணீர் அவன் மேனியைத் தொட்டது. சில விநாடி நேரம் அவள் உடம்பு குலுங்கியது.

''சியாமா! ப்ளீஸ்..ப்ளீஸ்..அழாதே சியாமா...நான் உன்னைப் புரிஞ்சிக்கிட்டேன். இங்கே பார்.''—அவள் மோவாயைத் தொட்டுத் தலையை நிமிர்த்தினான். அவனையுமறியாமல் அவன் மேனி சிலிர்த்தது.

தூய அன்பின் சின்னமாக, தன் மனத்தில் நாயகனை ஏற்றுக் கொண்டுவிட்டவனின் அன்புக்காக எதையுமே செய்யும் நல்லிதயம் பெற்ற ஓர் ஆன்மாவை அவன் தரிசித்தான். நிஷ்களங்கமான முகம், நிர்மலமான அவள் மனத்தைப் பிரதிபலிப்பது போல இருந்தது. குனிந்து அவள் முகத்தில் முத்தமிட்டான். அவனுடைய முழங்கால்களுக்கிடையே தன் முகத்தை இப்போது அவள் வைத்துக் கொண்டாள்.

''என் ஈகோ இதுதான். உங்க தாத்தா காலத்திலே குடும்பம் எப்படியிருந்ததுன்னு அப்பா ஒரு நாள் சொன்னார். ஆலமரத்தோட விழுது பூமியைத் தொடற வரைக்கும் அதுக்குத் தாய் மரத்தோட துணை தேவை. பூமியைத் தொட்டுட்டா விழுதே வேரூன்றி மரமாகிடும். பாரம்பரியமா, நல்ல பண்பாட்டிலே வந்த குடும்பம். செல்வ பலத்தினால சமுதாயத்துக்கு நல்லது செய்யணும்னு நினைச்சவங்களோட வாரிசு நீங்க. அப்படிப்பட்டவருடைய குழந்தைகளுக்குத்தான் தாயாக நான் விரும்பறேன். என்னைப் புரிஞ்சுக்கிட்டு எனக்கு அந்தப் பாத்யதையைக் கொடுப்பீங்களா? பணக்கார வீட்டுப் பெண், பதவியாசை பிடிச்சவள்னு ஒதுக்கிட்டுப் போயிடுவீங்களா?''- கண்களில் நீர் மல்க அவள் கேட்டாள்.

அவன் கண்களில் ஆனந்தம் பொங்கியது.

அவள் வலது உள்ளங்கையை எடுத்துத் தன் உள்ளங்கையுடன் பிணைத்துக் கொண்டான். அதன் பொருளை அவள் புரிந்து கொண்டு விட்டாள்.

''சியாமளி!..'' அவனால் வேறொன்றும் பேச முடியவில்லை.

அவன் மனக்கண்ணில் தாத்தா வெங்கடேஸ்வரன் புன்னகை பூத்த முகத்துடன் நின்று பார்ப்பது போல பிரமை தட்டியது.

மீண்டும் அவளை வாரியெடுத்து அணைத்துக் கொண்டான்.

(தொடரும்)



''ரூல்ஸ்படி குதுப்மினர் மேலே தனியா போகக் கூடாது சார்.. மூணு பேராத்தான் போகலாம்.. உங்களை மட்டும் ஸ்பெஷலா அனுமதிக்கறேன்!''





''அ
கை நீ

# குதுப்மி



''உன்மைம
பிரும்மாண்டமான
ஏரியல்.. தெரியுமே

''விளையாடாதி
எங்கே..?''

''பூமிக்கு அடி





''ஐயோ! கையை மறுபடியும் கீழே தொங்க விட முடியலையா..? சே!.. இப்படியா ஒருத்தர் 'ட்ரை' பண்ணுவாங்க?''

## துள்ளும் அவர்கள் ஆர்வத் திறமை



## உள்ளம் நிறையும் உங்கள் பெருமை!







கட்டுக் கடங்கா ஆர்வத் துடிப்பு, களி துள்ளும் மோகம்—அதிலே கண்டு கொள்ளுங்கள் மால்டோவா குழந்தைகளை—வாழ்விலே அவர்கள் தொட்டதெல்லாம் வெற்றி, உற்சாக வேட்டை!

இன்சுவை ததும்புவது மால்டோவா,—உடம்பைக் கட்டமைக்கும் புரத சத்துக்களும், உடல்நலத்தை உரமேற்றும் வைட்டமின்களும், உலோக தாதுக்களும் செறிந்துள்ளது—பருகும் உங்கள் குழந்தைகளுக்கு மட்டற்ற ஆர்வத் துடிப்பு, சிட்டுப்போல் சுறுசுறுப்பு!



வைட்டமின்கள் கூடிய

# மால்டோவா

ஆரோக்கியம், பலம் மற்றும் சக்திக்கு

JiL ஜகத்ஜீத் இன்டஸ்ட்ரீஸ் லிமிடெட்

ASP/JIL/7710-81 Tam.

8-1511

## 24

ஜன்னலின் வழியாக, கிழ்வானம் இளஞ்சிவப்பு வண்ணத்தைப் பூசிக் கொண்டிருந்தது தெரிந்தது. சியாமளி தன் உள்ளங்கைகளை ஒரு முறை ஒருசேரத் தேய்த்துவிட்டு அவற்றைப் பார்த்து மனத்தில் ஸ்மரித்தாள்.

'கராக்ரே வஸதே லக்ஷ்மி
கர மத்யே ஸரஸ்வதி
கர மூலேது கோவிந்த:
ப்ரபாதே கர தர்ஸனம்!'

உழைக்கும் கரங்களே கண்கண்ட தெய்வம்.

கரங்களின் துணையினால்தான் குகை மனிதன் இன்று சந்திர மண்டலத்துக் கற்களைப் பூமிக்குக் கொண்டு வந்திருக்கிறான். லக்ஷ்மியும் சரஸ்வதியும் கோவிந்தனும் உறைகின்ற கரங்களை, கதிரவன் உதிக்கு முன்னர் வைகறைப் பொழுதில் தரிசனம் செய்யும் தாத்பரியம் இதுதானே!

வால் நீண்ட குருவியொன்று பாடிக் கொண்டிருந்தது. மிக இனிமையான அதன் ஒலிக்கு எங்கோ தூரத்திலிருந்து மற்றொன்று பதில் கொடுத்துக் கொண்டிருந்தது. காற்று சில்லென்று உடலைத் தழுவிச் சென்றது.

முந்தைய நாளின் நிகழ்ச்சிகள் மீண்டும் மனத்தில் சில நிமிடங்கள் தோன்றின. அரிசிக் கடத்தல் விவகாரத்தில் முதன் மந்திரி மிகப் பெருந்தன்மையுடன் அவளைப் பாராட்டியதும், மற்ற ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் அவளை வியப்புடன் பார்த்ததும் நினைவிலோடின.

மறு நிமிடம் தன் மனத்துக்கினியவரை நினைத்துக் கொண்டாள்: அதிகாலை இந்நேரம் அவர் என்ன செய்து கொண்டிருப்பார்? தேகப் பயிற்சிகள் செய்யக் கூடும். அவளுக்கு வெங்கடேசனைப் பற்றி நினைத்தவுடனே மூன்று நாட்களாகத் தான் அவனைப் பார்க்கவில்லையென்ற நினைவு அலைக்கழித்தது. இன்று ஊருக்குப் போய்விட வேண்டும்.

படுக்கையில், விழித்துக் கொண்டே படுத்திருப்பதில் தனியானதொரு சுகம் இருக்கிறது. உடலில் ரத்த ஓட்டம் விழிப்புற்ற நிலையில், நித்திரை நிலையை விடச் சற்று விரைவாக ஏற்படுகிறது. அதற்குச் சற்று அவகாசம் கொடுத்தே எழுந்திருக்க வேண்டும். வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்திருப்பது சரியல்ல போல் தோன்றியது.

மீண்டும் அந்தக் குருவிகளின் நீண்ட சீழ்க்கை ஒலி.

அவள் எழுந்து கொண்டாள்.

கால் மணி நேரத்தில் அவள் தன தந்தையுடன் கடற்கரைக்கு உலவப் போகத் தயாராகி விட்டாள். 'சியாமளி! நாளை காலை என்னோட நீ பீச்சுக்கு வரணும்மா!' என்று அவர் முந்தைய இரவு சொன்னதை நினைத்துக் கொண்டாள். அப்பா எதற்காகத் தன்னை உலவும் பொழுது கூட வரச் சொல்கிறாரென்று அவளால் ஓரளவிற்கு யூகிக்க முடிந்தது.

அம்மா சூடான காபி கொண்டு வந்து கொடுத்தாள்.

''ஏண்டி, சியாமளி! அப்பாவோட நீயும் வெளியிலே போறியா?''

''ம்...''—தலையசைத்தாள்.

வெள்ளை அரை நிஜாரும், டென்னிஸ் பனியனும், வெள்ளை கேன்வாஸ் ஷூவும் போட்டுக் கொண்டு முத்துசாமி புறப்பட இருந்தார். ஐம்பத்தைந்து வயது என்று சொல்ல முடியாத தோற்றம். நியதியானதொரு வாழ்க்கையின் விளைவான

# வேர்கள்

நல்லாரோக்கியம் முத்துசாமியின் உருவத்தில் பொலிந்தது.

''என்னம்மா, புறப்படலாமா?''

''நான் ரெடிப்பா!''

''நீயும் வர்றியா?''—தம் மனைவியைக் கேட்டார்.

''இல்லே! நீங்க ரெண்டு பேரும் போயிட்டு வாங்கோ. வித்தியாதரன் இன்னிக்குப் புறப்படறுன். சீக்கிரமா வந்திடுங்கோ!''

முத்துசாமி தலையாட்டினர்.

சில நிமிடங்களில் கார் புறப்பட்டது.

கிழக்கே வெளுக்க ஆரம்பித்துவிட்டது. கிரீன்வேஸ் ரோடு, அண்ணாமலை புரம், சாந்தோம், காந்திஜி சிலை. கார், ரோடை அதன் தூரத்தை விழுங்குவது போலிருந்தது. ராணி மேரி கல்லூரியின் எதிரில் நிற்க வைத்தார்.

சேத்துப்பட்டிலிருந்து புறப்பட்டு அடையாறு சென்று அங்கிருந்து வருவானேன் என்று சியாமளிக்குப் புரியவில்லை. வழிநெடுக அவர் ஒன்றும் பேசவேயில்லை. காரில் ஊரைச் சுற்றிக் கொண்டு வந்ததால் நேரம் சற்றுக் கூடுதலாகவே ஆகிவிட்டது. அவளுடைய சந்தேகம் அவருக்குப் புரிந்தது. காரை விட்டிறங்கியதும் அவர் பேசத் தொடங்கினர்:

''என்னடாது அப்பா ஊரைச் சுத்திண்டு வராளேன்னு நினைக்கிறயோம்மா?''

''ம்....!''

''ரொம்ப நாளா எனக்கு இந்தப் பக்கத்துக்குக் காலையிலே வந்து பார்க்கணும்னு. நல்ல லொகாலிடி. அமைதியான இடம். சேத்துப்பட்டிலேயாவது எலெக்டிரிக் டிரெயின் சத்தம் இருக்கு. இங்கே எந்தத் தொந்தரவும் இல்லே. இந்த ஏரியால உனக்கொரு வீடு வாங்கலாமான்னு யோசனை பண்ணிண்டிருக்கேன். என்ன சொல்றே?''

அவள் திகைத்து விட்டாள். சமாளித்துக் கொண்டு கேட்டாள்:

''எனக்கெதுக்குப்பா வீடு?''

''மேரேஜ் பிரஸன்டேஷனு தரலாம்னுதான். ரெண்டு, ரெண்டரை லட்சம் கொடுத்தா நல்ல டீஸன்ட் பங்களா, குறைஞ்சது மூணு கிரவுண்ட் நிலத்தோட கிடைக்கும்னு கேள்விப் பட்டேன்.''

அப்பா விஷயத்திற்கு வருகிருர். ஆரம்பம் பிரஸன்டேஷனில்.

அவள் சிரித்தாள்.

''ஏம்மா சிரிக்கிறே? அதது ஆக வேண்டிய காலத்திலே ஆக வேண்டியதுதானே! இப்பவே தாமதமாயிட்டாப்ல தோண்றது. இனியும் தள்ளிப் போட நான் விரும்பல்லே!''

காலை நடைபயிலும் கனவான்கள், பெண்கள், அவர்கள் வீட்டுப் பல்வகை ஜாதி நாய்கள், காகங்களின் கூட்டம். ஓடும் இளைஞர்கள், வட நாட்டவர், தெலுங்கர், ஐரோப்பியர்—பல்வகை மனிதர்கள்.

காந்திஜி தூரப் போய்க் கொண்டிருந்தார்.

அப்பா வேகமாகத்தான் நடக்கிருர். உடலுக்கும் உள்ளத்திற்கும் தெம்பாக இருந்தது. கடலில் கட்டுமரங்கள் பாய் விரித்து மிதந்து... மிதந்து... கிழக்கே போய்க் கொண்டிருந்தன. சூரியன் மேலே எழும்பிக் கொண்டிருந்தான். இளம் வெயில் மேனியில் ஒரு இலேசான கதகதப்பையூட்டுவதாய் இருந்தது.

''என்ன, பதிலேயே காணோம்?''

''நான் சொல்றதுக்கு என்ன இருக்கு?''

''ரியலி!...''

அவள் அவரை இப்போது சட்டென்று பக்கவாட்டில் திரும்பிப் பார்த்தாள். அவர் முகத்தில் புன்னகை மிளிர்ந்தது.

தன் மனத்திலிருப்பதைத் தானே சொல்ல வேண்டுமென்று நினைக்கிருரோ! அம்மா நிச்சயம் சொல்லியிருப்பாள்.

''என்னம்மா?''

அவளுக்கு அப்பாவிடம் என்றுமே கூச்சம் அதிகம். அவருடன் அதிகம் பேச மாட்டாள். இப்பொழுது பேசியாக வேண்டிய நிர்ப்பந்தத்தை உருவாக்கியிருக்கிருர்.

''உங்க இஷ்டம்போல நடக்கட்டும்.''

''அப்படீன்னு உனக்குப் பூரண சம்மதமில்லேன்னு அர்த்தமா? இல்லே...''

கொக்கி போடுகிருர். சொல்லிவிட நா துடித்தது.

கிருஷ்ணமணி

அவர்களிருவரும் கண்ணகி சிலையைத் தாண்டி விட்டனர்.

பாரதியாரின் சிலை வந்ததும் அவர் சற்றே நின்றார். அவருக்குப் பாரதியின் பாடல்களில் மிகுந்த ஈடுபாடு உண்டென்பது அவளுக்குத் தெரியும்.

'நிமிர்ந்த நன்னடை
நேர்கொண்ட பார்வையும்,
நிலத்தில் யார்க்கும்
அஞ்சாத நெறிகளும்
திமிர்ந்த ஞானச்
செருக்கும் இருப்பதால்
செம்மை மாதர்
திறம்புவ தில்லையாம்.'



—வார்த்தைகளைப் பிரித்து ஒரு தடவை பாரதியின் பாடலைச் சொன்னார்.

அவளுக்கு, அவர் சங்கேதமாக எதை உணர்த்துகிறார் என்று புரிந்தது.

''வெல்! கேள்விப்பட்டேன்மா! உங்கம்மா சொன்னா. வெங்கடேசன்தான் உனக்கு ஏத்தவன்னு நீ நிச்சயம் பண்ணிண்டிருந்தா, நானோ உங்கம்மாவோ மறுத்துச் சொல்லப் போறதில்லே. ஆனா மனசிலே உணர்ச்சிகள் பெருகி ஓடறச்சே ஏற்படற தீர்மானங்கள், அந்த உணர்ச்சிகளின் வேகம் தணிஞ்ச பிறகு, அவசரத்திலே செய்யப்பட்டதா தோணலாம். பொருள் சம்பந்தப்பட்டதாயிருந்தா நஷ்டமோ, லாபமோ நம்மை அதிகம் பாதிக்கப் போறதில்லே. வாழ்க்கை சம்பந்தப்பட்டது. திருத்தவோ, மாத்தவோ முடியாதது.'' —சொல்லிவிட்டுச் சற்றே நிறுத்தினார்.

''நீ படிச்சவ. பொறுப்பான பதவியிலே இருக்கிறவ. நல்லதும், கெட்டதும் உனக்கே தெரியும். வெங்கடேசனைப் பொறுத்தவரைக்கும் படிப்பிலேயோ, குடும்பப் பின்னணியிலேயோ குற்றம் எதுவும் சொல்ல முடியாது. எகனாமிகலா அவன் இப்போ சுமாரான நிலையிலே தான் இருக்கான். நம்ம தகுதி, அந்தஸ்து இதுகளுக்குச் சமமா உள்ள இடமா பார்த்து...''

அவள் இப்போது இடைமறித்தாள்: ''தகுதி, அந்தஸ்து இதிலே அவருக்குக் குறை இருக்கிறதா எனக்குத் தோணல்லேப்பா. எகனாமிகலான்னு சொன்னீங்களே, அதுகூட என்னைப் பொறுத்தவரை பெரிசா தோணல்லே. எனக்கும் மாசம் பிறந்தா ஆயிரத்தைந்நூறு ரூபாய் கிடைக்கிறது. அவருக்கும் சுமாரா வருமானம் வர்றது.''

''ஓகே! நான் இல்லேன்னு சொல்லல்லேம்மா. இந்தக் காலத்திலே ஒரு கார் வச்சிக்கணும்னு சொன்னாக்கூட அதுக்குன்னு மாசம்



குறைஞ்ச பட்சம் தொளாயிரம் ரூபா வேணும். மேலும், உன்னோட ஸ்டேடஸை நீ காப்பாத்திக்கணும்னு ஆயிரத்தைந்நூறுங்கிறதே போருதும் பேன். இப்போ சரி. நாளைக்கே உங்களுக்கு வமிசம் வளர ஆரம்பிச்சா.... இன்னும் எத்தனையோ இருக்கு. ஆயுசு பூராவும் நீ வேலை பார்க்க முடியுமா? ஐ மீன் ஒரு பேச்சுக்குத்தான் கேட்டேன். ஏதோ படிச்சதுக்காக, பரீட்சை பாஸ் பண்ணினதுக்காக, ஆசைக்காகன்னு மிஞ்சி மிஞ்சிப் போனா ஒரு பத்து வருஷம் இல்லே, கொஞ்சங் கூட...பிகாஸ் நம்ம ஃபேமிலி வட்டத்துக்குள்ளே இதுவரையிலும் எந்தப் பொம்மனாட்டியும் வேலைக்குப் போகல்லே. அப்படியொரு அவசியமும் ஏற்பட்டதில்லே. நாலு விதத்திலேயும் பார்க்கும்போது எது சரின்னு படறதுங்கிறதைப் பார்க்கணும். மேலும் நீ வேலைக்குப் போய்த்தான் தீரணும்கிற கட்டாய நிலை வர்றப்போ, உன்னால சர்வ சுதந்திரமா இயங்க முடியுமான்னு நினைச்சுப் பாரு. உன் மன விருப்பத்துக்கு எதிரா இந்த விஷயத்திலே முடிவெடுக்கணும்கிற விபரீத ஆசை எனக்குக் கொஞ்சமும் கிடையாது. உன்னோட தகப்பனார்ங்கிற உரிமையிலே, உன்னுடைய நல்லதுலே என்னைத் தவிர அதிக அக்கறை வேறொருத்தருக்கு இருக்க முடியாதுங்கிற உண்மையோட பலத்தில நான் இதைச் சொல்றேன். இது என் உரிமை மட்டுமில்லே, கடமையும்கூட.''—முத்தாய்ப்பு வைத்தார்.

இப்பொழுது தான் பேசியே தீர வேண்டும். அப்பா தன் காதலின் தீவிரத்தைச் சோதிக்கிறாரா அல்லது மனத்திண்மையைச் சோதிக்கிறாரா என்று தெரியவில்லை. எதுவானால் என்ன, உண்மையைச்சொல்லிவிட வேண்டிய தருணமிது.

சேட்ஜி ஒருவர் சிமெண்ட் நாற்காலியொன்றில் உட்கார்ந்து கொண்டு பன்ரொட்டிகளைப் பையொன்றிலிருந்து எடுத்துப் பிய்த்துப் போட்டுக் கொண்டிருந்தார். ஒன்று, இரண்டு என்று ஐம்பது காகங்களுக்குமேல் அவரைச் சுற்றிக் கூடிவிட்டன. அவரும் சளைக்காமல் பிய்த்துப் போட்டுக் கொண்டேயிருந்தார்.

முத்துசாமி, உழைப்பாளர் சிலையருகே இருந்த கான்க்ரீட் நாற்காலியொன்றில் அமர்ந்து கொண்டார். சற்றுத் தொலைவிலிருந்த பல்கலைக் கழக மணிக்கூண்டுக் கடிகாரம் பன்னிரண்டு மணியிலேயே தூங்கிக் கொண்டிருந்தது.

''அப்பா!''

''ம்...!''

''பொருளாதாரம்தான் இப்ப பிரச்னைன்னு சொன்னால் அதைச் சமாளிக்க என்ன செய்யணும்னு திட்டமிட்டு என்னால நடந்துக்க முடியும். நானே பலவிதங்களிலும் யோசனை பண்ணிட்டு, எமோஷனலா இல்லாம சிந்தனையோட்டத்தின் முடிவாத்தான் இதைப் பற்றித் தீர்மானிச்சேன். அவர் குணம், பழகற விதம், வாழ்க்கையை எப்படி நடத்திச் செல்லணும்னு வச்சிண்டிருக்கிறமுறை, தொழில் மேல அவருக்குள்ள சிரத்தை இதெல்லாத்தையும் நல்லா தெரிஞ்சுண்டுதான் நான் இந்த முடிவுக்கு வந்தேன். மேலும், எம் மனசுக்கு அவரைத்தான் பிடிச்சிருக்கு. முஸ்ஸௌரியிலே வாழ்க்கை வசதி நிரம்பிய எத்தனையோ பேரைப் பார்த்தேன். பழகற வாய்ப்பும் ஏற்பட்டது. சுய சம்பாத்தியமா அந்த ஸ்டேடஸ் அவாளுக்கு வரல்லே. பெரியவாளோட ஒளியைப் பிரதிபலிக்கிறா. வானத்திலே மிதக்கிற சந்திரனுக்குச் சுய ஒளி கிடையாது. ஆனா வீட்லே இருக்கிற கை விளக்கு இருட்டிலே வழிகாட்டும்னு சொன்னா அது உண்மையில்லேன்னு மறுக்க முடியுமா? தன் உழைப்பை, ஆதாரமா கொண்டு வாழ விரும்பற அவரை, இந்தத் தனித்தன்மை வாய்ந்த பண்புதான் நான் விரும்பும்படியா செஞ்சிருக்கு. ஐ லவ் ஹிம்!''

''தன் காலிலே நிற்கிற ஒருத்தனை நீ நேசிக்கிறேன்கிறே, புரியறது. ஆனா உன்னோட வாழ்க்கை எப்பவுமே நீ உழைத்துத்தான் பிழைக்கணும்கிற நிலையிலே இருந்திட்டா என்ன பண்ணுவே?''

''உத்தியோகம் பார்ப்பேன். நான் ஆசைக்காக உத்தியோகம் பார்க்கல்லே. அவசியத்துக்காகப் பார்க்கிறேன்னு இருந்திட்டுப் போகட்டுமே. பிறத்தியாரை அண்டி இருக்கிறது எனக்குப் பிடிக்காத ஒரு விஷயம். நான் என்னை அந்நியப்படுத்திண்டு பேசல்லே. கண்கூடா இருக்கிற வாழ்க்கையின் போக்கை உணர்ந்து பேசறேன்.''

''வெரிகுட்! ஸோ, எமோஷனலா தீர்மானிக்கப்பட்ட விஷயமில்லே இது. நம்ம சொஸைட்டியிலே உத்தியோகம் பார்க்கிற முதல் பெண் நீயாத்தான் இருப்பேன்னு நினைக்கிறேன்.

மத்தியதரக் குடும்பத்துப் பெண்களைப் போல உனக்கு அது அவசியமா போயிட்டதுன்னுகூடச் சொல்லலாம், இல்லையா?''

அவர் வேண்டுமென்றே தன்னைச் சீண்டிப் பார்ப்பதுபோல் தோன்றியது அவளுக்கு. சிறு வயது முதலே தான் தனக்கென ஒரு வாழ்க்கை முறையை அமைத்துக் கொள்ள வேண்டுமென்று விரும்பியவள் அவள். எதற்கெடுத்தாலும் திருமணம் ஆன பிறகு கணவனைச் சார்ந்திருக்க வேண்டிய நிலையை அவளால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. எனவே உத்தியோகம் பார்ப்பதில், உழைத்து வாழ்க்கை நடத்துவதில் எந்தவிதமான கேவலமும் இல்லையென்பது அவளுடைய சித்தாந்தமாக இருந்தது.

''அப்படியிருக்கிறதினால எந்தவிதமான இழுக்கும் இல்லைன்னு நான் நினைக்கிறேன்பா. பெரிய பணக்காரர் ஒருத்தரோட மனைவி என்று சொல்லிக் கொள்றதிலே பெருமையடைய நான் நினைக்கல்லே. என் படிப்பு, உழைப்பு, திறமை இதனால எனக்குக் கிடைக்கிற மதிப்பை, கௌரவத்தை நான் வரவேற்கிறேன்.''

முத்துசாமி தன் மகளைப் பார்த்தார். தன் தாயின் உருவச் சாயல் அவளிடம் இருப்பது போல் உணர்ந்தார். அவருடைய தாய் வேலைக்கு என்று போக வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. செல்வம் மிகுந்த குடும்பத்தில் பிறந்த அவள், சாதாரண நிலையிலிருந்த சட்டம் பயின்று தொழிலில் முன்னுக்கு வரத் துடித்த சிவராமன் என்ற இளைஞனை மிக விரும்பி, பெற்றோர் சம்மதத்துடன் மணந்தாள். பாட்டியைப் போலவே பேத்தியும் இருக்கிறாள்.

உருவ அமைப்பில் பரம்பரையாக வரும் ஒற்றுமை போலவே குணநலன்களும் அமையுமோ? மனோதத்துவ ரீதியாக இதனை அறிந்துகொள்ள வேண்டும்.

''சரிம்மா! நல்லா புரியறது. இன்னொரு சிறிய சந்தேகம். வெங்கடேசனுக்குச் சொல்லிக்கும்படியா இருக்கிறது படிப்பு ஒண்ணுதான்.''

''அப்பா, இதையே வெவ்வேறு விதமா மாத்தி நீங்க சொல்லிண்டிருக்கேள். ஒரு மனுஷனுடைய நிஜமான ஆஸ்தி எது தெரியுமா? அவனுடைய செயலாற்றும் திறமைதான்னு நான் நினைக்கிறேன். வித்தியாதரனை எடுத்துப்போம். தான் வசதியுள்ளவன்கிற எண்ணம்தான் வேலையை



''நமக்கு கல்யாணமாகிப் பத்து வருஷம் ஆச்சு... எனக்கு என்ன பெரிசா கொடுத்திட்டிங்க....?''

''என்ன அப்படிக் கேட்டுட்டே... வெறும் பங்கஜமா இருந்த உன் பேருக்குப் பக்கத்துலே சீனிவாச சந்தான ராஜகோபாலன்னு என்னோட பெரிய பேரைக் கொடுத்திருக்கேனே.....!''



விட்டுட்டு வரச் செய்தது அவரை. தன் தகப்பனார் பேரிலே குறை கண்டுபிடிக்கிற அவருக்கு, தகப்பனருடைய கடும் உழைப்பும் செயலாற்றும் திறனும்தான் இன்னிக்குத் தான் சௌகரியமா இருக்க வழி செஞ்சிருக்குன்னு ஏன் தெரியமாட்டேங்கிறது? வாழ்க்கையை வாழத் தெரியணும்ப்பா. எந்த நிலையிலும் அதை எதிர்கொண்டு ஏற்று நடத்திச் செல்லத் தெரியணும். இந்த வாலிடி மங்களபுரத்துக்காரருக்கு இருக்கு.''

முத்துசாமி சிரித்தார்: ''ஓகே! சியாமளி நீ ஜெயிச்சிட்டே. வாழ்க்கைங்கிறது சக்கரம்னு சொல்றது சரிதான்னு நினைக்கிறேன். நீ சுபாவத்திலே உங்க பாட்டியைக் கொண்டிருக்கே. அதே குணம். அதே மாதிரி கல்யாணமும் பண்ணிக்கணும்கிறே. பாட்டி லவ் மேரேஜ் தான் பண்ணிண்டா. உங்க தாத்தா சொல்வார்: 'லைஃப்லே நான் இவ்வளவு சக்ஸஸ்ஃபுல் பெர்ஸனா வந்ததுக்குக் காரணம் என் படிப்பு, உழைப்பு மட்டுமில்லே; என் மனைவியும் ஒரு முக்கிய காரணம்பார். எதிலேயும் சராசரியான ஒரு நிலையைப் பாட்டி ஏத்துண்டதே கிடையாது. உசந்ததுதான் நம்ம லட்சியமா இருக்கணும்னு சொல்லுவா. ஸோ தட் இஸ் இட். இந்தக் குடும்பம்கிற விருட்சத்தோட வேர் அப்படித்தான் இருக்கு. ஆல் தி பெஸ்ட்! புறப்படலாமா?''

தந்தையும் மகளும் மீண்டும் நடக்கத் துவங்கினர்.

(தொடரும்)



''எப்பஸ்வீட் பண்ணுலும் புதுசா வாங்கின ஸ்பூனேயெல்லாம் யூஸ் பண்ணக்கூடாது... அதனுலே, உள்ளே போய் பழைய ஸ்பூன் ஒண்ணு கொண்டு வா, பார்க்கலாம்...!''



''அட...! என்ன சார் இது..? தி. நகருக்குப் போகணும்னு நான் டிக்கெட் கிழிச்சுத் தரேன்... நீங்க எதுக்கு டிக்கெட்டைபிடிச்சு இழுக்கறீங்க...?''

''நீங்க எச்சில் பண்ணிக் குடுக்கறீங்களே....!''

26

சியாமளி தோட்டத்தில் உலவிக் கொண்டிருந்தாள். ஸ்கூட்டரின் ஒலி கேட்டதும் செல்லையா வெளியே வந்தான். அவசர அவசரமாக இரண்டு பிரம்பு கூடை நாற்காலிகளைக் கொண்டு வந்து போட்டான்.

செல்லையாவுக்கு முத்துசாமி தனியாகக் கடிதம் போட்டிருந்தார். அவனுக்கு எழுத்துக் கூட்டிப் படிக்கத் தெரியும். வக்கீல் ஐயா்தான் அவனுக்குக் கற்றுக் கொடுத்தவர். தன்னுடைய கண் போலக் காத்து வந்த சியாமளிக்குக் கல்யாணம் பேச தான் வரப் போவதையும், மங்களபுரத்து வக்கீல் வெங்கடேசன் தான் மாப்பிள்ளையென்றும் அவனுக்கும் தெரிவித்திருந்தார். அந்த லெட்டரில் வேறு ஒரு நிபந்தனையும் போட்டிருந்தார் முத்துசாமி. அதை அவன் சியாமளியிடம் சொல்லியிருந்தான்.

வெங்கடேசன் முகம் மலர சியாமளியை நோக்கி வந்தான்.

''குட் ஈவினிங் மேடம்!''

''குட் ஈவினிங் ஸார்!''

இருவருமே சிரித்தனர்.

அவள் முகம் சற்று வாடியிருந்தது.

''கோபமா சியாமளி? நீ என்னிக்கு வரப் போறேன்னு தெரிஞ்சும் என்னால வர முடியலே. கொஞ்சம் பிஸியா இருந்தேன். போன காரியம்லாம் சக்ஸஸ் தானே?''

''ம்.. இப்பவாவது நினைவு வந்ததே. இனிமே இப்படித்தான்!''

''ஏய்.. நீ மட்டும் என்னவாம்!''

அவள் அவனை உட்காரச் சொன்னாள். உள்ளே போனாள். சிறிது நேரத்தில் சாத்துக்குடி ஜூஸுடன் திரும்பி வந்தாள்.

அதைப் பருகியவாறே அவன் கேட்டான்: 'நான் உங்க அப்பாவைச் சந்திக்க எப்ப மெட்ராஸ் போறதுன்னு யோசனை பண்ணிண்டிருக்கேன். என்ன சொல்றே?''

''அதுக்கு அவசியமில்லை..''

அவனுக்குத் திக்கென்றது. ஒருவேளை..

சில நிமிட நேரம் அவள் பேசவேயில்லை.

''ஏன் சம்மதிக்கலியா?''

''சந்தேகம்தான் வக்கீல் ஸாருக்கு உடனே..''

''குறும்புக்காரி!'' மெல்ல அவளைக் கிள்ளினான்.

''நோ ஸார்! இதுக்கெல்லாம் இனிமே அனுமதி கிடையாது!''

''ஏன்? யார் தடுக்க முடியும்?''

''உடனே உரிமைக் குரலா?''

# வேர்கள்

கிருஷ்ணமணி



சயமா! சியாமளி, அப்பாவும், அம்மாவும் என்ன சொன்னாங்க?''

''ம்.. செல்லையா..!''

''அம்மா..'' குரல் கொடுத்துக் கொண்டே அவன் வந்தான்.

''ஐயாவுக்கு விஷயத்தைச் சொல்லிடு. செல்லையாதான் எனக்கு காட்ஃபாதர். சின்னக் குழந்தையிலிருந்து எடுத்து வளர்த்த உரிமையுள்ள ஆத்மா!''

செல்லையா மகிழ்ந்து போனான்.

''மாப்பிள்ளே ஐயா! பெரிய ஐயாவும் அம்மாவும் வர்ற வெள்ளிக்கிழமை இங்கே வராங்க, கல்யாணம் பேசி நிச்சய தாம்பூலம் மாத்திக்க. ரொம்ப சந்தோஷங்க,



எங்க குளந்தையைக் கண்ணுக்குக் கண்ணு வளர்த்திருக்கோம். உங்களுக்குச் சொல்ல வேணுமுங்க. ஜாக்கிரதையா, கண் கலங்காம பார்த்துக்குவீங்க. ஆமாங்க! இதிலே இன்னொண்ணுங்க. நிச்சயதா[illegible] மாத்திக்கிறதினுல், எங்[illegible] வளக்கப்படி, அதாவது எங்க ஐ[illegible] எளுதியிருக்கிறதைச் சொல்றேன். பொண்ணும், பிள்ளையும் இப்படிப் பளகக் கூடாதுன்னு அபிப்பிராயமுங்க. கல்யாணத்துக்குப் பொறவு நாங்க யாருங்க தடுக்கறதுக்கு? அதுக்கு முன்னே ஒரு சம்பிர தா[illegible]மா..'' சொல்லிவிட்டு சிறிது தயங்கிய பின் அவன் போனுன்.

சியாமளியின் கண்களில் குறும்பு மிதந்தது.

''ஏய்! என்ன இதெல்லாம் பத்தாம் பசலித் தனம்?''

''ஸாரி ஸார்! ஒவ்வொருத்தருக்கு ஒரு சென்ட்டிமெண்ட் இருக்கும். என்னதான் படிச்சிருந்தாலும் இந்த மாதிரி விஷயங்களிலே, நாம விட்டுக் கொடுத்துத்தான் தீரணும். எங்கப்பாவோட மனசுப்படிதான் நான் நடக்கறது நல்லதுன்னு தோணுது!'' கண்களில் குறும்பு மிதக்க அவள் இதைச் சொன்னுள்.

''உன் ரூமுக்குப் போகலாம் வா!''

''மாட்டேன்! நீங்க சும்மாயிருக்கமாட்டீங்க!''

''பிராமிஸ்!''

அவள் சிரித்தாள். இருவரும் எழுந்து போனுர்கள்.

அவளுடைய அறைக்கதவு திறந்தே இருந்தது.

''மேரேஜ் எப்ப வச்சுக்கப் போருங்களாம்?''

''அநேகமா மூணு மாசமாகலாம்!''

''மை குட்னெஸ்! அப்ப மூணு மாசம் நாம சந்திக்கக் கூடாதா?''

''யெஸ்!''

''என்னுல முடியாதும்மா!''

''முடிஞ்சாகணுமே!''

''உன்னுல இருக்க முடியுமா? சொல்லு.. இதென்ன அசட்டுத்தனமான கண்டிஷன்?''

அவள் பதில் சொல்லவில்லை.

''என்ன?''

''எங்கப்பாவோட சென்ட்டிமெண்டை நான் மதிக்கிறேன்.''

''அப்படீன்னு உன்னுல வைராக்கியமா இருக்க முடியும்னு சொல்லிக் காட்டறே!''

''ப்ளீஸ்! என்னைப் புரிஞ்சுக்குங்க. எனக்கும் கஷ்டமாத்தான் இருக்கும். எந்தத் தடங்கலுமில்லாம கல்யாணம் நடக்கணும்னு நீங்க இதுக்குச் சம்மதிக்கணும்!''

''ஹே ராமச்சந்திரா!''

அவள் சிரித்துக் கொண்டே அவன் தோள் மீது சாய்ந்தாள்.



''என்னதான் லாட்டரியிலே 55 லட்சம் விழுந்துட்டுதுன்னுலும் அதுக்காக இவ்வளவு பணத்திமிர் கூடாது அவளுக்கு...!''

''ஏன், என்ன பண்ணினு?''

''குழந்தை அழுததுன்னு தாலாட்டு பாட எஸ். ஜானகிக்கு போன் பண்ணுரு!''

—எம். பூங்கோதை

அப்படியே அவளை மிக அன்புடனும் ஆசையுடனும் அவன் அணைத்துக் கொண்டான். இருவரும் தம்மை மறந்த நிலையில் சில கணங்கள் இருந்தனர்.

அவளுக்குத்தான் நினைவு வந்தாற் போல் விலகிக் கொண்டாள்.

''புறப்படுங்க. திஸ் ஈஸ் தி லிமிட்.''

ஒருகணம் அவளையே பார்த்தான். மறுகணம் தன் வலுவான கரத்தினுல் அவளை இழுத்து ஒரு சேர அணைத்து அவள் அதரங்களை ஸ்பரிசித்தான். சில விநாடி நேரங்கள்தான்.

''நான் வரேன் சியாமளி!''

அவள் மௌனமாக, இன்ப நினைவுகள் மோத, தலையசைத்தாள்.

நிச்சயதாம்பூல வைபவம் மிக எளிமையாக, ஆனுல் நிறைவாக நடந்து முடிந்து விட்டது.

மணியக்காரர் சுப்ரமணியத்தின் மனைவியும், அவரும் முத்துசாமி தம்பதியினரை வரவேற்றனர். கிராமத்துப் பெரிய மனிதர்கள் கூடியிருந்தனர். பேங்கர் சீனுவும் வந்திருந்தார். முத்துசாமி அந்தக் கிராமத்தில் வெங்கடேசனுடைய குடும்பத்தினருக்கு எத்தகைய மரியாதை இருந்தது என்பதைப் புரிந்து கொண்டார்.

தங்களுடைய ஒரே மகளின் புக்ககம் பண்பாட்டில் மிகச் சிறந்த குடும்பமென்பதை அவர்கள் உணர வெகு நேரமாகவில்லை. மேற்கத்திய முறைப் படிப்பு, சுயநலத்தையும், தான் என்ற செருக்கையும் பல குடும்பங்களில் உருவாக்கி விடுகிறது. மாருக போலித்தனமில்லாத, ஆடம்பரமில்லாத, பரம்பரை பரம்பரையாகக் கல்விமான்களாகவும் திறமைசாலிகளாகவும், பரோபகாரிகளாகவும் விளங்கியது அந்தக் குடும்பம்.

சுந்தரிப்பாட்டி சொன்னுள்: ''முத்துசாமி! எங்ககிட்டே வரதட்சணை வாங்கற பழக்கம் கிடையாது. உங்க பொண்ணுக்கு என்ன செய்யணும்னு நீங்க நினைக்கிறீங்களோ அதைச் செய்யுங்கோ. அவளுக்கு ஜீவியபரியந்தம், எங்க பொண்ணு போல, எதெது செய்யணுமோ அதை நாங்க செய்வோம். எங்க சக்திக்குட்பட்ட வாழ்க்கையைத்தான் நாங்க நடத்த முடியும். ஊர் மெச்சிக்கணும்னு சக்தியை மீறிச் செலவு பண்ண மாட்டோம்!''



அமிதாப்: இந்த மாதிரி, 'செட்'லே இடைவேளை நேரத்துலேல்லாம் சுஹாசினி தூங்கிடுவாளா...?

வாணி ஜெயராம்: ஊஹூம்! ஷூட்டிங் நடந்துகிட்டிருக்கும்போது கூட இப்படித்தான்!

கற்பனை: பாகி

★ ★ ★

முத்துசாமி வாயடைத்துப் போனார். ''எங்க திருப்திக்காக நாங்க தர்ற பணத்தை நீங்க வாங்கிக்கணும்!'' என்றார்.

''இந்த வீட்டு வழக்கப்படி ஒண்ணு செய்யுங்கோ. காஞ்சிபுரம் வேத பாடசாலைக்கு, திருச்சினாப்பள்ளிகிட்டே இருக்கே திருப்பராய்த்துறை மிஷன் பள்ளிக்கூடம் அதுக்கு, வடலூர் ராமலிங்கசுவாமிகள் சபைக்குன்னு தனித் தனியா ஐநூறு ரூபாய் அனுப்பிடுங்கோ. அதுதான் வரதட்சணை. பெரியவர், லோக சஞ்சாரி, பரமஞானி — அவா சொல்லியிருக்கா, 'கன்னிகையைத் தானமாகத்தான் கொள்ளணும்'னு.. என்னவோப்பா முத்துசாமி! எனக்குத் தெரிஞ்சது அவ்வளவுதான். அவரை ஃபாலோ பண்றோம்னு சொல்லிட்டு, நமக்குன்னு வர்றப்போ மாத்திப் பேசற வழக்கம் இங்கே கிடையாது'' என்று தீர்க்கமாகச் சொன்னாள் பாட்டி.

முத்துசாமியால் பதில் சொல்ல முடியவில்லை.

''சரி பாட்டி! அப்படியே செஞ்சுடறேன்!'' என்றார்.

அன்று விருந்தும் நன்றாக இருந்த
முத்துசாமியின் மனைவிக்கு ம
நிறைந்திருந்தது.

பாட்டியை நமஸ்
யினர் விடை பெற்

திருமண நாள்
நாட்கள் கழித்துக்

பிரிவு என்பது
வேதனையைத் தரு
சேர்ந்து வாழப்
எண்ணம் மனத்தி
இடைக் காலத்தி
தாங்க முடியாததா

வெங்கடேசன்
களுடன் சியாமளி
போனான். ஆனால் அவ
மாகச் செல்லையாவின்
சந்திப்பைத் தவிர்த்து விட்
நாகரிகமான பெண்ணான அ
ஜீவியாக இருக்கும் அவள்,
நடந்து கொண்டது அவனுக்கு வ
வும், எரிச்சலாகவும் கூட இருந்த

நாள்தோறும் திருமண நன்
அவன் ஆவலுடன் எதிர்பார்த்தா



''ஆபீஸ்லே கூட காக்காய்களுக்கு முதல்லே சாதம் போட்டுட் தான் மானேஜர் சாப்பிடுவார்!''

★ ★ ★

தொழில் இப்போது முன்னைவிட சுறுசுறுப்பாக இருந்தது. குமாஸ்தா ஒருவரை நியமனம்செய்து கொண்டான். தீவிரமாகத் தொழிலில் ஈடுபட்டுவிட்டு, மாலை நேரம் வரும்போது, குறிப்பாக ஐந்தரையிலிருந்து ஏழரை மணி வரையிலும் சியாமளியைச் சந்திக்காமலிருக்க அவனால் மிகுந்த பிரயாசையுடன்தான் முடிந்தது.

அன்பின் இறுக்கமும், உள்ளங்களின் பிணைப்பும் கூட தாற்காலிகப் பிரிவுகளினால் வலுவடைகிறதென்ற ...மையை அவன் புரிந்து கொண் ...ப் போன்றே சியாமளியும் ...டும். ஆனாலும் வைராக் ... அவனைச் சந்திப்பதைத் ... பேரில் அவனுக் ...யர்த்தியது.

...டிலிருந்த அந்தப் ...ளிகையில் வெங்க ...நமணம் கோலாகல ...டிருந்தது.

... கிராமத்திலிருந்து ...ரெனத் திருமணத் ... நகரின் பல்துறைப் ... அறிஞர்களும், தொழி ... திருமண விழா கண் ...ட்சியாக இருந்தது.

...ண சியாமளியின் கழுத்தில் ...ன்று முடிச்சுகள் போட்ட ... வெங்கடேசனின் விழிக்கடை ... பனித்தது. தனக்காக, எத்தகைய ...ங்களையும் செய்யத் தயாராக ...க்கும் பொன்னிதயம் கொண்ட ஒரு ...ங்கை நல்லாள் தனக்கு வாழ்க்கைத் துணைவியாக அமையப் பெற்றதில் அளவில்லா ஆனந்தம் அடைந்தான். எல்லோரும் நல்வாழ்த்துக் கூறினர்.

வித்தியாதரன் தன் அன்னையுடன் வந்திருந்தான்.

''கங்கிராட்ஸ் வெங்கட்! கொள்கைப் பிடிப்போட வாழறவன் வாழ்க்கையிலே எத்தகைய வெற்றியையும் பெற முடியும் கிறத்துக்கு நீங்க ஒரு உதாரணம். ஆல் தி பெஸ்ட்!'' என்றான்.

இளந்தம்பதியினர் தேடிப் போய் சுந்தரிப்பாட்டியின் பாதங்களிலும், மரகதம்மாளின் பாதங்களிலும் நமஸ்கரித்தனர். முத்துசாமியும் உடன் சென்றார். சுந்தரிப்பாட்டி சொன்னாள்:

''தாம்பத்யம்கிறதுதான் மனுஷ வாழ்க்கையிலே, அதைப் புரிஞ்சிக்க சரியான வழி. ஒருத்தரை ஒருத்தர் அனுசரிச்சிண்டு போகணும். ரெண்டு கண்லே எது ஒசத்தி? இதை ஞாபகம் வச்சிக்கோங்க. உடம்பிலே தெம்பு இருக்கிறவரைக்கும், சுயமா சம்பாதிக்கணும். பணம்தான் வாழ்க்கை இல்லே. ஆனா அது இல்லாமலும் வாழ்க்கையை நடத்த முடியாது. தர்மமா, நம்ம திறமையால நல்லா சம்பாதிக்கணும். முடிஞ்ச அளவுக்கு மத்தவாளுக்கு உபகாரம் பண்ணணும். நம்ம வம்சத்தோட வேர் இந்த தர்மத்தைத்தான் அடி மண்ணா கௌவிப் பிடிச்சிண்டிருக்கு. குழந்தைகள் சௌக்யமா இருங்கோ. பகவான் அனுக்ரஹம் உண்டாகட்டும்!'' பாட்டி தன் விழிக்கடையில் துளிர்த்த ஆனந்தக் கண்ணீரைப் புடவைத் தலைப்பால் துடைத்துக் கொண்டாள்.

அங்கே பரிபூரண சாந்தியும், சந்தோஷமும் நிலவின.

**முற்றும்.**